எவ்வகை உணவாயினும்
அதனை முழுமையாக்குவது
டி. எஸ். ஆர். ஊறுகாய்களே!

# புதிய
# கிடாரங்காய்
ஊறுகாய்






# டி.எஸ்.ஆர்

டி. எஸ். ஆர். & கோ
"கோகுல் கார்டன்ஸ்"
கும்பகோணம்

CRITERION

மங்கையர் மலர்

ஏப்ரல் 1981





**ஒரு குயிலின் கதை** 52

— லதா மங்கேஷ்கர்

**மாறுதல்** 33

(முழு நாவல்) — அசோகமித்திரன்



சந்தா விவரம்

தனிப்பிரதி ரூ. 1-50
ஆண்டுச் சந்தா ரூ. 18/-
ஆறு மாத சந்தா ரூ. 9/-

Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032 (Phone: 431543) Editor: K. Kasturi Rangan



# கல்யாணமே பண்ணிப் பார்!

'கல்யாணமே வைபோகமே' என்பார்கள். திருமணம் என்பது மிகவும் சந்தோஷமான விஷயம். வாழ்க்கையின் மறக்க முடியாத நிகழ்ச்சி. சந்தோஷம் காரணமாக எப்படி மறக்க முடியாத நிகழ்ச்சியோ, அது போலவே பல பிரச்னைகளுக்கும் காரணமாகவும் அமைந்து விடுகிறது. சில திருமண அனுபவங்கள் இங்கு பேசப்படுகின்றன.

'திருமணம் என்பது ஆயிரம் காலத்துப் பயிர்' என்று கருத்தில் கொண்டு செய்யாமல் ஒரு கௌரவப் பிரச்னையாகக் கொண்டால் என்னவாகும்? திருமதி பங்கஜம் தங்கராஜன் கூறுகிறார்:

எங்கள் குடும்பம் பரம்பரையாக நல்ல நிலையில் பிறர் மதிக்கும் வண்ணம் அன்று முதல் இன்றுவரை இருந்து வருகிறது. சில விஷயங்களில் எனக்கும் என் உறவினர்களுக்கும் நிறையக் கருத்து வேறுபாடுகள், சண்டை சச்சரவுகள், ஏன் பொறாமைகளும் உண்டு. என் முதல் பெண் ராதாவுக்கு வரன் தேடிக் கொண்டிருந்த நேரம். அதே சமயம் எனது மைத்துனர் பெண்ணுக்கும் வரன் பார்த்துக் கொண்டிருந்தனர்.

அவர்கள் அடுத்த வீட்டிலேயே இருந்தமையால் நான் என்ன ஏற்பாடு செய்கிறேன் என்பது அவர்களுக்கும் அவர்கள் செய்வது எனக்கும் தெரிய வந்துவிடும். இரு குடும்பங்களுக்கிடையே பேச்சு வார்த்தை கிடையாது. இந்தச் சூழ்நிலையில் மைத்துனர் பெண்ணுக்கு வரன் கிடைத்துத் திருமணத்துக்கு நாளும் குறித்தாகி விட்டது. பிறகு கேட்க வேண்டுமா? ஒரே மகிழ்ச்சிதான்! அதே சமயம் என் பெண்ணுக்கு வரன் கிடைக்காமல் நீட்டித்துக் கொண்டு போவது அவர்களுக்கு மிகவும் ஏளனமாகி விட்டது.

இதனைச் சாக்கிட்டு என் குடும்பத்தை அவர்கள் இழித்துக் கூறும்போது அறுவடையை ஒன்றுக்குப் பாதியாக விற்று, கணவரின் ஆபீஸில் 'லோன்' வாங்கச் செய்து தரகர்களைப் பிடித்து மைத்துனர் வீட்டு மாப்பிள்ளையை விட எல்லா வகையிலும் ஒரு படி அதிகமாகவே பொருத்தம் பார்த்து —'செலக்ட்' செய்து வரன் பிடிக்க நான் பட்ட பாடு சொல்லி முடியாது.

அதனால் ஏற்பட்ட விளைவு?

மாப்பிள்ளைக்கு ஐந்தாயிரம் ரூபாய் வரதட்சிணையும், பெண்ணுக்கு வைரத்தோடும் போட வேண்டும் என்ற நிபந்தனையில் முடிந்தது. நானும் சளைக்கவில்லை. கணவரின் 'லோன்' பணம் இருக்கிறதே என்று துணிந்து ஒப்புக் கொண்டேன். பக்கத்து வீட்டுக்காரர் ஏற்பாடு செய்திருந்த அதே மேள, சமையல் மற்றும் பந்தல்காரர்கள்!

ஆனால் போட்டிக்காகச் செய்த திருமணமாகையால் ஒன்றுக்கு இரண்டாகச் செலவழித்ததில் வைரத் தோடு வாங்கினால் வரதட்சிணைப் பணத்துக்கும் வரதட்சிணைப் பணம் கொடுத்தால் வைரத்திற்கும் பணம் தட்டுப்பாடு ஏற்பட்டது. பணப் பிரச்னையாக அமைந்து விட்டதால் ஒன்றுமே புரியவில்லை. உணவில்லை, உறக்கமில்லை. ஆரம்பத்திலிருந்தே என் ஏற்பாடுகளைப் பிடிக்காத என் கணவரின் தொண தொணப்பு– ஆத்திரமூட்டும் வார்த்தைகள் எல்லாவற்றையும் தாங்கிக்கொள்ள இயலாமல் தற்கொலை செய்துகொள்ளலாம் போல் இருந்தது.

இறுதியாக வரதட்சிணைப் பணத்தைக் கொடுத்துவிட்டு வைரத்தோட்டுக்குப் பதிலாக என் வைரத் தோட்டைக் கழற்றிப் போட்டு விடுவது. பிறகு புதிதாக வாங்கிக் கொடுத்துவிட்டு அதனைத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம் என்ற யோசனையைக் கூறினேன். அனைவரும் ஒப்புக்கொண்டனர். திருமணம் நடந்தேறியது. அதே பந்தலில் சொன்ன நிபந்தனையை மூன்று மாதங்களுக்குள் நிறைவேற்ற வேண்டும் என்று கூறிவிட்டார் ராதாவின் கண்டிப்புக்கார மாமனார். திருமணம் நடந்தால் போதுமென்று ஒப்புக்கொண்ட எனக்குப் பின்னால் பூதம் கிளம்பும் என்று நினைக்கத் தோன்றவில்லை. நிறையப் பணம் செலவழிந்து விட்டதால் எனக்கு மூன்று மாதங்களுக்குள் வைரத்தோடு செய்ய முடியவில்லை. அதனால் குடும்பத்தின் செலவுக்கு வழியில்லாமல் போய்விட்டது. பிள்ளை வீட்டார் கெடுபிடி நாளுக்கு நாள் அதிகரித்து வார்த்தைகள் நீண்டு கடைசியில் ராதா என் வீட்டுக்கு வருவதை முழுமையாகத் தடை செய்து விட்டார்கள்.

நான் மீண்டும் மைத்துனர் வீட்டார் வாய்க்கு நல்ல 'அவல்' ஆனேன். எப்படி எப்படியோ செலவுகளைக் குறைத்து வயிற்றைக் கட்டி மீண்டும் அந்தத் தோட்டினை அவர்களுக்குக் கொடுத்து இன்று மீண்டும் என் மகள் வீட்டுக்கு வர வழி செய்தேன். என்று



லும் இதனால் முன்பு ஏற்பட்ட விரிசலில் சம்பந்தி வீட்டாரிடம் ஒரு மதிப்பே இல்லாமல் போய்விட்டதை இன்று நான் உணர்கிறேன்.

எனது முழுக் கவனமும் முதல் திருமணத்தில் ஏற்பட்ட செலவின் ஈடுகட்டலில் திரும்பியதால் மற்ற குழந்தைகளின் திருமணத்தில் சரிவர ஈடுபாடு இல்லாமல் சலித்துப் போயிற்று. விளைவு?

எனது இரண்டாவது மகன் முதல் மகனை முந்திக்கொண்டு ஒரு முஸ்லீம் பெண்ணை மணந்து கொண்டான். இதற்கெல்லாம் அவர்கள் காரணமல்ல – நம் பிரச்னைகளுக்கு நாமேதான் காரணம்.

டாக்டரிடமும், வக்கீலிடமும் பொய் சொல்லக் கூடாது என்பது போல, திருமணத்திலும் பொய் சொல்லக் கூடாதுதான். ஆனால் 'ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணம் பண்ணிவை' என்பார்கள். ஆனால் அது எந்த அளவுக்கு உண்மை?

பிறக்கும்போதே ஊமைகளாக அடுத்தடுத்து இரண்டு குழந்தைகள். அதுவும் பெண் குழந்தைகள் மூன்றாவதாகப் பிறந்த பையனுக்கு மட்டும் பேச வரும் திக்கித் திணறி. அவர்கள் குழந்தைகளாக இருக்கும் வரை பிரச்னை இல்லை. திருமண வயதை எட்டும் போதுதான் அது பிரச்னையாக மாறிற்று. முதல் பெண்ணுக்கு உறவிலேயே ஒருவர் முன்வந்து திருமணம் செய்து கொண்டார். ஆனாலும் நாளடைவில் சீர் மற்றும் பணம் இது அது என்று குறை கூறி வாழ்க்கையில் விரிசல் கண்டு விவாகரத்து வரை வந்து பின் எதுவுமில்லாமல் நிலைமை சரியாயிற்று. இந்த அனுபவம் காரணமாக அடுத்த பெண் திருமண முயற்சியே இன்றுவரை இல்லாது போயிற்று.

மூன்றாவது மகனுக்குத் திருமணம் செய்ய முயன்றபோது இவர்கள் தன் பெண்களுக்கு உள்ள குறைபாட்டை பெண் வீட்டாரிடம் சொல்லாது மறைத்து விட்டனர். பிள்ளைக்கும் சரியாகப் பேச வராது என்ற விவரமும் தெரிவிக்கப்படவில்லை. தாலி கட்டும் நேரம் மண மேடைக்கு வராமல் இந்த நிலைமைகளை விமரிசிக்கத் தொடங்கிவிட்டாள் மணமகள். பெண் வீட்டில் எல்லோரும் சண்டைக்கு வந்துவிட்டார்கள்.

நிலைமையை எப்படிச் சமாளிப்பதென்று தவித்துப் போனார்கள் மணமகன் குடும்பத்தினர். பிறகு எப்படியோ சமாதானம் கூறிப் பெண்ணின் வாழ்க்கை நலத்துக்கு எல்லாம் உறுதியளித்துத் தாலி கட்டச் செய்தனர், முகூர்த்த நேரம் தவறியபின்.

மாமியார் வீட்டுக்கு வந்த பின்னும் அதே சர்ச்சை தொடங்கிற்று. எப்படியும் சமாளிக்க இயலாமல் தாங்கள் மறைத்துவிட்ட தவறுகளுக்கு வருந்தும்படி ஆயிற்று. பெண், வாய் வராத கணவனால் தன் வம்சமே ஊமைகளாகப் பிறந்துவிடக் கூடும் என்று வழக்காடினாள். அவள் வாதம் வென்றது. அவன் மணம் முடித்த ஒரே நாளில் இந்த முடிவும் ஏற்பட்டதற்கு வேதனைப்பட்டு வருந்தி, இன்றுவரை தேவதாசாக இருக்கிறான். அந்தப் பெண் வேறு மணம் செய்து கொண்டு விட்டாள்.

தொகுப்பு: சவீதா

## இல்லத்தரசிகளின் கவனத்துக்கு...

மங்கையர் மலரில் வெளியாகும் சமையல் குறிப்புகளுக்கு உங்களிடையேயிருந்து வரும் கடிதங்களும், பாராட்டுக்களும் ஏராளம்! அதற்காக நன்றி.

சென்ற இதழில் ஒரு சிறு தவறு நடந்து விட்டது. இரண்டாம் பரிசுபெற்ற சமையல் குறிப்பு ஏற்கனவே ஒரு புத்தகத்தில் வெளியானது. அதைத் தெரிவித்து உடனடியாக ஏராளமான கடிதங்கள் வந்துவிட்டன. மங்கையர் மலரின் வாசகிகளை யாரும் ஏமாற்ற முடியாது.

அடுத்த இதழிலிருந்து 23ம் பக்கம் பிரசுரிக்கப் பட்டுள்ள கூப்பனை இணைத்து வரும் சமையல் குறிப்புகள் மட்டுமே ஏற்றுக் கொள்ளப்படும். அதில் குறிப்பிட்டுள்ள பொருளால் செய்யப்படும் சமையல் குறிப்புகள் மட்டும் எழுதியனுப்பினால் போதும்.

# மங்கல மதிமுகத்தில் மெருகூட்ட

## ஐடெக்ஸ்

### டீலக்ஸ் குங்குமம்

Matt Finish

நாகரீக மங்கையர்
சூடி அணிவது ஐடெக்ஸ் குங்குமம்.
மங்கையரின் மலர்முகத்தின் இளமழகை
எடுத்துக் காட்டுவதற்கென்றே
14 கண்கவர் வண்ணங்களில் கிடைக்கிறது.
சாஸ்திரிய முறைப்படி தயாரிக்கப்படும்
ஐடெக்ஸ் குங்குமம் சருமத்திற்கு எவ்வித
தீங்கும் விளைவிக்காதது.



அரவிந்த் லாபரட்டரீஸ் · சென்னை 600033

Imageads-AL-1304 Tam




அடையாறு மாதர் சங்கம்,
சென்னை - 20

**கேள்வி:**

கடவுளின் முன் அனைவரும் சமம்; நீதியின் முன் அனைவரும் சமம் என்றெல்லாம் சொல்லப்படுகிறது. ஆனால் நடைமுறைவாழ்க்கையில் ஆண்களுக்குச் சமமாக பெண்கள் வாழ முடிவதில்லையே. சில வேலைகளில் ஆண்கள் மட்டுமே இருக்கிறார்கள். உதாரணமாக, கோயிலில் பூசாரிகளாக ஆண்களே இருந்து வருகிறார்கள். இதற்குப் பெண்கள் இருக்கக் கூடாதா? அது போலவே சில கோயில்களுக்குப் பெண்கள் வரக்கூடாது என்றெல்லாம் சொல்கிறார்கள். சட்டம் இதைப் பற்றி என்ன சொல்கிறது?

**பதில்:**

சட்டத்தின் முன் அனைவரும் சமம் என்பது உண்மைதான். ஆனால் சட்டம் ஓர் இரும்புப் பாசறையாக இல்லாமல் ஒவ்வொரு குடிமகனின் பழக்க வழக்கத்தையும், ஒவ்வொரு சமூகத்தின் கலாசாரத்தையும், ஒவ்வொரு மதத்தின் பண்பாட்டையும் மதிக்கிறது.

நீங்கள் சொன்ன கோயில் அர்ச்சகர்கள் எனும் உதாரணத்தை எடுத்து கொள்வோம். நம் நாட்டைப் பொறுத்த வரை கோயில் என்பது சமூகத்தின் கலாசார கேந்திரமாக மக்களின் பண்பாட்டின் பிரதிபலிப்பாக விளங்கி வருகிறது. ஒவ்வொரு ஆலயத்துக்கும் ஒவ்வொரு நடைமுறை வழக்கம் இருக்கிறது. ஏன், கோயில் அர்ச்சகர் என்பவரே ஒரே சமூகத்தைச் சேர்ந்தவராகக் கூட இருப்பதில்லையே. பல்வேறு சமூகத்தினர் பல்வேறு கோயில்களில் ஆண்டவனை ஆராதனை செய்வது வழக்கமாக உள்ளது. இதன் உரிமைகளில் சட்டம் தலையிடுவதில்லை.

அதே போன்றுதான் பெண்கள் கூடாதா என்ற பிரச்னைக்கும் பதில் அமையும். இவர்கள் அர்ச்சகர்களாக இருக்கக் கூடாது என்று எந்தச் சட்டமும் வரையறுக்கவில்லை. ஆனால் நடைமுறையில் பெண்கள் இப்பணியில் இல்லை. ஆனால் சில கோவில்களில் பெண்கள் அர்ச்சகர்களாக இருக்கிறார்கள். அதுவும் அக்கோயிலின் பழக்க வழக்கத்துக்கு உட்பட்டுத்தான் இருக்கிறது.

முன் காலத்தில் ஆண்டவனுக்காகத் தங்களையே அர்ப்பணித்து தேவனுக்கு அடியான் என்றும், தேவனுக்குத் தாசி என்றும் கன்னியாகவே காலம் கழித்து இறைப் பணியில் தங்களை மறந்திருந்த பெண்களையும் கோயில்கள் அனுமதிக்கத்தான் செய்தது.

பூங்கோதை சீனிவாசன், சத்துவாச்சாரி

**கேள்வி:**

எனக்கு 65 வயதாகிறது. என் கணவரும் நானும் கிராமத்தில் தனியாக வாழ்ந்து வருகிறோம். எங்கள் பிள்ளைகள் எல்லோரும் நல்ல வேலை தேடிக் கொண்டு சென்னையிலும், வெளி நாட்டிலும் குடியேறி விட்டார்கள்.

எங்களுக்கு இருக்கும் பிரச்னை எங்களுடைய சொத்துதான். இந்தக் காலத்தில் சொத்துள்ள வயதான ஆட்களின் கதி பற்றி நாளுக்கு நாள் செய்தித் தாள்களில் படிக்கிறோம். சொத்தின் மேலேயே கண்ணாக இருப்பவர்கள் வயதானவர்களைத் தீர்ப்பது வெகு எளிது.

நாங்கள் அமைதியான பயமில்லாத வாழ்க்கை வாழ விரும்புகிறோம். உயில் எழுதலாம் என்றால், அந்த உயில் நாங்கள் இறந்த பிறகே செல்லும். உயிரோடு இருக்கும் போது வெற்றுக் காகிதமாகத்தான் இருக்கும் என்கிறார்கள். நாங்கள் என்ன செய்யட்டும்?

**வழக்கறிஞர் டி.ஆர்.ரமேஷ்**

**பதில்:**

நீங்கள் சொல்வது உண்மைதான். பணம் இருப்பவர்கள் இக்காலத்தில் பயமில்லாமல் இருக்க முடிவதில்லை. உயில் எழுதினாலும் அவர்களின் காலத்துக்குப் பிறகு தான் அது செல்லுபடியாகும்.

'செட்டில்மெண்ட்' பத்திரம் என்று ஒன்று இருக்கிறது. உங்கள் சொத்துக்களை நீங்கள் எப்படிப் பிரித்துக் கொடுக்க வேண்டும் என்று விரும்புகிறீர்களோ அந்த முறைப்படி இந்த செட்டில்மெண்ட் பத்திரம் எழுதிவிட்டீர்களானல் பிறகு உங்களைத் தொந்தரவு விட்டது. ஆனல் இதற்குப் பிறகு உங்களுக்கு அந்தச் சொத்தில் எந்த உரிமையும் இருக்காது.

அதாவது உயிலுக்கும் செட்டில்மெண்ட் பத்திரத்துக்கும் என்ன வேறுபாடு என்ருல் உயில், எழுதியவர் இறந்த பிறகே செல்லுபடியாகும். செட்டில்மெண்ட் பத்திரம் உடனடியாகச் செல்லுபடியாகிறது.

எனவே நீங்கள் உங்கள் வாழ்க்கைப் பயணத்துக்கு எவ்வளவு தேவை என்று நினைக்கிறீர்களோ அவ்வளவை உங்களிடம் வைத்துக்கொண்டு மீதியை செட்டில்மெண்ட் பத்திரம் மூலம் மற்றவர்களுக்கு அளித்துவிட்டு நிம்மதியாக உங்கள் காலத்தைக் கழிக்கலாம்.

மைதிலி கல்யாணராமன், மேற்கு மாம்பலம்

**கேள்வி:**

நாங்கள் ஐந்து வருடங்களாக ஒரு வீட்டில் வாடகைதாரர்களாக இருந்து வருகிரேம். என்னுடைய குழந்தைகள் அருகில் உள்ள பள்ளிக்கூடத்தில் படித்து வருகிருர்கள். எங்களுடைய குடும்பம் செட்டில் ஆகி விட்டதால் என்னல் இங்கிருந்து வேறு இடம் போக முடியாத நிலையில் இருக்கிறேன். நான் வாடகையும் தவருமல் செலுத்தி வருகிறேன்.

ஆனல் இதுபோன்ற நிலையில் எங்கள் வீட்டின் சொந்தக்காரர் வீட்டைக் காலி செய்து தரும்படி வற்புறுத்துகிருர். நல்ல வீடு பார்த்துக் கொண்டு காலி செய்து விடுகிரேம் என்று கூறியும் கேட்கவில்லை. எங்களுக்கு வரவேண்டிய மின் சப்ளையைத் துண்டித்து விட்டார். குழாய்த் தண்ணீர் பிடிக்க விடுவதில்லை. எல்லாவற்றுக்கும் ஒரு குற்றம் குறை கண்டு பிடித்துச் சண்டை போடும் அவருடன் எப்படிக் காலம் கழிப்பது என்றே தெரியவில்லை. இப்படி எல்லா வகையிலும் எங்களுக்குத் தொந்தரவு தரும் அவரிடமிருந்து நாங்கள் மீள சட்ட ரீதியாக ஒரு வழி சொல்லுங்களேன்.

**பதில்:**

வீட்டின் சொந்தக்காரர் என்பதற்காக வாடகைதாரர்களைத் துன்புறுத்துவதற்குச் சட்டம் ஒருபோதும் அனுமதிக்காது. மின் சப்ளையைத் துண்டிப்பது, குழாய்த் தண்ணீர் விடாமை இவையெல்லாம் சட்டப்படி குற்றங்களே.

'ரெண்ட் கண்ட்ரோல் கோர்ட்' என்று ஒன்று உள்ளது. அங்கு ஐந்து ரூபாய் பணம் கட்டி 'ரெண்ட் கண்ட்ரோல் பெட்டிஷன்' ஒன்றைப் போட்டீர்களானல், அவர்கள் விசாரிப்பார்கள். மின் சப்ளையைத் துண்டித்தது உண்மையாக இருந்தால் உடனடியாக அதற்குத் தகுந்த நடவடிக்கையை எடுப்பார்கள். உங்கள் வீட்டு உரிமையாளரை மின் துண்டிப்பை மீட்டுத் தரும்படி இக்கோர்ட் உத்தரவு இடும். உங்களுக்கும் நிவாரணம் கிடைக்கும்.

## அட்டைப்பட மங்கை

வண்ண அட்டை முகப்புப் படமாகக் காண்பது முகமெல்லாம் மகிழ்ச்சி பொங்க, திருமண வாழ்வில் அடியெடுத்து வைத்திருக்கும் இளமங்கையின் படம். இம்மங்கை புனைந்திருப்பது ஐயங்கார் திருமண உடையை. தன் அன்னை அளித்த சீர் வரிசை, விளையாடல் சாமான்கள் புடை சூழ அமர்ந்திருக்கிருர்.

நம் நாட்டில் திருமணத்தை வாழ்வின் மறக்க முடியாத நிகழ்ச்சியாகக் கொண்டாடுகிருர்கள். ஒவ்வொரு மதத்திற்கு ஒரு சடங்கு இருக்கும்; ஒவ்வொரு வகுப்பாருக்கும் ஒவ்வொரு வழக்கம் இருக்கும். இவ்வாறு இருக்கும் சிறப்பான வழக்கங்களை, தங்கள் வகுப்பிற்கே உரிய சடங்குகளைப் புகைப்படத்துடன் எழுதியனுப்புங்களேன்.

வண்ணப்படம்: - ஹரலிங்கம்



# எப்போதும் பெண்!

சுஜாதா

The cleverage of society along the line of sex is impossible. Here lies the basic trait of woman. She is the other in a totality of which the two components are necessary to one another.
-Simon de Beanvoir

[இந்தத் தொடரை நீங்கள் எளிதில் வகைப் படுத்த முடியாது. இதை ஒரு விதத்தில் பார்த்தால் கட்டுரை போல் இருக்கும். அதே சமயம் ஒரு கதையும் தென்படும்) கொஞ்சம் பிலாஸபி தெரியும். கொஞ்சம் கவிதை கூடத் தப்பித் தவறி வரும். இதை எப்படி வேண்டுமானாலும் அழைத்துக் கொள்ளுங்கள் படியுங்கள். இதன் விஷயம் மிகவும் எனக்குப் பிடித்தமானது. பொய் இல்லாமல், பாவனைகள் இல்லாமல் எழுதி யிருக்கிறேன். பெண் என்கிற தீராத அதிசயத்தின்பால் எனக்குள்ள அன்பும் ஆச்சரியமும், ஏன்! பக்தியும்தான் என்னை இதை எழுதச் செலுத்தும் சக்திகள். பாசாங்கு வெறுப்பு, குறும்பு எதுவும் இல்லாமல் எழுதியிருக்கிறேன். இந்தத் தொடரின் ஒவ்வொரு அத்தியாயமும் வெளிவரும்போது சிலர் என்மேல் ஆத்திரப்படலாம், கோபப்படலாம். அவர்கள் யாவரையும் தொடர் முடியும்வரை தயவு செய்து பொறுமையாக இருக்கும்படி வேண்டிக் கொள்கிறேன். முடிந்த பின் அந்தக் கோபங்கள் விலகி விடும் என்கிற நம்பிக்கை. —சுஜாதா]



அவள் எப்போது பெண் என்று நிர்ணயிக்கப்பட்டாள்?

சொல்வது கஷ்டம். சிருஷ்டியின் அல்லது பரிமாண தத்துவத்தின் மிக மிகதற்செயலாக ஸ்டாடிஸ்டிக் விதிகளின்படி நிர்ணயிக்கப் பட்ட சங்கதி அது. அவள் பெண் என்று நிர்மானமாகும் அந்தக் கணம் வரை அது யாருக்கும் தெரியாது.

ஒரு நாள் இரவு கரண்டு நின்றுபோனதால் அப்பாவும் அம்மாவும் மொட்டை மாடிக்குப் போய்ப் படுத்துக் கொண்டிருந்தார்கள். குழந்தைகள் பாட்டியுடன் கீழே படுத்திருந்தன. அப்பாவும் அம்மாவும் இப்போது எல்லாம் சேர்ந்தே படுத்துக் கொள்வதில்லை. அப்பாவுக்கு நாற்பத்து ஐந்து வயது. அம்மாவுக்கு முப்பத்து ஏழு. இருபது வருஷ மண வாழ்க்கைக்கு அப்புறம் அவர்கள் இயல்பாக ஒருவரை யொருவர் சரீரத் தேவையின்றி விலகிக் கொண்டார்கள். மூன்று குழந்தைகளும், பாட்டி கூட இருப்பதும், வீட்டின் குறுக்களவும் உபரிக் காரணங்கள். இதனால் அம்மா அப்பாவுக்கு அலுத்து விட்டாள் என்றில்லை.

அன்று ராத்திரி பவர் கட்டினால் மாடியில் படுத்துத் தூங்கிப் போய் விட்டார்கள். நடு ராத்திரி. சற்று தூரத்தில் ஓடிய குட்ஸ் வண்டியின் ஓசை கேட்டு அப்பா திடுக்கிட்டு விழித்தெழுந்தவர் எழுந்து கீழே போய் பானையைச் சரித்துத் தண்ணீர் குடித்து விட்டுத் திரும்பி வந்து படுத்துக் கொண்டார். ஒரு முறை அம்மாவைப் பார்த்தார். மல்லாக்கப் படுத்திருந்தாள். குடும்ப அவஸ்தைகளை மீறின அனாயாசமான அலட்சியமான அந்தச் சயனம் அப்பாவுக்கு சற்றுக் கிரக்கமாக இருந்தது. அவள் மேல் கையை வைத்துக் கொண்டு படுத்தார். அதற்கு மேல் அவருக்கு எந்த உத்தேசமும் இருக்கவில்லை. சற்று நேரம் அப்படியே படுத்திருந்தார். தூக்கம் வரவில்லை. திரும்பிப் படுத்துக் கொண்டு 'கிட்ட வா' என்று எழுப்பினார். அவள் அரைத் தூக்கத்தில் திரும்பிப் படுத்துக்கொள்ள அப்பா அம்மாவை அணைத்துக் கொண்டு இன்னும் கொஞ்சம் அணைத்துக் கொண்டு அன்னியோன்ய விதிகளை மீறினார்.

''வேண்டாம். எனக்குப் பயமாகஇருக்கு''

''ஒண்ணும் ஆகாது வா.''

''எனக்கு நாள் கணக்குத் தெரியல்லன்னு வேண்டாம்.''

''கணக்குத் தப்பு.''

''தூக்கம் வரது.''

''நீ பாட்டுக்குத் தூங்கு.''

''விடுங்கோ.''

''நான் பார்த்துக்கறேன்.''

அம்மா அசதியில் இருந்தாள். தனக்கு நிகழ்ந்ததில் பாதிதான் அவளுக்குத் தெரிந்

தது. கொஞ்ச நேரத்தில் தூங்கிப் போய் விட்டார்கள்.

அம்மாவின் உள்ளுக்குள் இந்த முற்றுப் புள்ளி அளவுக்கு ஒரு சின்னச் சஞ்சல முட்டை காத்திருந்தது. அதன் அளவு சரியாகச் சொல்லப் போனால் 0.132 மில்லி மீட்டர். அந்தப் புள்ளியை நோக்கி அப்பா விடுவித்த லட்சக் கணக்கான குட்டி யாத்திரிகர்கள் அந்தப் புராதன உள்ளிருட்டில் குருட்டு யாத்திரிகர்களாக நெளிந்து நெளிந்து சென்றனர்.

அதில் ஒரு யாத்திரிகனைக் கவனிப்போம். குட்டி என்றால் படு குட்டி. ஒரு மில்லி மீட்டரில் நாலின் கீழ் நூறு பாகம் அதன் நீளம். சின்னத் தட்டையான முட்டை வடிவத் தலை. கயிறு போல் வால். தலைக்குள் க்ரோமோஸோம்கள். அதற்கும் உயிர் இருக்கிறது. அதற்கு ஒரு குறிக்கோள் ஞாபகம் இருக்கிறது. அது தேடுவது. அதற்கு அந்த ஆச்சரிய நீச்சலை யார் சொல்லிக் கொடுத்தார்கள்? முட்டை சமர்த்தாக நகராமல், எதிர்காலக் கருவாகக் காத்திருக்க நம் யாத்ரிகன் அதை அடைய ஆசைப்பட்டு நெளிந்து நெளிந்து நீந்துகிறான். அவனுடன் அதை அடையப் போட்டியாக இன்னும் எத்தனை பேர்? ஒருத்தியை அடைய 200,000,000 காதலர்கள்! எல்லாம் நான் நீ என்று முண்டியடித்துக் கொண்டு முன்னேற யார் அடையப் போகிறார்கள்? முட்டைக்குள் இருப்பது எக்ஸ் வகை க்ரோமோஸோம். தாக்க வரும் லட்சோப லட்சம் யாத்திரிகர்களில் பேர்பாதி எக்ஸ். மற்ற பாதி ஒய். எக்ஸ் உள்ளே சென்றதால் பிறக்கப் போவது பெண். ஒய் நுழைந்தால் பிறக்கப் போவது ஆண்.

அந்தக் கடைசிக் கணம் வரையிலும் உள்ளே பிரவேசிக்கப் போவது எக்ஸா ஒய்யா? தெரியாது!

அந்தத் தினம் வென்றது ஒரு எக்ஸ்! அந்தப் புள்ளி முட்டையின் அருகில் வந்து சேர்ந்து அதன் மேல் அழுத்தி அதனுள் ஒரு துளையிட்டு உள்ளே புகுந்து வாலைப் புறக்கணித்துவிட்டு தலை மட்டும் உட்புறத்தில் சென்று சற்று விரிந்து முட்டையின் உட்கருவுடன் ஜோடி சேர்ந்துகொள்ள இனிமேல் மற்றவர் எவரும் உள்ளே வர வேண்டாம் என்று முட்டை தன்னைச் சுற்றித் திரை அமைத்துக் கொள்ள —

அப்போதுதான் அவள் பிறந்தாள். அவள் அவளான ஒரு பெண் என்று நிர்ணயிக்கப்பட்ட அந்தக் கணமும் உள்ளே பிரவேசித்த எக்ஸில் அப்பாவைப் பற்றிய செய்திகள் அதனுடன் சேர்ந்துகொள்ள எக்ஸில் அம்மாவைப் பற்றிய செய்திகள். எத்தனை செய்திகள்! நிறம், குரல், உயரம், காதுகளின் அமைப்பு, கண்களின் கருமை, மூக்கின் தூக்கல் என்று எத்தனை செய்திகள்!

மறுதினம் அம்மா காலை எழுந்து காப்பி போட்டு, மூத்தவனைப் படிக்க எழுப்பி, பாத்திரம் தேய்க்கப் போட்டு வாசல் தெளித்துக் கோலம் போட்டு பாட்டிக்கு ஓட்ஸ் கஞ்சி வைத்து வென்னீர் போட்டு அப்பா—பேப்பர் படித்து ரேடியோவில் பக்தி கேட்டு, பல் தேய்த்து காப்பி சாப்பிட்டு குளித்து சுந்தனை முணமுணத்துவிட்டு,

அவர்கள் தினசரி அவசரங்களில் அதை முழுவதும் மறந்து விட்டார்கள்.

அந்த முட்டை பேராசை பிடித்தது போல் வளர ஆரம்பித்தது.

அன்றைய தினம் அம்மாவுக்கு மறுபடி ஞாபகம் வந்தது — ஒரு மாதம் கழித்துத் தான்.

அப்பா ஆபீஸிலிருந்து வந்ததும் சொன்னாள்.

''அன்னிக்கு மொட்டைமாடியில் என்னமோ ஆயிடுத்து.''

''ஏன்?''

''ரெண்டு நாளாச்சு. இன்னும் காணோம்''

''அப்படியா? ரெண்டு நாள்தானே தள்ளிப் போயிருக்கு?''

''எனக்கென்னமோ வராதுன்னு தோணறது.''

''ரெண்டு நாள்தான் பாரேன். தள்ளிப் போயிருக்கோ என்னவோ?''

''எனக்குத் தள்ளிப் போனதே கிடையாது. கெடியாரம் மாதிரி வந்துடும்.''

''பார்க்கலாம். ஏன் சிரிக்கிறே?''

''இந்த வயசிலே என்ன விஷமமோ?''

''பார்க்கலாம். என்ன ஆயிறப் போறது?''

''பார்க்கலாம்! அதுக்கப்புறம்?''

''அப்ப யோசிக்கலாம்.''

''பாட்டிகிட்ட இதைப் பத்தி ஏதும் சொல்ல வேண்டாம்.''

''என்ன செய்யறதா உத்தேசம்?''

''முதல்ல தீர்மானமாத் தெரியட்டும்.''

''எனக்குத் தெரிஞ்சு போச்சு.''

''கவலைப்படாதே. சமாளிச்சுடலாம்.''

இரண்டு நாள் கழித்து ''அம்மா எங்க போகப் போறே?'' என்று கேட்டான் மூத்த வன்.

''டாக்டர் கிட்ட.''

''என்ன உடம்பு உனக்கு கல்லாட்டமாத் தானே இருக்கே?''

''மது நீ போய் படி.''

''அம்மா எங்கடா போறா?''

''அம்மா எங்கேடா போறா?'' — இரண் டாவது.

அவர்களுக்கு மூன்று பிள்ளைகள். வயது ஒன்பது, ஏழு, மூன்றாவது ஒரு பெண்ணை எதிர்பார்த்துப் பிறந்த ஏமாற்றம்.

''பாட்டி லேடி டாக்டர் கிட்டப் போக ணும் பாட்டி.''

''ஏண்டி குளிக்காம இருக்கியா? அதான் யோசிச்சேன். ஆம்படையானும் பெண்டாட் டியும் ரெண்டு நாளாக் குசுகுசுன்னு பேசி யாறது. என்னடா இன்னும் உக்காரலை யேன்னு பார்த்தேன். பேசாமப் போய்ப் பார்த்துட்டு பைத்தியக்காரத்தனமா எதை யும் பண்ணி வெக்காதே. பெண்ணைப் பெத் துக்கோ.''

''அய்யோ பாட்டி இந்த வயசில...''

''வயசென்ன வயசு? நானும் விசாலமும் ஒரே சமயத்தில் பிரசவிச்சோம். ஞாபகம் வெச்சுக்கோ. ஏய் வானரங்களா அம்மா வாலைப் புடிச்சுண்டு எங்கேயும் போக வேண்டாம். ஆஸ்பத்திரிக்குத்தான் போறா. பேசாம வந்து கொட்டிண்டு தாச்சுக்கங்கோ''

''ஸைக்கிள் ரிக்ஷாவில் போகும்போது ''பாட்டி என்ன சொல்றான் பாத்தியா?''

''அவளுக்கு வேற வேலை இல்லை. நான் பெத்துக்க மாட்டேன்.''

''பொண்ணு பொறந்தா?''

''நான் மாட்டேம்பா.''

''பொண்ணு இருக்கும்டி.''

''அது என்னவா இருந்தாலும் வேண் டாம். கலைச்சுடலாம். பாட்டி என்ன வேணு சத்தம் போடட்டும். அவளா பெத் துக்கப் போறா?''

''சரி. அப்படியே செஞ்சுடலாம்.''

''எல்லாம் உங்களால. சும்மா இருக்கிற சங்கை ஊதிக் கெடுத்தாப்பலே.''

டாக்டர் பரிட்சை பண்ணிப் பார்த்து விட்டு ''இப்பச் சரியாச் சொல்ல முடியா தும்மா. நாளைக்கு யூரின் டெஸ்ட் எடுக்க லாம். பார்த்தா கன்ஃபர்ம் பண்றப்பல தான் இருக்கு. ஆனா நிச்சயமா சொல்ற துக்குக் கொஞ்ச நாள் போகணும்.''

''எனக்கு நிச்சயமாத் தெரியறது டாக்டர். எதுக்கும் கன்ஃபர்ம் பண்ணுங்க. ஆனா... உங்க கிட்டத்தான் நான் மறுபடியும் வர ணும். எனக்கு இந்தக் குழந்தை வேண்டாம். அவரும் வந்திருக்கார். வாசல்லே திரு திருன்னு நின்னுண்டிருக்கார். அவர் கிட்ட யும் பேசிடுங்கோ. எனக்கு இந்த வயசில இன்னொரு குழந்தை வேண்டாம்.''

டாக்டர் யோசித்து ''ஐ. ஸி. அப்படியா? உங்க ஹஸ்பெண்டைக் கொஞ்சம் கூப் பிடுங்க.''

அவர் தயங்கித் தயங்கி வந்தார்.

''வாங்க மிஸ்டர்! அனாவசியமா இந் தம்மாவை வம்பிலே மாட்டி விட்டுட்டிங்க பாத்திங்களா? நீங்க ஆபரேஷன் பண் ணிண்டிருந்தா இந்த காம்ப்ளிகேஷன் வந் திருக்காது இல்லே?''

''அதைப் பத்தி என்ன? விடு! நடந்தது நடந்து போச்சு. அபார்ட் பண்ணிடலாம் டாக்டர். நான் பூரண சம்மதம் தரேன்.''

''சம்மதிக்கிறது சுலபம். அதனால இந் தம்மா உடம்பு எவ்வளவு பாழாயிடும் தெரியுமா? வீட்டு வேலையையும் பார்த் துண்டு இந்த மாதிரி அபார்ட்டும் பண் ணிக்கிட்டு, சேச்சே...''

''என்ன பண்றது? தப்பு நிகழ்ந்துபோச்சு! அதையே திருப்பித் திருப்பிச் சொல்றதிலே என்ன பிரயோசனம்?''

''மூன்று மாசத்துக்கு வீட்டிலே சமைக் கிறீங்களா?''

''தாராளமா! பாட்டி வேற இருக்கா. அதெல்லாம் சமாளிச்சுடலாம்.''

''சமாளிப்பீங்க. ரெண்டாவது நாளே அம்மாவைச் சமையல் கட்டுக்கு அனுப்பிடு வீங்க'' என்று சிரித்தாள்.

அம்மாவின் கர்ப்பம் அடுத்த வாரம் ஊர்ஜிதம் செய்யப்பட்டு ஆப்ரேஷனுக் கான தேதியும் நிர்ணயக்கப்பட்டது. ''காலை வெறும் வயித்தோடே வந்துடுங்க. இந்தச் சின்னப் பிள்ளையைக் கொண்டு வராதிங்க. வீட்ல விட்டுருங்க. மூணும் பிள்ளைங்களா?''

''ஆமா டாக்டர்.''

''அப்ப ஒரு பெண்ணைப் பெத்துக்கலாமே''

''வாழ்ந்தது. இதுவும் பிள்ளையாப் பிறக் கும். ஏற்கனவே வீட்டில கிஷ்கிந்தை! எனக்கு வேண்டாம். நான் மாட்டேன் டாக்டர். எதையாவது சொல்லி அவர் மனசு மாறிடப் போறார்.''

அம்மாவுக்குள்ளிருந்த பெண்ணுயிர் இப் போது மனித ஆரம்ப அடையாளங்கள் லேசாகத் தெரியும் வரைக்கும் சுறுசுறுப்பாக வளர்ந்திருந்தது.

அதைக் கொல்ல தேதி நிச்சயித்து விட் டார்கள்.

(தொடரும்)



# ஐயோ, வெய்யில் வந்தாச்சா?

விடுமுறை நாட்களில் தான் நாம் பெரும் பாலும் வெளியே அடிக்கடி செல்வோம். அப்பொழுது வெயிலும் அதிகமாக இருக்கும். வெயிலினல் அநேக விதமான வியாதிகள் வரக்கூடும். வராமல் இருக்க் நாம் முன்னெச் சரிக்கையாக இருப்பது நல்லது.

விடுமுறை நாட்களில் கடலுக்கு அருகில் செல்வதாயிருந்தால் வெயில் நம் தேகத்தில் அதிகம் படாமல் இருப்பது நல்லது. நம் தேகத்தில் அதிகம் வெயில் பட்டால் சரும புற்று நோய் வரும். வயதானவர்கள் சருமம் மாதிரி சுருங்கிவிடும். சிலருக்கு சருமத்தில் வெடிப்பு கூட ஏற்படலாம். இது அதிக ஆபத்தானது. வெயிலில் நம் சருமம் அதிகம் படுவதனல் ஏற்படும் வெடிப்புகளுக்கு குளிர்ந்த நீரில் அல்லது 'லிக்விட் பாரபைன்' பஞ்சில் நனைத்து வெடிப்பு ஏற்பட்ட இடத்தில் தடவினுல் வலி குறையும். சிறிது கிரீம் தடவினுல் எண்ணெய்ப் பசை ஏற்படும். மருந்துகள் சாப்பிடுவதானுல் எச்சரிக்கையாகச் சாப்பிடவும்.

## ஸன் ஸ்டோர்க் (Sun Stroke)

இது வெய்யிலினுல் ஏற்படும் இன்னெரு மாதிரியான வியாதி. வெயிலில் அதிக நேரம் இருப்பதால் உண்டாகும். அதிக தலைவலியுடன் மயக்கமும் சேர்ந்து வரும். சிலருக்கு வாந்திகூட ஏற்படலாம். உடனே டாக்டரிடம் செல்லவும். அதிக வெய்யிலில் செல்வதைக் குறைத்து தண்ணீர் அதிகமாகக் குடிக்கவும்.

## உணவு பொருட்களினுல் ஏற்படும் வியாதிகள் :

அதிம் வெயிலினுல் கிருமிகள் கலபமாகப் பரவும். வெயில் காலத்தில் உணவுகளில் விஷம் ஏற்படுவது சாதாரணமானது. அதற்காகக் கீழே சில உபயோகமான குறிப்புகள் தரப்பட்டிருக்கின்றன.

(1) இறந்த உணவுகளைச் சாப்பிடக் கூடாது. (2) பால், பாலினுல் செய்த வஸ்துக்களில் கலபமாகக் கிருமிகள் வரும். (3) எப்பொழுதும் சூடு செய்த தண்ணீரையே குடிக்கவும்.

## தசை வலிகள் :

விடுமுறை நாட்களில்தான் நமக்கு கடல் பக்கம் மலை சமீபம் நடப்பதற்கு நேரம் கிடைக்கும். தினந்தோறும் நடக்கும் பழக்கம் இல்லாததினுல் தசைகளில் வலி உண்டாகும். அந்த மாதிரி வலி உண்டானுல் சிறிது ஓய்வு எடுத்துக்கொண்டு வலி போவதற்கு சில ஆயின்மெண்ட் தடவலாம். எங்கு வலி உள்ளதோ அந்த இடத்தில் ஆயின்மெண்டைத் தடவினுல் சிறிது வலி குறைந்து இருக்கும். சூடான ஒத்தடம் கொடுக்கலாம். இவைகளுக்கு வலி போகாவிடில் எலும்பு உடைந்திருக்குமோ என்று சந்தேகம் இருந்தால் டாக்டரிடம் செல்லவும்.





**மூக்கில் இரத்தம் கசிதல்:**

அதிக வெயிலில் இருந்தால் சிலருக்கு மூக்கில் இரத்தக் கசிவு ஏற்படும். மேஜையின் மேல் தலையை உயர வைத்து உட்காரவும். அதனால் இரத்தம் வருவதைத் தடுக்கலாம். மூக்கைச் சில நிமிடங்கள் அழுத்திப் பிடித்துக் கொள்ளவும். நிற்காவிடில் டாக்டரிடம் செல்லவும். ஐஸ் உபயோகித்தால்கூட இரத்தம் வருவது நிற்கும்.



**காது வலி**

சாதாரணமாக, டான்சில், இன்புளுயன்ஸா, ஜலதோஷம் வந்தால் காது வலி வரும். டாக்டரிடம் கேட்டால் காதுக்கு சில சொட்டு மருந்துகள் கொடுப்பார். அதிலும் வலி போகாவிடில் காதுக்கு உள்ள டாக்டரிடம் செல்லவும்.

**வயிற்று போக்கு:**

சாப்பிட்ட உணவினாலும், தண்ணீரினாலும் இது வருகிறது. சிலருக்கு அலர்ஜியினால் கூட வரும். இது மிகவும் அபாயமானது. உணவு தண்ணீரினால்தான் வருகிறது வயிற்றுப் போக்கு. வந்தால் தேகத்தில் தண்ணீர் குறைந்துவிடும். ஆகையால் அதிக தண்ணீராகாரம் சாப்பிட வேண்டும். உடனே கெயாலின் தண்ணீரில் கலந்து சாப்பிடவும்.

**கண் வீங்குதல் சிவப்பாக இருப்பது:**

கண்களை வெதுவெதுப்பான தண்ணீரில் கழுவி, கண் லோஷனை உபயோகிக்கவும். கண்களை மூடிக்கொண்டு பஞ்சைப் பன்னீரில் நனைத்து வைக்கவும். வெள்ளரித் துண்டுகளை எடுத்து இமையின் மேல் வைத்தால் குளுகுளுப்பாக இருக்கும்.





# திருமண மலர்



டெல்லி மெட்ரிக் படித்த 25 வயது வடகலை அய்யங்கார் பெண்ணுக்குத் தகுந்த மணமகன் தேவை. பெண் 5 அடி. ஜேஷ்ட நட்சத்திரம். குடும்பக் கலையில் பயிற்சியுண்டு. ஜாதகம் தேவை.

பெட்டி எண் 8

தேசியமயமாக்கப்பட்ட வங்கியில் பணி புரியும் தெலுங்கு யாதவ நாயுடு வகுப்பைச் சேர்ந்த 29 வயது பட்டதாரி பெண்ணுக்கு நாயுடு வகுப்பைச் சேர்ந்த அரசு அல்லது வங்கியில் பணிபுரியும் 35 வயதுக்குட்பட்ட வரன் தேவை.

பெட்டி எண் 9

மாத்வ தேசிஸ்த வகுப்பு, காஸ்யப கோத்ரம், பூரம், 23 வயது, பி. எஸ். ஸி. படித்துள்ள பெண்ணுக்கு வரன் தேவை. பையனும் மாத்வ தேசிஸ்த வகுப்பைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும்.

பெட்டி எண் 10

எஸ். எஸ். எல். ஸி. படித்து 19ம் 21ம் வயதுடைய இரண்டு அழகும், பண்பும் மிக்க பெண்களுக்குப் பாண்டிச்சேரியில் (Pondy Based) நல்ல வேலையில் அல்லது சுய தொழிலில் நல்ல வருவாய் உள்ள மாப்பிள்ளைகள் தேவை. ஜாதி பொருட்டில்லை. எளிய திருமணம்.

பெட்டி எண் 11

எஸ். எஸ். எல். ஸி. படித்து ஒரு தனியார் நிறுவனத்தில் மாதம் ரூ. 675 வாங்கும் கவுண்டர் இனத்தைச் சேர்ந்த 26 வயதுள்ள இளைஞருக்கு இதே இனத்தைச் சேர்ந்த அழகும் படிப்பும் உள்ள பெண் தேவை. போட்டோவுடன் விண்ணப்பிக்கவும்.

பெட்டி எண் 12

பி. எஸ். ஸி. பட்டதாரியான வன்னிய குல க்ஷத்திரிய வகுப்பைச் சேர்ந்த 32 வயதுள்ள பெண்ணுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த வேலையில் உள்ள இளைஞன் தேவை. மூத்த தாரமாக இருக்க வேண்டும்.

பெட்டி எண் 13

கலைத் துறைப் புகழ், சொத்துக்கள் உள்ள எம். ஏ. பி. எட்., பத்திரிகை எழுத்தாளர் பிராமண வரனுக்கு மிக அழகிய பெண் தேவை. பட்டப் படிப்பும் இசை ஆர்வமும் விரும்பத் தக்கது.

பெட்டி எண் 14

எஸ். எஸ். எல். ஸி. தேறிய 19ம் 21ம் வயதுடைய அழகும் பண்பு மிக்க இரண்டு பெண்களுக்கு அரபு நாடுகளில் நல்ல வேலையில் உள்ள நற்குணமுள்ள 30 வயதுக்குள்ளான வரன்கள் தேவை. ஜாதி பொருட்டில்லை.

பெட்டி எண் 15

## திருமண மலர்

திருமணம் செய்து கொள்ள விரும்பும் ஆண்களும் பெண்களும் **மங்கையர் மலரில்** விளம்பரம் செய்யலாம். கட்டணம் ரூ. 10/- மட்டுமே. இது **மங்கையர் மலர்** என்ற பெயருக்கு போஸ்டல் ஆர்டராக மட்டுமே அனுப்பப்பட வேண்டும். விளம்பரத்திற்குப் பதில் அனுப்புபவர் பெட்டி எண்ணை மறக்காமல் குறிப்பிட வேண்டும்.

முகவரி :

'திருமண மலர்'ப் பகுதி
மங்கையர் மலர், கிண்டி, சென்னை-32

# இந்தியாவில் மூன்றாவது பெண்மணி

"என்னுடைய அப்பாவுக்கு போஸ்ட் மாஸ்டர் உத்தியோகம். ஊர் ஊராக மாற்றலாகிக் கொண்டே இருக்கும் வேலை. ஆந்திராவில் அந்த ஊருக்குப் போன புதிது. எனக்கு எட்டு வயதுதான் அப்போது. போஸ்ட் ஆபீஸ் மட்டும்தான் தெரியும் எனக்கு. ஒரு சமயம் கடையில் சாமான் வாங்க என்னை அனுப்பினார்கள் வீட்டில். கடைக்குப் போகும் வழியில் ஒரு நாலு தெரு சந்திப்பு. அதில் நான் வழிஅடையாளமாக வைத்துக் கொண்டது நடுத் தெருவில் உள்ள சதுரமான ஒரு பெரிய தண்ணீர்த் தொட்டியின், மேல் ஒட்டியிருந்த 'பாலாம்ருதம்' என்ற பெரிய எழுத்து விளம்பரத்தைத்தான்! நிச்சயம் திரும்பி வரும்போது வழி தவறாது அல்லவா?

"சாமான் வாங்கிக் கொண்டு வீடு திரும்பும்போது பார்த்தால் அந்த நீர்த் தொட்டியின் நாலு பக்கமும் ஒரே மாதிரி எழுதியுள்ள பாலாம்ருதம் விளம்பர வாசகம் தான். திகைப்பு! எந்தப் பக்கம் போவது? பயத்தால் அழுகை வந்து விட்டது. அந்தப் பக்கமாகப் போனவர்கள் 'என்னம்மா?' என விசாரித்தார்கள். நான் ஊருக்குப் புதுசு என்பதையும், வீட்டுக்குப் போக வழி தெரியாததையும், போஸ்ட் ஆபீஸுக்குக் கொண்டு போய் விட்டுவிட்டால் வீட்டுக்குப் போய்விடுவேன் என்பதையும் சொன்னேன்.

"ஓ... போஸ்டாபீஸா... இந்தத் தெரு வழியாப் போ. அங்கே 'ஜெம்மி' விளம்பரம் எழுதியிருக்கும் சுவரிலே. அதுக்குப் பக்கத்திலே உள்ள தெருதான் போஸ்டாபீஸ் தெரு...." சென்றேன். அப்படி ஜெம்மி விளம்பரம் என்னை வீட்டுக்குக் கொண்டு விட்டது... என்று சிரித்துக் கொண்டே சொல்லும் திருமதி விமலா சென்னையில் உள்ள இன்றைய முன்னணி விளம்பர நிறுவனங்களில் ஒன்றான 'அட்வேவி'ன் (Adwave) பங்குதாரர். தென்னிந்திய நான்கு மாநிலங்களில் இருக்கும் எல்லா விளம்பர நிறுவனங்களை நடத்தும் உரிமையாளர்களுள் இவர் ஒருவர் தான் பெண். இத்துறையில் இந்தியாவிலும் மூன்றாவது பெண்மணியாகத் திகழ்கிறார்.

"விளம்பரம் என்பது என்னைச் சின்ன வயசிலேயே எப்படிக் கவர்ந்தது என்பதற்கு அந்த நிகழ்ச்சியைச் சொன்னேன். அதே போல எந்தப் பத்திரிகையிலும் விளம்பரத்தைக் கவனிப்பது என்பது என்னை அறியாமலே சிறு வயது முதல் எனக்கு ஊறிவிட்ட பழக்கம். எங்கள் குடும்பத்தில் இந்தத் தொழிலில் இதற்கு முன் யாரும் ஈடுபட்டதில்லை.

"நான் சென்னைக்கு வந்து வசிக்க ஆரம்பித்த பிறகு வேலைக்குப் போக வேண்டும் என்ற ஆசை. 'எஃப். டி. எஸ்.', 'சிஸ்டா'ஸ் முதலிய விளம்பர நிறுவனங்களில் வேலை செய்து கொண்டிருந்தபோதும், எனக்குள் ஏதோ ஒரு உத்வேகம் தள்ளிக் கொண்டே இருக்கும். ஒரு நாள் நானே விளம்பரக் கம்பெனி நடத்த வேண்டும் என்ற ஆவல் தான்.

"எப்பொழுதுமே எனக்கு ஒரு குணமுண்டு அதாவது யாராவது ஒருவர், 'நான் இந்த காரியத்தைச் செய்வேன்' என்று சொல்கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள், உடனே, இவராலேயே முடியுமென்றால், என்னால் ஏன் முடியாது என்ற யோசனை செய்ய ஆரம்பித்து விடுவேன்.

"அப்படித்தான் ஒரு சமயம் ஒரு பிரபலமான வைர வியாபாரி என்னிடம் சொன்னார்: 'என்ன விளம்பர ஏஜென்சிகள் நடத்துகிறார்கள் இவர்கள் எல்லாம்? நானானால் பிரமாதமாக நடத்துவேன்' என்றார். எனக்குச் சிரிப்பு வந்தது உள்ளுக்குள். இவராலேயே முடியுமானால் நான் ஏன் செய்யக் கூடாது என்று யோசித்துத் தீர்மானித்தேன்.

திருமதி விமலா



"வீட்டில் யாரும் எனக்கு உற்சாகம் கொடுக்கவில்லை. ஒரு விளம்பர நிறுவனம் நடத்துவது என்றால் சாதாரண விஷயமில்லை. அதுவும் பெண் முன்வந்து நடத்துவது ரொம்ப ரொம்பக் கஷ்டம் என்றார்கள். இந்தச் சமயத்தில்தான் என்னுடன் எஃப். டி.எஸ்ஸில் இருந்த நண்பர் கோபுலு என்னைச் சந்திக்க வந்தார். நான் என் யோசனையைச் சொன்னவுடன் அவரும் தயங்காமல் 'எஸ்' என்றார். என்னுடன் பங்குதாரரானார். அப்படி ஆரம்பித்ததுதான் 'அட்வேவ்' அது 1972ம் வருஷத்தில்,

''விளம்பர நிறுவனங்களைப் பற்றி அதிகமாக மக்களுக்குத் தெரியவில்லை. பத்திரிகையில் விளம்பரங்களைப் பார்க்கிறார்கள். அவ்வளவுதான். இந்த விளம்பரங்களை வெளிக் கொணர இந்த நிறுவனங்கள் என்ன வகையில் வேலை செய்கின்றன.. ..?''

''நீங்கள் சொல்வது உண்மைதான். எங்களைப் பற்றி மக்களுக்குத் தெரியாது. பொதுவாகப் புதிதாக ஒரு பொருள் மார்க்கெட்டுக்குக் கொண்டு வருகிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். அதை எப்படி விளம்பரப்படுத்த வேண்டும் என்பது தயாரிப்பாளர்களுக்குத் தெரியாது. அதற்காக அவர்கள் எங்களை அணுகுவார்கள்.

''முதலில் நாங்கள் அந்த வியாபாரத்தின் முழுத் தன்மையையும் புரிந்துகொள்கிறோம். பிறகு முழுக்க மார்க்கெட் சர்வே எடுப்போம். 'சோப்' என்றால் அது எங்கெங்கு விற்கும் என்று தெரிந்து கொள்ள வேண்டும். 'ஃபேன்' என்றால் எல்லோருமே வாங்குவது. எனவே அதைக் கண்ணுக்குப் படும்படியான ஓரிடத்தில் விளம்பரம் பண்ணலாம். ஆனால் ஃப்ரிட்ஜ் வாங்குகிற ஏரியா வேறு. இப்படி முதலில் எங்கெங்கு விளம்பரம் செய்தால் பலன் கிடைக்குமோ அதை நிர்ணயம் செய்வோம்.

அதே போல எந்தப் பத்திரிகையில் போட்டால் பலன் கிடைக்கும்?ரேடியோவில் விளம்பரம் செய்ய வேண்டுமா? டி. வி. யிலா, தெருவிலா என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும். அதற்குப் பெயர் மீடியா சாய்ஸ் என்பது.

மேலும் ஒவ்வொரு பொருளுக்குமே ஒரு சிறப்புத் தகுதி இருக்கும். உதாரணமாக எல்லா சோப்புமே ஒரே மாதிரி செய்யப்பட்டாலும் ஒன்றில் சந்தன வாசனை அதிகம் இருக்கும். ஒரு பற்பசையில் ஏதாவது ஒரு பொருள் சிறப்பாகச் சேர்க்கப் பட்டிருக்கும். அதையே முன்னணிக் கருத்தாக விளம்பரமாக்கும்போது மக்கள் மனதை எளிதில் கவர்ந்து விடுகிறது அக்கருத்து. வியாபாரம் அதிகமாகிறது.

இதையெல்லாம் முழுமையாகத் தீர்மானித்து, எல்லாவற்றையும் ஒட்டு மொத்தமாகக் கணக்கிட்டே நாங்கள் விளம்பரப் போரை ஆரம்பிக்கிறோம்.''

இந்த விவரங்களைக் கேட்கக் கேட்க ஆச்சரியமாக இருக்கிறது. இவற்றையெல்லாம் பார்க்கும்போது இவ்வளவையும் கவனிக்க வேண்டு மென்றால் நேரம் காலம் பார்க்காமல் உழைக்க வேண்டுமே என்று தான் தோன்றுகிறது. அதுவும் பெண்களுக்கு இப்படிப்பட்ட வேலை மிகவும் கஷ்டமல்லவா? இவர் என்ன சொல்கிறார்?

''எல்லா வியாபாரங்களுக்குமே நேரம் காலம் பார்க்காமல் உழைக்கத்தான் வேண்டியிருக்கிறது. யாராவது ஒரு பொருளைத் தயாரிப்பவர் வந்து கொண்டேதான் இருப்பார். இந்த நேரம்தான் நம்முடைய அலுவலக நேரம் என்று கூறி அவர்களைப் பார்க்காமல் இருக்க முடியுமா? சொந்தத் தொழிலுக்கு நேரமில்லை, காலமில்லைதான்.

வியாபார நிறுவனத்தில் இறங்கிவிட்ட பிறகு ஆண், பெண் என்று பார்த்துக் கொண்டிருப்பதும், நான் பெண் அதனால் எனக்குச் சலுகைகள் வேண்டும் என்று சொல்வதும் தப்பு. உழைப்பதற்கு மன உறுதியும், நேரம் காலம் பார்க்காமல் வேலை செய்வதற்கான சூழ்நிலையும் கிடைக்குமானால் இந்தத் துறைக்குத் தாராளமாகப் பெண்கள் வரலாம். நல்ல வாய்ப்பு உண்டு. கால மாறுதல்கள், பொருளாதார மாறுதல்கள், புதிய புதிய உத்திகளையும் கருத்துக்களையும் மனதில் கொண்டு செயல்பட முன்வந்தால் இத் துறையிலும் பெண்கள் முன்னணியில் நிற்கலாம்.'' பேட்டி: வி. மஞ்சுளா ரமேஷ்

---

நம் வீடுகளில் அன்றாட வாழ்க்கைக்கும் சுபதினங்களுக்கும் மஞ்சள் அவசியமான பொருளாக இருக்கிறது. உலகத்திலேயே அதிகமான மஞ்சளை விளைவிப்பது நம் நாடுதான்.இங்கு ஆந்திராவில்தான் மஞ்சள் அதிகமாக பயிராகிறது. மஹாராஷ்டிராவிலுள்ள சாங்லி என்ற நகரில்தான் மஞ்சள் வங்குவது, விற்பது எல்லாம் அதிகமாக நடைபெறுகிறது. அந்த ஊரிலுள்ள பாங்குகள் மஞ்சள் வாங்குவதற்காக லட்சக்கணக்காக அட்வான்ஸ் தருகின்றன. அவ்வூரில் பூமிக்கடியில் மஞ்சளை சேமித்து வைத்து விற்பனை செய்கிறார்கள். கேரளாவிலுள்ள ஆலப்புழையில் விளையும் மஞ்சள் அமெரிக்காவுக்கு ஏற்றுமதியாகிறது. அதுதவிர மேற்கு ஆசியா, ஜப்பான், ஸ்பெயின், சிங்கப்பூர் ஆகிய நாடுகளுக்கும் மஞ்சள் போகிறது. அந்த நாடுகளும் ரசாயனம், சாயம் தோய்ப்பது, தோல் பதனிடுவது இவற்றுக்கெல்லாம் மஞ்சள் உபயோகமாகிறது. மஞ்சள் ஆயுர்வேத வைத்தியத்தில் மிகப் பயன்படுகிறது. ரத்தக் காயங்களில் மஞ்சள் பொடி வைத்துக் கட்டினால் ரத்தப்போக்கு நின்றுவிடும். மஞ்சள் எலும்புகளை உறுதியாக்குகிறது. மஞ்சளிலிருந்து குங்குமம் தயாரிக்கப்படுகிறது. சாங்லியில் சுத்தப்படுத்தப்படுகிற தொழிற்சாலையில வேலை செய்பவர்களுக்கு இருதயம் சம்பந்தப்பட்ட நோய்கள் எதுவுமே வருவதில்லை.

- அனிதா ராமச்சந்திரன்





● ''உணவும் ஆரோக்கியமும்'' போன்ற கட்டுரைகளின் பலன் மிகப் பெரிது! அதனை வெளியிடும் மங்கையர் மலரின் பணி அதை விடப் பெரிது. பாராட்டுக்கள்.

பாரதி

● ம. மலர் மார்ச்சு 81 இதழில் வெளியான முழு நாவல் ''ஊற்றுக் கண்'' என் இதயத்தைத் தொட்டுவிட்டது. பொறுமைக்கு மறு பெயராய் மகாலக்ஷ்மியை இக் கதையில் கூறலாம். புகுந்த வீட்டில் ஆயிரம்தான் கஷ்ட நஷ்டங்கள் வந்தாலும் தாங்கிக்கொள்ளும் சக்தி வேண்டும். அதுவே சாலச் சிறந்தது என்பதை சரோஜா ராமமூர்த்தி அவர்கள் மிகவும் அழகாக இக்கதையில் கூறி விட்டார். இறுதியில் மகாலக்ஷ்மி எல்லோரையும் பார்த்து விட்டு நிம்மதியாக இறந்து விடுகிறாள். ஆனால் எங்களை யெல்லாம் ஊற்றிலிருந்து பெருகும் நீரைப் போல் கண்களிலிருந்து கண்ணீர் வெள்ளத்தை வரவழைத்து விட்டாள்.

திருமதி பிரசன்னா ராஜன்

● சமையல் பகுதியில் பொட்டுக் கடலை தட்டை செய்து முதல் பரிசு பெற்ற திருமதி ஜெயலட்சுமிக்கு எங்கள் வாழ்த்துக்கள்! ஆனால் தேவையான சாமான்களில் தேங்காய் அரை மூடி எழுதியுள்ளார். அதை என்ன செய்வது என்று எழுதவில்லை. பக்கத்தில் வைத்துப் பார்த்துக் கொள்வதா என்ன?

வி. கலாதேவி

● தங்கத்தின் விலை ஏற்றம் அது வாங்க முடியாத அளவுக்குப் போய்விட்டது. தங்க நகைகள் போட்டுக் கொள்ள விரும்பும் நமது பெண்களின் ஆசை கற்பனையாகி விட்டது. இந்நிலையில் தங்கத்தைப் பற்றிய குறிப்பைப் படிக்கும்போது மகிழ்ச்சியாக இருந்தது. செய்தி தங்கமல்லவா?

டி. எஸ். சீதாராமன்

● 'மங்கையர் மலர்' நடுவில் நிறுத்தப்பட்ட போது வாஸந்தியின் தொடரை முழுமையாகப் படிக்க முடியாமல் போய்விட்டதே என்று மிகவும் வருத்தப்பட்டேன். மங்கையர் மலர் மீண்டும் மலரத் தொடங்கிய அதே சமயத்தில் மாயாவின் வாழ்க்கையைச் சோகப் பட்டதாக முடித்திருப்பது மனதை மிகவும் வருத்தியது. கதைக்கேற்ற பொருத்தமான தலைப்பு 'மௌனத்தின் குரல்'.

லட்சுமி குமார்

● இந்திய அரசு வெளியிட்ட ஹெலன் கெல்லரின் தபால் தலையைப் பற்றிய எனது கடிதத்தை வெளியிடாமல் மாதிரிக்காக அனுப்பிய தபால் தலையை மட்டும் சென்ற இதழ் வாசகர் கடிதம் பகுதியில் பிரசுரித்து என் பெயரை இருட்டடிப்பு செய்துவிட்டீர்களே, சரியா?

லட்சுமி குமார்

● மார்ச் 81 மங்கையர் மலரில் 'ஊற்றுக் கண்' என்கிற குறுநாவல் வெளி வந்திருப்பதில் என்னுடைய பெயர் காணப்படுகிறது. அக்கதை என்னுடையது அல்ல.

தயவு செய்து அடுத்த இதழில் பிழை திருத்தம் வெளியிடுவீர்கள் என்று நம்புகிறேன். நன்றி.

ஸரோஜா ராமமூர்த்தி

● என்னுடைய 'ஊற்றுக்கண்' என்கிற முழு நாவல் மார்ச் மாத மங்கையர் மலரில் பிரசுரமாகியுள்ளது. கதையின் தலைப்பில் கதை எழுதியவரின் பெயர் 'ஸரோஜா மூர்த்தி' என்பதற்குப் பதில் 'ஸரோஜா ராமமூர்த்தி' என்று தவறுதலாக அச்சிடப்பட்டிருப்பதை தங்கள் கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறேன். ஏற்கனவே ஸரோஜா ராமமூர்த்தி என்று ஓர் எழுத்தாளர் இருப்பதால் இந்தத் தவறு என்னைப் பாதிக்கிறது என்பதனையும் தெரிவித்துக் கொள்கிறேன். முன்பு இரு முறை இப் பெயர்க் குழப்பம் தினமணிக் கதிரிலும், அமுதசுரபியிலும் ஏற்பட்டபோதிலும் எனக்குத் தனிப்பட்ட முறையில் கடிதத்தில் இருந்ததால் சம்பந்தப்பட்டவர்களிடம் எடுத்துக் கூறிச் சரிசெய்து விட்டேன். இனியாவது இந்தப் பெயர்க் குழப்பம் பத்திரிகைக்காரர்களுக்கு ஏற்படக் கூடாது என்பதே இக்கடிதத்தின் நோக்கம்.

ஸரோஜா மூர்த்தி

● 'கோடையில் ஒரு நாள்' — 'லக்ஷ்மி'யின் அந்தக் கால அனுபவங்கள் சுவையானவை. பசியின் கொடுமையைஅழகாக எடுத்துக் காட்டியிருக்கிறார். ஆனால் அவரது மகனின் கூற்றுதான் ஏற்புடையது அல்ல. மற்றவர் உழைப்பில் சுகம் பெற நினைப்பது ஆண்மையான செயல் இல்லை. எஸ். விஜயன்



"**ப்**ரியா ரெடியா? நான் போய் ஆட்டோ அழைச்சுண்டு வரட்டுமா? ஆட்டோவை வாசல்லே நிக்க வச்சுட்டு நீ பாட்டுக்கு அதை எடுத்து வைக்கலே, இதை எடுத்து வைக்கலேன்னு பெட்டியைக் குடைஞ்சிண்டிருந்தா எனக்குக் கெட்ட கோபம் வரும்...."

"உங்களுக்கென்ன... ஒரு துரும்பு கூட எடுத்துப் போட மாட்டீங்க. ஊருக்குக் கிளம் பறப்பக்கூட நானே ஒண்டியாத் திண்டாட வேண்டியிருக்கு. இவ தனியாக் கிடந்து திண்டாடறுளே பாவம்... பசங்களையாவது ரெடி செய்வோம்கிற கரிசனம் கூடக் கிடை யாது. இந்த லட்சணத்திலே குத்தலுக்கு மட்டும் குறைச்சல் இல்லே... ரம்யாவுக்குக் கொஞ்சம் தலை வாரி விடுங்கோன்னு அரை மணியா கெஞ்சிக்கிட்டிருக்கேனே செய் தீங்களா? ஒரு அடி பின்னலா கொள்ளை போறது? பாப் செய்த தலைதானே? சீப்பால் ஒரு வாரு வாரிட்டா ஆச்சு. அதுக்குக் கூட உங்களுக்கு உடம்பு வணங்காது..." ப்ரியா படபடவென்று அப்பளமாய்ப் பொரிய...

"ஸ்டாப்... ஸ்டாப் இட் ப்ரியா....!" பொறுமை இழந்து கத்தினுன் பிரகாஷ். "நீ இப்படியே முழு நீளத்துக்குப் பேசிண் டிருந்தா நாளைக்குக் கிளம்பற டிரெயினைக் கூடப் பிடிக்க முடியாது. ரெடியான்னு ஒரு வார்த்தை கேட்டதுக்கு இப்படி ஒரு லெக் சரா? இந்த லேடீஸே இப்படித்தான். எதுக்கெடுத்தாலும் பெரிசா ஒரு புராணம்."

அவனை முடிக்க விடாமல் கத்தினுள் அவள், "இப்ப நீங்க பெரிய புராணம் பாட ஆரம் பிச்சுட்டீங்க. 'இந்த லேடீஸே இப்படித் தான்'னு ஆரம்பிச்சுட்டா கொஞ்சத்துலே ஓய மாட்டீங்களே, அது முடியறத்துக் குள்ளே நாளைக்குக் கிளம்பற ட்ரெயின் கூட மெட்ராஸ் போய்ச் சேர்ந்துடும். போய் ஆட்டோ அழைச்சுண்டு வாங்கோ, அதுக் குள்ளே இந்த ரம்யா சனியனுக்குத் தலை வாரி விடறேன். நீங்க ரவியை அழைச்சுண்டு போங்க. 'பாக்' செய்து வைச்ச சாமானை யெல்லாம் ரெண்டு பண்ணிடுவான்."

"ஆமாம்... இதோ தெருக் கோடிலே இருக்கிற ஆட்டோ ஸ்டாண்டுக்கு இவனை இழுத்துண்டு போகணு மாக்கும். சாக்லேட் வாங்கித் தா, பிஸ்கட் வாங்கித் தான்னு சமய சந்தர்ப்பம் தெரியாம அடம் பிடிப் பான். சரி...சரி... நான் வரதுக்குள்ளே சாமானை யெல்லாம் வராந்தாவிலே வெச்சுட்டு ரூமை யெல் லாம் பூட்டிவிடு.வாடா... வந்து தொலே..."

ரவியின் கையைப் பிடித் துக் கொண்டு தரதரன்னு இழுக்காத குறையாய் அழைத்துச் சென்ருன் பிரகாஷ்.

மெட்ராஸ் எக்ஸ்பிரஸ் புறப்பட இன்னும் முக்கால் மணி நேரம்தான் இருக்கிறது... அதற்குள் ஆட்டோ பிடித்து, அது ஆயிரக் கணக்கான ரிக்ஷாக்கள் ,சைக்கிள்களிடையே ஊர்ந்து ட்ராஃபிக் சிக்னல்களுக்கு அடி பணிந்து ஒரு வழியாக ஸ்டேஷனை அடைய போர்ட்டருடன் போராடி... இவர்களைப் போலவே கடைசி நேரத்தில் வந்து ரிஸர் வேஷன் லிஸ்டின் முன்னே கும்பல் கும்ப லாக மோதிக் கொண்டிருக்கும் கூட்டத்தி னிடையே புகுந்து, சீட் நெம்பர் கண்டுபிடித்து திமுதிமுவென்று ஏறும் ஜன வெள்ளத்தி னிடையே மூச்சுக் கூட விட முடியாமல் முக்கி முனகி ஏறி... லாட்டரி சீட்டுக்களின் முடிவில் தன் நம்பர் வந்திருக்கிறதா என்று துழாவும் ஒரு கடனாளிக் குடும்பஸ்தனின் பரபரப்புடன் கம்பார்ட்மெண்டின் சீட்டுக் களின் நெம்பர்களைத் தேடி... கடைசியாக அந்த எண் கண்ணில் பட... பரிட்சை ரிசல் டில் தன் நெம்பரைக் கண்டுவிட்ட பள்ளிப் பையனின் ஆசுவாசப் படபடப்பு நிறைந்த ஆனந்தத்துடன் பொத்தென்று அந்த சீட்டில் விழ....

இத்தனையும் அந்த நாற்பத்தைந்து நிமிடத் துக்குள் முடிந்தாக வேண்டும். அசுவமேத யாகங்கள். எல்லாவற்றையும் முன்னதாக ரெடி செய்து கொண்டுரயில் கிளம்ப ஒன்றரை மணி நேரம் முன்பேனும் வீட்டை விட்டுக் கிளம்பி எவ்விதப் படபடப்புமின்றி நிம்மதி யாகப் பிரயாணத்தைத் துவக்க வேண்டும் என்று ஒவ் வொரு பயணத்தின்போதும் நினைத்துக்கொள்கிருன். முடிவதில்லையே! இந்த அவசரங்கள் எல் லாம் பழகி விட்ட நியம



மாகப்பட்டு விட்ட அவசரங்கள்... எவ்வளவு முயன்றும், தவிர்க்க முடியாத அம்சங்கள்... அந்த நிமிடம் அவன் வாழ்க்கையின் லட்சியமே ஒரு ஆட்டோவாக ரவியுடன் ஓடினான் பிரகாஷ். வழியில் குறுக்கும் நெடுக்குமாக ஆட்டோக்களும் ஓடின. 'ஆட்டோஃபுல்' ஆக. இடையிடையே அவன் விழிகளும் ஓடின வாட்சை நாடி. இன்னும் ஐந்து நிமிஷத்திலாவது ஆட்டோ கிடைத்து விடாதா? அதற்குள் ப்ரியா வீட்டைப் பூட்டிக்கொண்டு லக்கேஜுடன் வாசலில் தயாராக இருப்பாள்... போய் விடலாம்...இதோ இருக்கும் செகந்திராபாத் ஸ்டேஷன்...

அவன் நினைத்தபடி, சொன்னபடி யெல்லாம் எடுத்து வைத்துத் தயாராகத்தான் முயன்றாள் ப்ரியா. ஏதேதோ கடைசி நேர சில்லறை வேலைகள் அவளை ட்ரில் வாங்கிக் கொண்டே இருந்தன. ஒருவாறுகப் பெட்டி படுக்கை, கூடை வகையறுக்களை வாசலில் சேர்த்து வீட்டை இழுத்துப் பூட்டியபோது மண்டையில் அடித்தாற்போல் நினைவுக்கு வந்தது. பால் நிரம்பிய ப்ளாஸ்க் சமையலறை மேடை மீதே இருக்கிறதே... ஐயோ.. ராத்திரி பால் இல்லாவிடில் ரம்யா பீடை கத்திக் தீர்த்து ஊரைக் கூட்டிடுமே... முணு முணுத்தபடி பூட்டைத் திறந்தாள்.

ஆட்டோவின் காதைப் பிளக்கும் இரைச்சல். அதற்குச் சவால் விடும் வகையில் உறுமியவாறு உள்ளே வந்தான் பிரகாஷ்.

''இன்னும் நீ ரெடியாகலேயா? ஊருக்கு முன்னால் சாமான்களை வேற வாசல்லே கடை பரப்பிட்டே....''

ப்ரியா ஏதோ சொல்ல வாயெடுக்க, ''நீ ஒண்ணும் ஆரம்பிக்கடாதே. நேரமாயிண்டே இருக்கு. நீ என்னைத் திட்ட நினைக்கிறதை யெல்லாம் சாவகாசமா டிரெயின்லே உட்கார்ந்து திட்டலாம். முதல்லே டிரெயினைப் பிடிக்கிறோமான்னு பார்க்கலாம்...''

ஆட்டோவின் ஹார்ன் அவசரமாக எச்சரித்தது.

எல்லாம் சரிபார்த்த பிறகு ஒரு வழியாக வீட்டைப் பூட்டியாயிற்று. பிரகாஷ், சாமான்களை ஆட்டோவில் ஏற்றிக் கொண்டிருந்தான். இன்னும் ஒரு பிரம்புக் கூடை தான் பாக்கி. ரவியும் ரம்யாவும் ஆட்டோவினுள் குதித்துக் கொண்டிருந்தனர். 'அப்பாடா... ஒரு வழியாக் கிளம்பியாச்சு....'— ஆயாசத்துடன் நினைத்துக் கொண்டாள் ப்ரியா.

ஊருக்குக் கிளம்பப் போகிறவர்களுக்கே உரிய சந்தேகத்துடன் பூட்டிய பூட்டை ஒரு முறை இழுத்துப் பார்த்துவிட்டு, கூடையை எடுத்துக் கொண்டு ப்ரியா ஆட்டோவில் ஏற யத்தனித்தபோது....

''ஊருக்குப் போறீங்களா ஆன்டி?''— திடீரென்று ஒரு புதுக் குரல்.... பதிமூன்று வயதுப் பையன் ஒருவன் சைக்கிளில் ஒரு காலும் தரையில் ஒரு காலுமாக நின்று கொண்டிருந்தான். கையில் ஒரு பாட்டில்.

''அம்மா கொடுத்துட்டு வரச் சொன்னாங்க...'' — செக்கச் செவேலென்ற ஆவக்காய்ப் பாட்டிலை அவளிடம் நீட்டினான். 'அடப் பாவி! இப்போது பார்த்துக் கொண்டு வந்திருக்கானே... அவன் அம்மாவுக்கும் இவளுக்கும் ஆவக்காய் கொடுத்தனுப்பு மளவுக்கு சிநேகிதமே தவிர திடீரென்று நேர்ந்த பிரயாணத்தை மெனக்கெட்டுத் தெரிவிக்கு மளவுக்கு நெருக்கம் வளரவில்லை.





# அவனும் ஆவக்காயும்

சாந்தாதத்

''ஸ்ரீதர்....! நாங்க ஊருக்குக் கிளம்பிண்டிருக்கோமே தெரியலேயாடா? அம்மாகிட்டேச் சொல்லு. ஊர்லேருந்து வந்ததும் வாங்கிக்கிறேன்.'' — பரிதாபமாகக் கெஞ்சினாள் ப்ரியா.

''ஸாரி ஆண்டி... நான் அவசரமா ஃப்பிரெண்ட் வீட்டுக்குப் போகணும். அங்க இதையும் எடுத்துண்டு போனா அவங்க எடுத்துண்டுடுவாங்க. வீட்டுக்குப் போய் இதை வச்சுட்டு வரவும் நேரமில்லே....''

அவள் சங்கடத்தைச் சிறிதும் உணராமல் அந்தப் பையன் அந்தப் பாட்டிலை அவள் கையில் திணிக்காத குறையாக வைத்து விட்டு சைக்கிளில் பறந்தோடி விட்டான். நேரமும் பறந்து கொண்டிருக்கிறதே...அதை வைப்பதற்காகப் பூட்டைத் திறந்தால் பிரகாஷ் கொன்றுவிட மாட்டாரா? இப்போது என்ன செய்ய?... பரிதாபமாகப் பார்த்தாள் அவனை.

''அதைத் தூக்கி எறிஞ்சிட்டுப் பேசாமல் ஏறு. ஆவக்காய் அனுப்ப நேரம் காலம் கிடையாது....'' கணவன் கடுகடுக்க... ஆட்டோ டிரைவர் பொறுமை இழந்து சிடுசிடுக்க....

இனி ஒரு கணம் தாமதித்தாலும் அவனே அவளை அள்ளி ஆட்டோவில் போட்டுவிடுவான் என்று அஞ்சி ஆவக்காயும் கையுமாக ஏறிக்கொண்டாள் ப்ரியா.

ஆட்டோ கிளம்பியதும் அந்தப் பாட்டிலை பிரம்புக் கூடையில் வைக்க முயன்றபோது அவன் அதைத் தடுத்தான். ''இதைப்போய் கூடையில் வைக்கிறயே ப்ரியா... பால் சர்க்கரை, ப்ரெட், பழம் எல்லாம் நெடி ஏறிவிடாதா? ஒண்ணு செய்யலாம். இதை இந்த டிரைவருக்கு....''

சட்டென்று வெடித்தாள் அவள். ''பேசாமல் இருங்க. அருமையான ஊறுகாய். இதைப் போய் தானம் செய்வாங்களா... துளி கூட சிந்தாம எடுத்து வர்றது என் பொறுப்பு....''

சாமான்கள் குழந்தைகள் சகிதம் அவர்கள் தங்கள் சீட்டில் விழுந்ததற்கும் ரயில் கிளம்புவதற்கும் ஒரு விநாடி கூட இடைவெளி இல்லே. அவர்கள் பயணத்தில் இப்போது அந்த ஆவக்காயே பிரதானமாக வழியெல்லாம் அதைக் காரணமாக அவன் அவளைத் திட்டிக் கொண்டே இருந்தான்.

''ஆவக்காய் போட்டால் எனக்குக் கொஞ்சம் கொடுத்தனுப்பறீங்களான்னு நீ அல்ப மாட்டம் கேட்டிருப்பே. அதுக்குத்தான் அவங்க சமய சந்தர்ப்பம் தெரியாம இப்படிக் கழுத்தறுத்திருக்கிறாங்க. தூக்கித் தூர எறின்னாலும் கேட்க மாட்டே. ரம்யாவை விட அதுதான் உனக்கு முக்கியமாகப் போய்ட்டது. மடியில் தூக்கி வச்சுட்டு இப்படி அவஸ்தைப் படணுமா?''

''நான் ஒண்ணும் கேக்கலே. எப்படிச் செய்யணும்னு கேட்டேன். அவ்வளவுதான். செய்யத் தெரியாதே... பாவம்னு அவங்களா கொடுத்தனுப்பியிருக்காங்க. நாம ஊருக்குக் கிளம்பிண்டிருக்கோம்னு அவங்க என்ன கண்டாங்களாம்? உங்களுக்கென்ன... படற அவஸ்தை யெல்லாம் நான்தானே?''

ப்ரியா எரிச்சலுடன் முணு முணுத்த போதும் அவளுள் ஒரு குற்ற உணர்வு. அவள் ஆந்திராவில் குடியேறி நான்கு வருடங்களாகியும் ஆந்திராவின் ஆஸ்தான பண்டமான ஆவக்காய் போடுவது எப்படி என்று தெரிந்து கொள்ளாதது அவள் தப்புத் தானே...? ஊறுகாய் போடும் முறை கேட்டறிந்து சிரமம் மேற்கொண்டு கர்ம சிரத்தையுடன் அதைப் போட உடம்பு வணங்கவில்லே. ஆவக்காய் மட்டும் வேண்டியிருக்கு. எப்படிப் போடுவது என்று அவள் கேட்கப் போய்த் தானே அவர்களும் கொடுத்தனுப்பி யிருக்கிறார்கள்? கேள்வியை – ஆவக்காய் போடும் விதம் எப்படி என்று அவளும் வருடம் தவறாமல் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறாள். ஆனால் இன்று போல் அந்தப் பாழாய்ப் போன ஆவக்காய் அவளை என்றுமே இப்படி அவதிக்குள்ளாக்கியதில்லை.

பாட்டில் எவ்வளவோ நன்றாக கச்சிதமாக அழுத்தமாக மூடப்பட்டும் மூடியை மீறி சில சொட்டுகள் எப்படியோ வெளி உலகைக் காணும் ஆவலில் புகக்சென்று வெளிவர, கை, புடவை யெல்லாம் எண்ணெய்க் கசிவு...கையில் பிசுபிசுப்பு... ஆவக்காய் மணம் கம்மென்று கிளம்பி கம்பார்ட்மெண்ட் எங்கும் நிறைந்தது.

தயாரித்து எடுத்து வந்த சப்பாத்தி, தயிர் சாதத்தை. இரவு சாப்பிட்டபோது தொட்டுக்கொள்ள அந்த ஆவக்காயையும் ஒரு ஸ்பூன் போட...' பிரகாஷ் ரசித்துச் சப்புக் கொட்டிச் சாப்பிட்டான். அதன் ருசியில் கவரப்பட்ட குழந்தைகள் கூட அதிகமாகச் சாப்பிட்டு விட்டு 'உஸ்...உஸ்...' என்று நாக்கை இழுத்துக் கொண்டனர்.

''கம்மா சொல்லக் கூடாது. பிரமாதமா இருக்கு. நீயும்தானே இருக்கே. எப்பத்தான் கத்துக்கப் போறியோ...இன்னும் ஒரு ஸ்பூன் போடு...''

இதோ இந்தச் சிறுமி கல்சுமப்பது மற்ற சிறுவர்கள் சிலேட்டு, பென்சில் உபயோகிப்பதற்காக, மத்தியப் பிரதேசத்திலுள்ள மன்சார் பகுதியிலுள்ள தொழிற்சாலையில் வேலைசெய்யும் எவருமே நாற்பது வயதிற்கு மேல் வாழ்வதில்லையாம், காரணம், அங்கிருந்து வெளிப்படும் விஷ வாயுதான். சிறுவர், சிறுமியர் வேலை பார்க்கும் இடம் இது.



சமீபத்தில் குஜராத்திலுள்ள லோத்தல் (லோத்தல் குஜராத்தின் பழம் பெரும் துறைமுக நகரமாகும்) என்னுமிடத்தில் நடைபெற்ற புதைபொருள் ஆராய்ச்சியின் போது அங்கு தோண்டப்பட்ட இரண்டு குழிகளில் 14 எலும்புக் கூடுகள் சிக்கின. அவற்றில் மூன்று ஜோடிகள் கணவன் மனைவி எலும்புக் கூடுகளாக இருந்தன. அவற்றை ஆராய்ந்தபோது இறந்த கணவனுடன் உடன் கட்டை ஏறும் வழக்கம் 4500 ஆண்டுகளுக்கு முன்பே இருந்திருக்கிறது என்பது தெரிய வந்தது. - இல்லஸ்டிரேடட் வீக்லி'யிலிருந்து

- எஸ். விஜயன்



''சனியனைத் தூக்கி எறின்னு சொன்னீங்களே...?'' அவள் விண்டலாகக் கேட்க அவன் முறைத்தான்.

சென்னையில் ப்ரியாவின் புக்ககத்தில் அவர்களுக்கு மட்டுமல்லாமல் அந்த ஆவக்காய்க்கும் பலத்த வரவேற்பு.

டைனிங் டேபிளைச் சுற்றி மாமனார், மைத்துனர்கள், வேலைக்குப்போகும், படிக்கும் நாத்தனார்கள்.... ஆவக்காய் பாதிக்கு மேல் காலி!

''பிரமாதம்.... ஒண்டர்ஃபுல்... ஃபைன் டெலிஷியஸ்....!''

ஆளுக்கு ஆள் பாராட்டுக்களை அள்ளி வீச,

''மணம் ஊரைத் தூக்கின்டு போறதேடி பரவாயில்லை.... ரொம்ப நாள் அனுபவம் இருப்பவள் போல் அருமையாகப் போட்டிருக்கே ப்ரியா...'' தயிர் வார்த்துக்கொண்டிருந்த மாமியாரின் மனம் நிறைந்த பாராட்டு.

தூக்கி வாரிப் போட்டது அவளுக்கு. ஓ...! அத்தனை பேரும் ஊறுகாய் அவள் போட்டதென்றே நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

'இதைப் போட்டது நான் இல்....' — நாக்கு நுனிவரை வந்த வார்த்தைகள் சட்டென்று உள்ளுக்குள்ளேயே சுருண்டுவிட....

அதைத் தயாரித்தது அவள் இல்லை என்று சொல்லி ஏன் அசடு வழிய வேண்டும்? அதற்காக எத்தனை பாராட்டுதல்கள்.... புகழுரைகள்....! மாமியார் வீட்டாரிடமிருந்து ஒரு துளி சிரமம் கூட இன்றி வெகு சுலபமாகக் கிடைத்த — அதுவும் ஒரு மாமியாராகப்பட்டவள் மனம் விட்டுப் பாராட்டும் கிடைத்தற்கரிய பெருமை... அதை ஏன் இழக்க வேண்டும்? அவள் போட்டதாகவே நினைத்துக் கொள்ளட்டுமே... அதனால் என்ன நஷ்டம் வந்துவிடப் போகிறது....

''முதல் தடவையா இந்த வருஷம்தான் போட்டேம்மா. எப்படி வருமோன்கிற பயத்துலே ஒரு இருபது காய்தான் போட்டேன். அதனால்தான் உங்களுக்கு சாம்பிளுக்குக் கொஞ்சமாகத்தான் எடுத்து வர முடிந்தது''

அவளைத் திகைப்புடன் நோக்கினான் பிரகாஷ். சிறு தயக்கம் கூட இன்றி எவ்வளவு இயல்பாகக் கூறிவிட்டாள்... எதற்காக இந்தப் பெண்களுக்கு இப்படி ஒரு வீண் ஜம்பம்? அவள் அல்பத்தனத்தை நினைத்து ஆத்திரப்பட்டவன் உண்மையைப் போட்டு உடைத்து விடலாமா என்றுகூட நினைத்தான்.

சே...என்ன இருந்தாலும் அவன் அவளுடைய கணவன். அப்படியெல்லாம் விட்டுக் கொடுத்து விடக் கூடாது. அவள் என்ன அவ்வளவு பெரிய பாவம் செய்து விட்டாள்... அவன் வீட்டாரிடமிருந்து நல்ல பெயர் வாங்க வேண்டும் என்கிற ஆசையில் ஒரு சின்னப் பொய்.... தொலையட்டும்.

அவளோ அவன் பக்கமே திரும்பவில்லை. குற்றம் சாட்டும் விழிகளுக்கு என்ன பதில் கூறுவாள்... அத்தனை பேர் எதிரில்?

அன்று மாலை அவளைப் பிடித்தது சரியான சனி. அவள் மாமனார் வாக்கிங் போய்விட்டு வரும்போது ஒரு டஜன் மாங்காய்களை-வாங்கி வந்து அவள் முன் போட்டார்.

''ஆவக்காய் போட்டுடும்மா ப்ரியா. உன் மாமியாரும் போடறளே தவிர அவளுக்கு உன்னத்தனை ருசியா வராது...''

''ஆமாண்டி ப்ரியா. நீ போடறதை நானும் பார்க்கறேனே....'' மாமியாரின் பச்சை விளக்கு.

அரண்டு போனாள் ப்ரியா. இதென்ன புதுப் பிரச்னை? ஆவக்காய் போடுவதில் அவள் அரிச்சுவடி கூட அறிய மாட்டாளே... தெரியாது என்று இப்போது பின்வாங்கினால் அவர்கள் அவளை எவ்வளவு மட்டமாக எடை போட்டு விடுவார்கள்? இது ஒரு தன்மானப் பிரச்னையாகி விட்டதே? கிணறு வெட்டப் போய் பூதம் கிளம்பிய கதையாகி விட்டதே. என்ன இது....

முகம் நிறையக் குறும்புடன் அவளைப் பார்த்தான் பிரகாஷ். 'எப்படிச் சமாளிக்கப் போகிறாய்?' அவன் விழிகள் வினவ...

அப்போதுதான் ஆபீசிலிருந்து திரும்பிய பெரிய மைத்துனன் வாசு — மாங்காய்களைக் கண்டு விழிகளை அகலத் திறக்க ''ஆவக்காய் ஊறுகாயா... வெரி குட்... வெரி குட்!''

செய்வதறியாது விழித்துக் கொண்டிருந்த ப்ரியாவுக்குப் பொறி தட்டினாற் போல் யாரோ சொல்லக் கேட்ட விஷயம் நினைவுக்கு வர.....

''ஊறுகாய்க்கென்னம்மா நிமிஷத்துலே போட்டுடலாம். ஆனா இந்த சமுத்திரக் காத்துலே ஒரு நாலைஞ்சு மாசத்துக்கு மேலே அவ்வளவு மணமா இருக்காதாம். ஒரு மாதிரியா வாசனை வந்துடுமாமே....''

''பரவாயில்லே ப்ரியா... கொஞ்ச நாளாவது அனுபவிக்கிறோமே. நூறு இருநூறு... பன்னண்டு காய்தானே... இத்தனை பேருக்கு ஒரு மாசம்கூட வராது...'' மாமனார் அவளை விடுவதாக இல்லை. வயதான நாக்கின் சபலம்.

''அதில்லே மாமா. இந்த மாங்காய்கூட அவ்வளவு உசத்தியா இல்லே. நல்லெண்ணெய் கூட இங்க ஏதோ ஒரு வாசனையா... அந்தப் பக்கம் எண்ணெய், கடுகு, மிளகாய் எல்லாம் இதுக்குன்னே ஸ்பெஷலா இந்த சீசன்லே கிடைக்கும். உங்களுக்கு ஆவக்காய் தானே வேணும்? ஊருக்குப் போய்ச் சேர்ந்ததும் நிறையப் போட்டு அனுப்பறேன்...'' மடமடவென்று கூறிவிட்டு இடத்தை விட்டு ஓடியே விட்டாள்.

அதற்கப்புறம் அவர்கள் அங்கிருந்த பத்து நாட்களும் அவளுக்கு மனமே சரியில்லே. அநாவசியமாக ஒரு பொய்யைச் சொன்னதால் எவ்வளவு பெரிய இக்கட்டில் மாட்டிக் கொண்டு விட்டாள்? ஏதேதோ வாய்க்கு வந்ததைச் சொல்லித் தெய்வாதீனமாகத் தப்பித்துவிட்டாள். அந்தச் சனியன் பிடித்த ஆவக்காய் அவளை எப்படியெல்லாம் அலைக்கழித்து விட்டது! ஊரை விட்டுக் கிளம்பும் போது ஆட்டோவெல்லாம்... ரயிலெல்லாம் வழியெல்லாம் அதனால் பட்ட தொல்லை போதாது என்று இங்கு வந்துமல்லவா அவளை வம்பில் மாட்டிவிட்டது... முன் பின் எதுவும் யோசியாமல் குபுக்கென்று ஒரு சின்னப் பொய்யின் விளைவு இவ்வளவு தூரமா... கணவனைப் பார்க்கக் கூடக் கூசினாள்.

அவர்கள் சென்னையை விட்டுக் கிளம்பிய போது அவள் பெரிய மைத்துனன் வாசுவும் அவர்களுடன் சேர்ந்து கொண்டான். அவசர ஆபீஸ் வேலையாகத் திடீரென்று கிளம்ப நேரிட்டதால் ரிசர்வேஷன் கூட இல்லாமல் அவன் மட்டும் ஜெனரல் கம்பார்ட்மெண்டில் பயணம் செய்தான்.

ஊரை அடைந்து வீட்டுக் கதவைத் திறந்து கொண்டிருந்தபோது, கிளம்பிய போது அந்தப் பூட்டிய கதவின் முன் பட்ட அவஸ்தை யெல்லாம் நினைவுக்கு வர ஆயாசப் பெருமூச்சுடன் உள்ளே நுழைந்தாள்.

அத்தனை நாட்களும் மூடிக் கிடந்த வீட்டைப் பெருக்கிக் கழுவி குளித்து சமையலை முடித்து டைனிங் ஹாலில் கணவர், மைத்துனன், குழந்தைகளுக்குப் பரிமாறிக் கொண்டிருந்தாள்.

''ப்ரியா....!'' குரல் கொடுத்தவாறு உள்ளே வந்தாள் அவளுக்கு அந்த ஊறுகாயை அனுப்பியவள்.

பக்கென்றது இவளுக்கு. சனியன் பிடித்தவள்... வந்து இறங்கியதும் இறங்காததுமாக இவள் ஏன் வரணும்... எப்படித் தெரிந்தது....? ஏதாவது உளறி வைக்கப் போகிறாள்

''இன்னிக்குத்தான் வந்தீங்களா? இந்தப் பக்கமா ஒரு வேலையாப் போய்க் கொண்டிருந்தப்ப உங்க வீடு திறந்திருப்பது பார்த்தேன். பிரயாணமெல்லாம் எப்படி?... ஊர்ல எல்லோரும் சௌக்கியமா? அது என்ன ஒரு வார்த்தைகூடச் சொல்லாமத் திடுதிப்புன்னு கிளம்பிட்டீங்களே... அன்னிக்கு ஸ்ரீதரிடம்...'' — அவள் பேசிக்கொண்டிருக்கும்போதே சரேலெனக் குறுக்கிட்டாள் ப்ரியா.

''உங்களுக்கு மெட்ராஸ்லேர்ந்து அம்பிகா அப்பளம் வாங்கி வந்தேன். சமையலுள்ளே வாங்கோ...'' கையைப் பிடித்து இழுக்காத குறையாக அவளை அழைத்துக் கொண்டு போனாள்.

கை கழுவப் பின்புறம் சென்ற பிரகாஷ் ஜன்னல் வழியாக அவளைப் பார்த்து 'கர்மம் கர்மம்' என்று தலையில் அடித்துக் கொள்ள...

'போதும்டா சாமி... இனிமேல் ஆயுசுக்கும் இது மாதிரி பொய் சொல்லக் கூடாது' —வேர்க்க விறுவிறுக்க நின்ற ப்ரியா பிரதிக்ஞை எடுத்துக் கொண்டாள். தன் தவறை அவள் உணர்ந்து கொண்ட பிறகும் அப்படியொரு பொய் சொன்ன அவளுக்கு இந்தத் தண்டனை யெல்லாம் போதாது என்பதுபோல் இன்னுமொரு சோதனை....!

அவளிடம் ஒரு ஐம்பது ரூபாய்த் தாளை நீட்டினான் வாசு.

''இங்க நல்ல காய் கிடைக்குமில்லேயா? ஒரு இருபது காயாவது வாங்கிப் போட்டுடு ப்ரியா. இன்னிக்கே போட்டுடு. நாளைக்கெல்லாம் இருந்தாக் கூட நாளன்னிக்கு நான் கிளம்பறச்சே எடுத்துண்டு போகலாம்.

---

### சுக்கின் மகிமை

சுக்கைப் பொடி செய்து, சிட்டிகை அளவு பொடியை நாசியில் நசியமிட உடனே மயக்கம் தெளிந்து விடும்.

சுக்கையும், கறி உப்பையும் சம அளவு பொடி செய்து காலை, இரவு உணவுடன் கலந்து உட்கொண்டால் வாய்வு, சோர்வு தீரும். நல்ல பசி உண்டாகும்.

உப்பை அரைத்து சுக்கை கவசம் செய்து நெருப்பில் சுட்டுச்



சாம்பலாக்கி, சாம்பலை ஒரு சிட்டிகை அளவு தேனில் குழைத்து உண்ண சளியை விரைவில் வெளியாக்கும்.

சுக்கைச் சுட்டு கரியாக்கி, தேங்காய் எண்ணெயில் குழப்பி பூசினால் ஆறாத ரணம், மேகப்புண், படர்நோய், படர்தாமரை, வெட்டுக் காயம், சிலந்திப் புண் தீரும்.

- மேலே கூறியுள்ள பக்குவம் அனைத்தும் நடைமுறையில் பயன் கண்டவையே.

நீ போடறப்பக் கிட்ட இருந்து பார்த்து அம்மாவுக்குச் சொல்றேன்...''

அவளுக்கு அழுகையே வந்து விட்டது. 'எனக்கு ஆவக்காயும் தெரியாது... எந்த எழவும் தெரியாது...' — 'ஓ'வென்று கத்த வேண்டும் போல் வெறி எழ... சேசே... கத்தி கித்திச் செய்யக் கூடாது. தப்புச் செய்தவளுக்கு ஆங்காரம் வேறு? மெல்ல விஷயத்தை எடுத்துச் சொல்லி விட வேண் டியதுதான்.... அவர்கள் என்ன வேண்டு மானாலும் நினைத்துக் கொள்ளட்டும். இனி அவளால் தாக்குப்பிடிக்க இயலாது.

தொண்டையைச் செருமிக் கொண்டு மெல்ல ஆரம்பித்தாள். ''...வந்து...எனக்கு நான்...''திடீரென்று சுயகௌரவம் முரண்டு பிடிக்க... சே... இவர் எதிரில் ஒரு புழு வாகத் தாழ்ந்து போவதா...?

''என்ன ப்ரியா... பணம் வாங்கிக்கனு மான்னு யோசனையா? உங்களுக்கும் ஏகப் பட்ட செலவு. இப்பத்தான் ஊருக்கெல் லாம் வேறு போய்வந்தாச்சு. இருக்கட்டும்.'' அந்த ஐம்பது ரூபாய் நோட்டை அவன் கையில் திணித்து விட்டுச் சென்றுவிட்டான் வாசு.

''இப்பவாவது புத்தி வந்ததா இல்லையா?'' ரகசியமாக உறுமினான் பிரகாஷ்.

கடவுளே... கடவுளே... இது என்ன சோதனை... அவள் ஆயுளில் இதுபோல் என்றும் எதற்கும் தவித்ததில்லையே...

உடலெங்கும் முள் குத்திக்கொண்டிருப்பது போல் தவித்துக் கொண்டிருக்க அடுத்த பத்தாவது நிமிடத்துக்குள் அவளே எதிர் பாராத விதத்தில் பிரச்னை சுலபமாய்த் தீர்ந்து விட்டது.

''என்னங்க... உங்களைத்தானே... சமைய லறைக் கதவைக் கொஞ்சம் மூடுங்க. பூனை பாலைக் குடிச்சுடப் போறது. அப்படியே அந்த ப்ளு ஹாண்ட்லூம் ஸாரியும் ரப்பர் தலைகாணியும் எடுத்துப் போடுங்க....''—

பாத்ரூமிலிருந்து உற்சாகமாகக் கத்தினாள் ப்ரியா.

அவளுள் மகிழ்ச்சிப் பிரவாகம். அவன் குளித்து உள்ளே வரும் நான்காவது நாளில் அந்தச் சுப வேளையில் வாசு மெட்ராஸில் அம்மா கொடுக்கும் காப்பியைக் குடித்துக் கொண்டிருப்பான். ஆனந்தமாகக் காற்றை இழுத்து நிம்மதியாக நீண்ட பெருமூச்சு விட் டாள்.

அத்தனை மகிழ்ச்சி ஆரவாரத்தினிடையே யேயும் அவளுள் ஒரு வெறி கிளம்பியது. அவளை இந்தப் பாடுபடுத்திய அந்த ஆவக் காயை எப்படியேனும் கற்றுக் கொண்டே தீரவேண்டும். — அதுவும் கூடிய விரைவில். அந்தச் சின்னப் பொறி பெரிதாக மூண்டு கொழுந்து விட்டெரிய அந்த உக்கிரம் தந்த வேகத்தில் மிகுந்த ரெத்தையுடன் ஆவக் காய் போடக் கற்றுக் கொண்டு அதில் வெற்றியும் கண்டாள்.

---

## இம்மாத இல்லத்தரசி போட்டி

அடுத்த சமையல் பகுதி போட்டிக்காகக் கீழே குறிக்கப்பட்டுள்ள பொருள் தேர்ந்தெடுக்கப் படுகிறது. உங்களுக்குத் தெரிந்த குறிப்புக்களை எழுதி கீழே காணும் கூப்பனுடன் இணைத்து எங்களுக்கு அனுப்புங்கள்.

பொருள் : மாங்காய்

முடிவு தேதி : 15-4-'81

### சமையல் கூபன்

இத்துடன் ........ என்ற தலைப்பில் சமையல் குறிப்புக்களை அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியான தல்ல என்ற உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# குழந்தையை யார் பார்த்துக் கொள்வது?

வேலைக்குச் செல்லும் பெண்களின் பிரச்னைகளில் தலையாயதும், முக்கியமானதும் ஆன பிரச்னை குழந்தைகள்தான். இப் பெண்களின் குழந்தைகளை வீட்டில் யார் பார்த்துக் கொள்வது? வீட்டில் பெரியவர்களோ, கூட்டுக் குடும்பமோ இருந்தால் பரவாயில்லை. கணவன், மனைவி மட்டுமே இருந்து, வேலைக்குப் போகிறவர்களாக இருந்தால், அவர்களின் குழந்தைகளை வேலைக்காரர்கள் கிடைத்தால் அவர்களிடம் ஒப்படைத்து விட்டுப் போகிறார்கள்.

இல்லையென்றால், இப்படிப்பட்ட குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளவென்றே அமைக்கப்பட்டுள்ள 'நிர்ச்' அல்லது 'க்ரெச்' எனப்படும் அலுவலகநேர குழந்தைகள் காப்பகத்தில் விடுகிறார்கள். இப்படி முன்பின் தெரியாத இடத்தில் பல்வேறு குழந்தைகளுடன், யாரோ ஒருவரால் வளர்க்கப்படும் குழந்தை எப்படி இருக்கும் என்பதைப் பற்றிச் சிலரிடம் விவாதித்தோம் :

**ஸ்டெல்லா மேரீஸ் கல்லூரியில் சமூகசேவைத் துறையின் தலைவி திருமதி ராதாபால்—**

ஒரு பெண் தாயாகித் தன் குழந்தையை நேரடிக் கவனத்துடன் வளர்ப்பதற்கு இணையானது வேறொன்றுமில்லை. தாய் தன் குழந்தையை வளர்ப்பது போல வேறு யாராலும் வளர்க்க முடியாதுதான். ஆனால் காலம் மாறி போய் விட்டது. கணவன், மனைவி இருவரும் சம்பாதித்தால்தான் காலம் ஓட்ட முடிகிறது. வேலைக்குப் போகும் எல்லாத் திருமணமான பெண்களுக்கும், மாமியார் இருப்பதில்லை. அப்படி இருக்கும் போது அவர்களின் குழந்தைகளை யார் கவனிப்பது?

வேலைக்காரியை அமர்த்திப் பார்த்துக் கொள்ளச் செய்வது நான் பார்த்த வரைக்கும் சரியாக அமைவதில்லை. எனக்குத் தெரிந்த ஒரு அலுவலகம் போகும் பெண், தன் குழந்தையைப் பார்த்துக் கொள்ள ஓய்வு பெற்ற ஒரு நர்ஸை அமர்த்தினாள். அவள் ஒரு சோம்பேறி. நர்ஸானதால் மருந்துகளைப் பற்றிய விவரம் தெரியும். அனுபவப்பட்ட இந்த நர்ஸ் குழந்தைக்குக் கொடுக்கும் அள



மகாலக்ஷ்மி

விற்கு மயக்க மருந்து கொடுத்து விடுவாள். அது தூங்கிக் கொண்டே இருக்கும், அம்மா திரும்பி வரும் வரை. நர்ஸுக்கும் தொல்லையே இல்லை. ஆனால் இது நீண்ட காலம் நீடிக்கவில்லை. ஒருநாள் மருந்தின் அளவு அதிகமாகி விடவே அந்தத் தாய் ஆபீஸிலிருந்து வந்த போது தன் குழந்தையின் பிணத்தைத்தான் பார்த்தாள்.

இன்னொரு பெண் தன் இரு சிறுவர்களையும் வீட்டிற்குள் வைத்துப் பூட்டி விட்டுப் போவாள். அவர்களுக்குத் தேவையான உணவு எல்லாவற்றையும் வைத்து விடுவாள். அந்தக் குழந்தைகள் வேண்டிய போது சாப்பிட வேண்டியதுதான். அதே அறைக்குள்ளேயே சாப்பிட்டு, அங்கேயே அசுத்தம் செய்து கொண்டு, ஜன்னலிலிருந்து கைதிகளைப் போல பார்த்துக் கொண்டு நிற்பார்கள்.

இதுபோன்ற துன்பங்கள் எல்லாம் ஒழிய வேலைக்குப் போகும் பெண்களுக்குச் சிறந்த இடம் இந்த 'கிரீச்'தான். நல்ல சுகாதார வசதியுடன் உள்ள இந்தக் 'கிரீச்'களில் இருக்கும் குழந்தைகளுக்கு போலியோ டிராப்ஸ், ட்ரிபுள் ஆண்டிஜன் போன்றவை தவறாமல் போடப்படுகிறது.

வேலைக்குப் போகும் பெண்களும், ஐயோ குழந்தைகள்என்னசெய்கிறார்களோ, காலைத் திறந்தார்களோ, தண்ணீர் அண்டாவில் தலையை விட்டார்களோ என்று பயப்பட வேண்டாம். பாதுகாப்புடன் குழந்தைகள் இருக்கிறார்கள், தேவையானால் உடனடியாகப் போய்ப் பார்க்கலாம் என்ற நம்பிக்கையில் வேலையில் கவனம் செல்லும். குழந்தைகளுக்கும் தாய் அருகிலேயே இருக்கிறாள் என்ற நம்பிக்கையில் தன்னம்பிக்கையுடன் வளரும்.

'கிரீச்' சைத் தங்கள் அலுவலகத்திலேயே கொண்டுள்ள ஏஜிஎஸ் அலுவலகத்தில் பணியாற்றும் திருமதி மகாலக்ஷ்மி சீதாராமன்—





இந்திரா

சாந்தி

இந்தக் 'கிரீச்' எங்களுக்கெல்லாம் ஒரு வரப்பிரசாதம் என்றுதான் சொல்லணும். நான் என்னுடைய குழந்தையை ஐந்தாவது மாதத்திலிருந்தே 'கிரீச்'சில் விட ஆரம்பித்திருக்கிறேன். 'அம்மா பிள்ளை'யாக வளரும் சில குழந்தைகளைப் போல என் குழந்தை இல்லை.

சிறு வயதிலிருந்தே எல்லாக் குழந்தைகளுடன் பழகும் வாய்ப்பு இந்தக் குழந்தைகளுக்கும் ஏற்பட்டு விடுவதால் சமூகத்தில் மற்றவர்களுடன் சகஜமாகப் பழகும் பழக்கம் இப்பொழுதே வந்து விடுகிறது. பள்ளிக்குப் போகும் போது இவர்கள் அழ மாட்டார்கள்.

அது தவிர இப்படி அலுவலகத்துக்கு அருகிலேயே குழந்தைகள் இருப்பதால் தாய்ப்பால் கொடுக்கும் தாய்மார்களுக்கும் சௌகரியம். இதனால் எங்களுடைய அலுவலக கவனம் கலைந்து அடிக்கடி குழந்தைகளைப் பார்க்க வந்து விடுவோம் என்று சொல்வதெல்லாம் சரியில்லை. எங்கள் பொறுப்பை உணர்ந்தே நாங்கள் நடந்து கொள்கிறோம்.

•சாவித்ரி

மனோதத்துவ இயல் பேராசிரியையான எஸ்.ஐ. இ.டி. யில் பணியாற்றும் திருமதி சாவித்ரி —

நம்முடைய சமுதாயத்தில் கூட்டுக் குடும்பம் இப்பொழுது சிதைந்து விட்டது. பெரியவர்களின் அரவணைப்பில் வளரும் குழந்தைகள் பாதுகாப்புடனும், நம்பிக்கையுடனும் வளர்ந்தன. ஆனால் இன்றைக்கும் சிறு குடும்பமாக கணவன், மனைவி, குழந்தை எனத் தனியுரிமை கொண்டாடுகிறார்கள். இந்த மாதிரி குடும்பங்களில் கணவன், மனைவி இருவருமே வேலைக்கு என்று வெளியே போகும் போது குழந்தைகளை 'க்ரெச்'சில் விடுகிறார்கள்.

இப்படிக் 'க்ரெச்'சில் வளரும் குழந்தைகளிடம் கண்டிப்பாக, இதன் பாதிப்பு இருக்கத்தான் செய்யும். ஏனென்றால் ஒரு மனிதனின் வாழ்க்கையில் குழந்தைப் பருவமே அவனுடைய பொற்காலம் எனலாம். அது மட்டுமல்ல; ஒரு மனிதன் எப்படி உருவாகப் போகிறான் என்பதற்கும் இக் குழந்தைப் பருவம்தான் அடிப்படையாக அமையும்.

ஒவ்வொரு குழந்தைக்கும் அன்பு, பாசம், அரவணைப்பு, பாதுகாப்பு உணர்வு ஆகியவை தேவையாக இருக்கிறது. அவர்கள் கேள்விகள் கேட்கும் பருவத்தில், அவர்களின் கேள்விகளுக்குப் பதில் சொல்ல ஆட்கள் தேவையாக இருக்கிறது. இவற்றிற்கெல்லாம் 'க்ரெச்'சில் இடமில்லை. கடமையுணர்ச்சிதான் இருக்குமே தவிர, தாய்மையுணர்விற்கு அங்கு இடமேது?

ஆனால் சில 'க்ரெச்'சுகள் சேவையுணர்வுடன் செயல்பட்டு வருகின்றன. அப்படிப் பட்ட இடங்களில் வளரும் குழந்தைகளுக்கு வீட்டின் மற்றொரு மாற்றாக அது அமையும்.

'க்ரெச்'சில் வளரும் குழந்தைகள் பள்ளிப் பருவத்திற்குத் தயாராகி விடுகிறார்கள்; சோஷியலாகப் பழகுகிறார்கள் என்பதெல்லாம் பிரமைதான். பள்ளிக்குப் போகும் பருவம் மூன்று வயதுதான். அதற்கு முன்பு அவர்களுக்குத் தேவை அதிகக் கவனிப்பும், பாதுகாப்பு உணர்வும்தான். அந்தந்த வயதிற்குத் தேவையான உணர்வுகளைத்தான் அவர்கள் மனதில் பதிய வைக்க வேண்டுமே தவிர, அடுத்த பருவத்திற்கு இப்பொழுதே தயார் செய்வது சரியல்ல.

குடும்பத் தலைவிகளாக வீட்டிலேயே இருந்து குழந்தைகளைக் கவனிக்கும் சகோதரிகள் சித்ரா, சாந்தி-

ஆயிரம்தான் இருந்தாலும் தன்னுடைய குழந்தையை தாய் கவனிப்பது போல மற்றவர்கள் கவனித்துக் கொள்ள முடியாது. எங்கள் இருவருக்குமே குழந்தைகள் இருந்தாலும், என் குழந்தை அழும்போது உடனே பதைத்துக் கொண்டு ஓடுவது நான்தான்.

மிகவும் அவசியம் என்றாலொழிய குழந்தைகள் இருக்கும் தாய்மார்கள் வேலைக்குப் போவது சரியில்லை என்பது தான் எங்கள் எண்ணம்.

அதுவுமில்லாமல், அம்மாவின் நேரடியான அன்பிலும், பாசத்திலும் வளரும் குழந்தைகளே பெரியவர்களாகும் போது அவளை மதிப்பதில்லை. அப்படி யிருக்கும் போது இது போல இன்னொரு இடத்தில் வளரவிட்டால், 'நீயென்ன எனக்குப் பாலூட்டினாயா, தாலாட்டினாயா?' என்றுதான் கேட்கும். எதிர்காலத்தில் வரும் குழந்தைகள் பந்த பாசமே இல்லாமல் வளரும். இது ரொம்ப ஆபத்தானது.

பேட்டி : வி.மஞ்சுளா ரமேஷ்

---

## காரட் வடை



**தேவைகள் :**

காரட் 200 கிராம்
உளுத்தம் பருப்பு. 100 கிராம்
கடலைப்பருப்பு 100 கிராம்
எண்ணெ 200 கிராமம்
வெங்காயம் 2
பச்சைமிளகாய் 3
இஞ்சி 1 துண்டு
உப்பு தேவையான அளவு.

**செய்முறை**

உளுத்தம் பருப்பு, கடலைப்பருப்பு இரண்டையும் ஊறவைத்து, பச்சை மிளகாய், இஞ்சி, உப்பு இவைகளுடன் வடைக்கு அறைப்பதுபோல் கெட்டியாக ஆனால் லேசாக அரைத்து ஒரு பாத்திரத்தில் வைத்துக் கொள்ளவும். காரட்டைத் தோல் சீவி, சீவல் மனையில் துருவலாகத்துருவிக் கொள்ளவேண்டும். வெங்காயம், கறிவேப்பிலை இரண்டையும் தூள்ளாக அரிந்து கொண்டு, அரைத்த மாவில் அனைத்தையும் கலந்து, வாணலியில் எண்ணெ ஊற்றி, காய்ந்தவுடன் சிறுசிறு வடைகளாகத் தட்டி நன்கு வெந்தவுடன் எண்ணெயிலே வடித்து எடுத்துக் கொள்ளவும்.

சுவையும், சத்தும் நிறைந்த வடை என்பதை நீங்களே உணர்வீர்கள்! -ரமாமணி பார்த்தசாரதி

# பெண்களால் முடியுமா?

நம்முடைய சமுதாயம் மிக வேகமாக முன்னேறி வருகிறது. ஆண்களுக்குச் சமமாகப் பெண்கள் எல்லாத் துறையிலும் வர ஆரம்பித்து விட்டனர்.

இதைக் கண்டு பாராட்டி அவர்களை ஊக்கப்படுத்தும் ஆண்களும் உண்டு. 'இந்தப் பெண்களால் என்ன சாதித்துவிட முடியும்' என்று உதட்டைப் பிதுக்கும் சிலரும் உண்டு. பெண்களுக்குக் கடினமான பணி என்று சொல்லப்பட்ட இரண்டு துறைகளில் பெண்களுடன் பணியாற்றும் ஆண்களிடம் இதைப் பற்றிய கருத்தைக் கேட்டபோது-

'ஜர்னலிசம்' பட்டப்படிப்பு படித்து, பத்திரிகைத் துறையில் ஈடுபட்டுள்ள திரு ராமசப்பு அவர்கள் பெண்களைப் பற்றிக் கூறுகிறார்—

பெண்களுக்கு ஏற்ற தொழிலாகப் பத்திரிகைத் துறை இல்லை யென்பதைப் போல சில பத்திரிகைகள் நடந்து கொள்கின்றன. இதைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

பதில்: "பத்திரிகைத் துறை பெண்களுக்கு ஏற்றது அல்ல! 'பெண்களுக்கு ஏற்ற தொழிலாக பத்திரிகைத்துறை இல்லை என்பதைப் போல சில பத்திரிகைகள் நடந்து கொள்வதாகக் கூறுகிறீர்கள்"— இது அப் பத்திரிகை நிர்வாகங்கள் எடுத்துள்ள மிகச் சரியான முடிவு என்றே கூறுகிறேன்."

பெண்களின் சந்தர்ப்ப சூழ்நிலைகள் காரணமாக குறிப்பிட்ட நேரங்கள் மட்டுமே பெண்களால் பணி புரிய முடியும். அதற்கு நேர் மாறானது பத்திரிகை. எந்த நேரமும் எங்கும் சென்று செய்திகளைச் சேகரிக்கவும் தயாராக இருக்க வேண்டும். இப்படிப் பட்ட நிலையில் பெண்களால் வெற்றிகரமான பத்திரிகையாளராக விளங்க முடியுமா?

பதில்: தாங்கள் கேட்ட கேள்வியிலேயே என் பதிலும் அடங்கி விட்டது. பெண்களால் வெற்றிகரமான பத்திரிகையாளராக விளங்க முடியாது.

அதே போல பெண்களால் எல்லா இடத்திற்கும் போக முடியாது. ஒரு பத்திரிகையாளன் அப்படி எல்லாம் சொல்லிக் கொண்டிருக்க முடியாது, இல்லையா?

பதில்: "ஆமாம்! மிகச் சரியாகக் கூறினீர்கள்.

இப்படிச் சில மைனஸ் பாயிண்டுகள் இருப்பது போலவே, ப்ளஸ் பாயிண்டுகளும் இருக்கத்தான் செய்கின்றன. ஒரு பத்திரிகை, படிப்பவரின் மனதைத் தொடும் ஒன்று. பெண்களின் கருணையும், உலகை நோக்கும் தன்மையும், ஆண்களிலிருந்து வித்தியாசமானதாக இருக்குமாதலால், மனதைத் தொடும் விதத்தில் பெண்களால் பத்திரிகை நடத்த முடியும். இந்தக் கருத்தைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

பதில்: "எல்லாம் சரிதான்; 'பெண்களின் கருணை, உலகை நோக்கும் தன்மை எல்லாம் ஆண்களிலிருந்து வித்யாசப்படும் என்கிறீர்கள்'. பெண்களை ஆசிரியராகக் கொண்டு ஏராளமான பத்திரிகைகள் வெளி வந்து விட்டன. இதுவரை ஒன்று கூட மனதைத் தொடவில்லை. தொட்டதாகக் கேள்விப் படவுமில்லை."

பெண்களுக்கு பொறுப்பு அதிகம், இத்துறையில் குறிப்பிட்ட வேலையை, குறிப்பிட்ட நேரத்தில் முடிக்கும் பொறுப்புணர்ச்சி அவசியம் தேவை. எனவே இவ்வேலை பெண்களுக்கு மிகவும் பொருத்தமானதுமா?

பதில்: நானே பெண் பத்திரிகையாளர்களிடம் சிக்கித் தவித்த நேரமும் உண்டு.

பத்திரிகைத்துறை பட்ட மேற்படிப்பு சென்னை பல்கலைக் கழகத்தில் படிக்கும் போது எங்கள் துறை வெளியிட்ட பத்திரிகையின் ஆசிரியராக இருந்து ஒரு இதழை வெளியிட்டேன். உடன் படிக்கும் மாணவிகளின் கட்டுரைகளும் செய்திகளும், பத்திரிகையில் இடம் பெற வேண்டும் என்பது துறைத் தலைவரின் கண்டிப்பான உத்தரவு. பெண் பத்திரிகை யாளர்களின் நேரம் குறித்த — பொறுப்புணர்வு ஏற்கனவே எனக்குத் தெரியுமாதலால், அவர்கள் பெயரில் நானே கட்டுரைகளையும் செய்திகளையும் தயார் செய்து வைத்துக் கொண்டேன். சக மாணவிகளுக்கும் கட்டுரைகளை எழுதச் சொல்லி அறிவிப்பு கொடுத்துக் கடைசி நாளையும் குறிப்பிட்டேன்.

சொன்ன கெடு முடிந்து மூன்று தினங்களுக்குப் பின் "பெண் பத்திரிகையாளர்கள்" செய்திகளையும், கட்டுரைகளையும் அளித்தனர். அந்த நேரத்தில் பத்திரிகை முழுமை பெற்று அச்சாகிக் கொண்டிருந்தது.

அச்சான பத்திரிகையில் "பெண் பத்திரிகையாளர்கள்" பெயரில், வெளியான செய்திகள் யார் எழுதி



**விவாத மேடை**

பிரசுரித்துள்ள இருவரின் பேட்டியும் அவர்களின் சொந்தக் கருத்துக்கள்தான்! 'பெண்களால் நுழையாத முடியாத துறை' என்று சொல்லப்பட்ட துறைகளில் எல்லாம் பெண்கள் வெற்றிக் கொடி நாட்டி வருகின்றனர். அவர்களின் பதில்களும் அடுத்த இதழில் வெளியாகும். மங்கையர் மலர் வாசகிகளும் இங்கு பங்கு கொள்ளலாம். இங்கே உங்கள் கருத்துக்களை எழுதி அனுப்புங்களேன்.

யவை என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

இன்றுகூட சென்னையிலிருந்தும் மற்ற நகரங்களிலிருந்தும் வெளி வரும் தினசரிகளில் கடமையாற்றும் பெண் செய்தியாளர்களை 'ஏர் போர்ட் பீட்', 'கார்ப்பரேஷன் பீட்', ஆகிய இடங்களுக்குத்தான் செய்தி சேகரிக்க அனுப்பப்படுகின்றனர். இந்த இடங்களில் செய்தி சேகரிக்க அதிகத் திறமையோ, புத்திசாலித்தனமோ தேவையில்லை என்பதுதான் காரணம்.

இதே போல எடிட்டோரியலில் கடமையாற்றும் பெண் எடிட்டர்களுக்கும், 'ஆபிட்' எனப்படும் மரண அறிவிப்புப் போன்ற சிறு செய்திகள்தான் எடிட்செய்ய கொடுக்கப்படுகின்றன. இச் செய்திகளை எழுதவும் எடிட் செய்யவும் அதிக திறமை தேவையில்லை என்பதுதான் காரணம்.

---

**கட்டிடங்களை 'காண்ட்ராக்ட்' எடுத்து நடத்தும் இரு மூர்த்தியை, 'ஒரு பெண் வெற்றிகரமான பில்டிங் காண்ட்ராக்டராக இருக்க முடியுமா' என்று விசாரித்தபோது—**

''கண்டிப்பாக முடியாது. கட்டிடங்களைக் காண்ட்ராக்ட் எடுத்து நடத்துவது என்பது முழுக்க முழுக்க ஒரு பொருளைத் தயாரித்துத் தருவது போல. ஒரு தொழிற்சாலையில் பல தொழிலாளர்களை வைத்துக் கொண்டு நிர்வாகம் நடத்துவது போலத்தான் இதுவும்.

பெண்களால் இத்தொழிலில் ஈடுபட முடியாதா, அவர்களுக்குப் போதிய அறிவில்லையா என்று கேட்காதீர்கள். அவர்கள் அறிவிலே குறைந்தவர்கள் என்று நான் கூறவில்லை. ஆனால் உடலால் ஆண்களைவிடப் பலம் குறைந்தவர்கள். குடும்பத்தில் பல் வேறு சூழ்நிலைகளில் ஊடாட வேண்டியவர்கள்.

உதாரணமாக, இத்தொழில் முழுக்கக் கட்டிடம் கட்டும் தொழிலாளர்களுடன் போராட வேண்டிய தொழில். அவர்கள் அவ்வளவாகப் படிக்காதவர்கள். அவர்களிடம் மென்மையான பாஷையில் பேசிக் கொண்டிருக்க முடியாது. அவர்களுக்கு அவர்களின் நிலையில் நின்று அதட்டி வேலை வாங்க வேண்டும்.

அடுத்தது, கட்டிடம் கட்டுவதற்கு மரத்திலிருந்து, மண்ணிலிருந்து வெயில் மழை என்று பாராமல் அலைந்து வாங்க வேண்டும். எங்கே என்னென்ன மலிவாகக் கிடைக்கும் என்று அக்கு வேறு ஆணி வேறாகத் தெரிந்திருக்க வேண்டும்.

இதற்கெல்லாம் நேரம் காலமெல்லாம் பார்த்துக்கொண்டிருக்க முடியாது. ஒரு பில்டிங் காண்ட்ராக்டருக்கு ஒரு நாளின் இருபத்தி நாலு மணி நேரமும் போதாது.

அதேபோல சிமெண்டு மூட்டைகள்! இன்றைக்கு சிமெண்ட் கிடைப்பது எவ்வளவு கஷ்டம் என்பது அத்துறையில் உள்ளவர்களுக்குத் தெரியும். அதைத் திருடுபவர்கள் இரவு பன்னிரண்டு, ஒரு மணிக்குத்தான் தங்கள் கைவரிசையைக் காண்பிப்பார்கள். அந்த நேரத்தில் ஆண்களாக இருந்தால் போய் திடீர் சோதனை செய்யலாம்; திருடன் கையும் களவுமாக அகப்பட்டால் அதற்குத் தக்க தண்டனையும் கொடுக்கலாம். இவையெல்லாம் பெண்களால் முடியுமா?

அதே போல வேலை என்று வந்து விட்டால், குறிப்பிட்ட வேலை முடியும்வரை அங்கேயே உட்கார்ந்துவிட வேண்டியதுதான். உதாரணமாக தளம் கான்கிரீட் போடுகிறார்கள் என்றால் தளம் போட்டு முடியும் வரை அந்த வேலையை நடுவில் நிறுத்த முடியாது. இரவு எத்தனை மணியானாலும் தொழிலாளர்களுடன் தொழிலாளியாக நிற்க வேண்டியதுதான்.

இன்னொரு முக்கியமான விஷயம், இப்பொழுதெல்லாம் கட்டிடங்கள் நகரின் புறப் பகுதிகளில் அதாவது எக்ஸ்டென்ஷன் ஏரியாக்களில்தான் கட்டப்படுகின்றன. அங்கே ஹோட்டல்களோ மற்ற வசதிகளோ எதுவும் இருக்காது. கிடைக்கும் தண்ணீரைக் குடிக்க வேண்டியதுதான். வெயிலில் காய வேண்டியதுதான்.

பெண்கள் பில்டிங் காண்ட்ராக்டராக இல்லையா என்றால், இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் எல்லாம் இப்படி முழுவதும் இவ் வேலையில் ஈடுபடவில்லை. தனக்கு உதவியாளராக இருவரை அமைத்துக் கொண்டு, அலுவலகம் என்று ஒன்று வைத்துக்கொண்டு நடத்தி வருகிறார்கள். இத்துறையில் பெண்கள் அலுவலகப் பக்கம் ஈடுபடலாம். காண்ட்ராக்ட் எடுப்பதற்காகப் பல பேரை அணுகி, காண்ட்ராக்ட் பிடிப்பது, அலுவலகங்களில் சென்று அதிகாரிகளைக் கண்டு பேசுவது போன்ற பி.ஆர்.ஓ. (மக்கள் தொடர்புத் துறை) வாகப் பணியாற்றலாம்.

எல்லாவற்றுக்கும் மேலாக ஒன்றுண்டு. நம்முடைய நாட்டைப் பொறுத்தவரை பெண்கள் பாதுகாப்பை விரும்புபவர்கள். அவர்கள் 'திருமணம் என்பதே வாழ்க்கைப் பாதுகாப்புக்காக' என்று நினைப்பவர்கள். இதற்கு அவர்களைக் குறை சொல்ல முடியாது. நம்முடைய சமுதாயம் அப்படிப் பெண்களை வளர்க்கிறது. என்னதான் பெண்கள் வெளியுலகம் வந்து வேலைக்குக் கிளம்பினாலும் பாதுகாப்பான வேலையைத்தான் தேடுவார்களே தவிர, இது போன்ற 'ரிஸ்க்' வேலைகளை எல்லோரும் வரவேற்க மாட்டார்கள்.

—பவித்ரா



# வேலைக்குச் செல்லும் பெண்ணே!

அன்புள்ள வனிதா!

வேலைக்குப் புறப்பட்டுச் சென்றுவிட்டால் பிரச்னைகளும் கூடவே வரத்தான் செய்கின்றன. பஸ்ஸில், ஆபீஸில், வேலையில், தன்னந் தனியாய், திரும்பி வீடு வந்து பத்திரமாக சேரும்வரை தற்காலப், பெண்ணுக்கு அவளது துணிவுதான் துணை.

பெண்ணைத் தெய்வமாகப் பார்த்த பண்பாடு இன்று நம்மிடையே இல்லை. தாயாகவும், சகோதரியாகவும் கருதி வந்த மதிப்பும் குறைந்து விட்டது. இதற்கு ஒரு பெரியவர் கூறினார்: ''பொம்பளைங்க வெளியே வேலைக்குப் போட்டி போட்டுக்கிட்டு வந்துடறாங்க. வீட்லயே ஒழுங்கா இருந்தா ஏன் இப்படியெல்லாம் நடக்குது?''

''வீட்லயும் புகுந்து இப்படி எல்லாம் நடக்குதே அக்ரமங்கள். அதுக்கு என்ன சொல்றீங்க?'' அவர் பதில் கூறவில்லை.

வீட்டில் நீ தனியாக இருக்கிறாய் என்று பிறருக்குப் பிரகடனப்படுத்தாதே. அக்கம், பக்கம் தெரிந்தவர்களிடம் பேசும்பொழுது, வீட்டைப் பூட்டிவிட்டு, ஆபீஸ் போய்விடும் விஷயத்தை உரக்கப் பேசாதே. முடியுமானால் வாயிற் கதவை உட்பக்கமாகப் பூட்டி வேறு பக்கக் கதவு வழியாகப் பூட்டிக் கொண்டு வெளியே புறப்படு. 'பாம்பே லாக்' எனப்படும் பூட்டில்லாமல் தானாகப் பூட்டும் கருவியைக் கதவில் பொருத்தி விட்டால் மிக நல்லது. அதைவிட கதவை இழுத்து மூடு முன், சாவி கையில் இருக்கிறதா என்று முன்னெச்சரிக்கையாக இருப்பது அதைவிட நல்லது.

வீட்டை விட்டுப் புறப்படு முன் வேலைக்குப் போகும் அவசரத்தில் சரிவர யாவற்றையும் பூட்டினோமா என்ற சந்தேகத்துக்கு இடம் வைக்காதே. அலமாரி சாவி, வீட்டு சாவி யாவற்றையும் முன் ஜாக்கிரதையாகக் கையில் எடுத்துப் பையில் போடு!

அலமாரியிலேயே சாவியைத் தொங்கவிடுவது, அதனருகிலேயே சாவியை மாட்டுவது, படுக்கை அடியில் அல்லது அலமாரி மேல் பக்கம், மேஜை இழுப்பறை என்று அலட்சியமாகப் போடாதே. திருடர்களுக்கு இது போன்ற இடங்கள் யாவும் அத்துபடி. அதே போல அலமாரிகளின் மறுசாவிகளை வேறு ஒரு நம்பகமான இடத்தில் பத்திரப்படுத்தி வை. வீட்டில் வைக்க வேண்டாம்.

பஸ் பயணத்தில் கூட்டத்தின் இடிபாடுகளில் எத்தனையோ ரக வேதனைகள். உன்னை, இடிகளிலிருந்து காப்பாற்றிக்கொள்வதா, அல்லது கைப்பையை, 'பிக்பாக்கெட்' காரர்களிடமிருந்து காப்பாற்றிக் கொள்வதா? பெரிய தொல்லைதான். இருந்தாலும் இதைத் தவிர்க்க முடியாதே!

மகாத்மா காந்தி பெரிய அஹிம்ஸாவாதி தான். ஆனால் அவரே ''ஒரு பெண் தாக்கப்படும்பொழுது இம்சை, அஹிம்சை என்று கணக்குப் பார்க்கக் கூடாது. அவளுடைய முதல் கடமை, தன்னைக் காத்துக் கொள்ளுதலே, அந்த விநாடியில், அவளுக்கு எது பாதுகாப்பு என்று தோன்றுகிறதோ அந்த வழியில் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்'' என்கிறார்.

பல், நகம், எதை வேணுமானாலும் உபயோகிக்கலாம் என்பது அவர் கருத்து. நீ இந்தக் காலத்துப் படித்த பெண். கைப்பையிலிருந்து குடையை ஆயுதமாக உபயோகி. காலை உரசினால், உன் 'ஷு' காலால் மிதித்துவிட்டு ஒன்றும் தெரியாதவள் போல் அமைதியாக இரு!

வேண்டுமென்றே அடிக்கடி உரசினவன் மீது கூரான நகத்தால் லேசாகக் குத்து. இல்லை, குடை எதற்கு இருக்கிறது? பயமாக இருக்கிறதா? முறம் போல கைப் பையைக் குறுக்கே சுவராக வைத்துக் கொள். பழமுறத்தால் சாடினளே ஒருத்தி அந்த நினைவு தானாகவே உரசல் மன்னனுக்கு ஏற்பட்டு விடும்.

இருட்டான இடங்களில், தனியான தெருக்களில் கட்டாயமாக நடக்காதே. ஜனசஞ்சாரமான பெரிய வீதிகள் வழியே நடந்து வா. அகால நேரமாகும் என்று தோன்றினால், நாலைந்து பேர்களுடன் பேசிக் கொண்டு ஒரு டாக்ஸி (செலவானாலும் பரவாயில்லை) பிடித்து வீடு திரும்பு. அல்லது உன் கணவர், சகோதரர் யாரையாவது துணைக்கு வரச் சொல்லு.

எல்லாவற்றுக்கும் மேலாக எந்தவிதமான பொன் நகையும் அணிந்து கொண்டு போகாதே. பெண்ணைப் பிறந்தவளுக்குப் புன்னகையே போதும் என்று சொல்லும் காலம் வந்துவிடப் போகிறது! அதனால் உன் கழுத்தில் உள்ள மெல்லிய செயினுக்காக உன் மெல்லிய கழுத்தை அநியாயமாக நெறிக்கும்படி நடந்து கொண்டு விடாதே!

மற்றவை பிறகு

நித்யாமூர்த்தி

# ராசி பலன் ஏப்ரல் '81



## மேஷம்

மேலதிகாரிகளுடன் உறவுகளைப் பலப்படுத்திக்கொள்ள இம்மாதம் சிறந்த மாதமாகும். இம்மாத நடுவில் நீங்கள் எதிர்பாராமல் வரும் உறவினர்களால் நல்ல சூழ்நிலையும், முன்னேற்றமான நட்பும் கிடைக்கும். வியாபாரத்தால் கிடைக்கும் லாபங்களுக்கும் செலவு இருக்கும் என்றாலும், வரவும் சரியாகவே இருக்கும். குடும்பத்துடன் மகிழ்ச்சியாகக் கழிக்க மூன்றாவது வாரத்தை ஒதுக்கி விடுங்கள்.

கணவரின்உறவினரால் குழந்தைகளுக்கு முன்னேற்றம் கிடைக்கும்.



## ரிஷபம்

நீங்கள் போட்ட திட்டங்களும், கணக்குகளும் கடந்த மூன்று மாதங்களாகத் தவறிக்கொண்டுதான் வந்திருக்கும். அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். ஏப்ரல் 12ந் தேதிக்கு மேல் நல்ல திருப்பம் ஏற்படும். உங்களின் வருத்தங்கள் மாறும் சூழ்நிலை உண்டு. உங்களுடைய முன்னேற்கும் திறனும், திட்டமிடும் பாங்கும் முன்னேற்றத்துக்கு எளிதாகக் கை கொடுக்கும்.

இளம் பெண்களின் வாழ்வில் குதூகலிக்கக் கூடிய மாற்றங்கள் விரைவில் ஏற்படும்.



## மிதுனம்

வரப்போகும் இரண்டு வாரங்களில் ஒரு இனிமையான செய்தி உங்களுக்காகக் காத்திருக்கிறது. உங்களின் நண்பர்களின் நல்ல நட்பினால் சூழப்பட்டு நீங்கள் மூன்றாவது வாரம் குதூகலமாகக் கழிப்பீர்கள். திடீரென்று ஏற்படக் கூடிய பயணத்தின் காரணமாக மேலதிகாரிகளிடமும், உறவினர்களிடமும் நல்ல மாற்றம் உண்டாகும். இதுவரை இருந்து வந்த தயக்கங்கள் நீங்கி, பிரகாசமான நாட்களுக்குச் செல்லும் காலத்துக்கு முன்னோடியாக இம்மாதம் அமையும்.

நீங்கள் கணவரின் மேல் வைத்திருக்கும் அன்பின் ஆழத்தினால் அவரிடம் முன்னேற்றமான சூழ்நிலையைப் பெறலாம்.



## கடகம்

இன்னும் இரண்டு வாரங்களுக்குக் கால தாமதங்களையும்,வீண்விரயங்களையும்தவிர்க்க முடியாது. உங்களின் உடல், மனோ பலத்தினால் அவற்றை வென்று அமைதியுடன் இருக்க முயற்சி செய்யுங்கள். முதல் வாரத்தில் முக்கியமான வேலைகளை முடித்து விடவேண்டும். இம்மாதக் கடைசியில் நிகழும் சம்பவத்தினால் மனோ பலம் கூடும். பணவரவின் காரணமாகக் குடும்பத்தில் மனக் கலக்கங்களும், குழப்பமான சூழ்நிலைகளும் அகலும்.

கணவருக்கு உறுதுணையாக இருந்து, அவருடைய செயல் முன்னேற்றத்துக்கு ஆதரவாக இருக்க வேண்டிய காலம் இது.



## சிம்மம்

அரசாங்கத் தொடர்புகளின் மூலமாக உயர் பதவி கிடைக்க வாய்ப்புக்கள் அதிகம். மேலதிகாரிகளிடம் நல்ல பெயர் கிடைக்கும். எழுத்தாளர்களுக்கும், கலைஞர்களுக்கும் அலைச்சல் அதிகமாக இருந்தாலும், பலன் நல்ல பலனாகவே கிடைக்கும். நாளை நாளை என்று தள்ளிப் போடாமல், செய்ய நினைத்த வேலைகளை இன்றே தொடங்குவீர்களானால் நல்ல எதிர்காலம் ஒன்று உங்களுக்காகக் காத்திருக்கிறது. தற்போதைய குழப்பங்கள் விளைவிக்கும் உறவுகளைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். விரைவில் கெட்ட சூழ்நிலைகள் அகன்றுவிடும்.

உங்கள் கணவருக்குக் கிடைக்கவிருக்கும் உயர்வினால் உறவினர்களிடையே உயரும் வாய்ப்பு விரைவில் ஏற்படும்.



## கன்னி

உயர்வும், தாழ்வுமாக மாறி மாறி நீண்ட காலமாக உங்கள் வாழ்வில் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. இச்சூழ்நிலை இன்னும் சில நாட்களே நீடித்திருக்கும். விரைவில் இந்நிலை மாறி ஒரே சீரான வாழ்க்கை அமைவதற்கான அனைத்து அறிகுறிகளும் உண்டாகும். இரும்பு சம்பந்தப்பட்ட வியாபாரம் செய்பவர்களுக்கு விரைவில் ஏற்படவிருக்கும் மாற்றங்களினால் உயர்நிலை கிடைக்கும்.

நேர்மையும், உயர் சிந்தனையும் கொண்ட உங்கள் கணவரின் சிறப்பு விரைவில் கௌரவிக்கப்படவிருக்கிறது.



## துலாம்

உணர்ச்சிவசப்பட்டோ பதற்றப்பட்டோ எந்த ஒரு முடிவையும் இம்மாதத்தின் முதல் வாரத்தில் எடுத்து விடாதீர்கள். உங்களுடைய நிதானமான போக்கினால் வெற்றி நிச்சயம் உங்களை வந்தடையும். வியாபாரத் தொடர்பில் ஏற்படவிருக்கும் புதிய நட்பினால் மந்தமான நிலைமை மாறி சுறுசுறுப்பும், வாழ்க்கையில் உயர்வும் கிடைக்கும். உங்களுடைய குடும்பத்தினரால் கட்டாயப் படுத்தப்பட்டுச் செய்யும் செலவுகள் அதிகமாகவே இருக்கும்.

கணவருக்கு ஏற்படும் செலவினங்களை உங்களுடைய திறமையினால் குறைத்து, வீண் விரயங்களைத் தடுக்கலாம்.



## விருச்சிகம்

இம்மாதத்தின் மூன்றாவது வாரம், உங்களுடைய எதிர்காலத்துக்கான திட்டங்கள் வகுப்பதற்கும், அதற்கான ஆயத்தங்கள் செய்வதற்கும் சிறந்த வாரமாகும். வியாபாரிகளுக்கும், கலைஞர்களுக்கும் நல்ல முன்னேற்றங்கள் உண்டாகும். வியாபாரத்தில் உண்டாகும் புதிய ஒப்பந்தங்களினால் நல்ல லாபம் கிடைக்கும். பொதுமக்கள் தொடர்புடையவர்களுக்குப் புகழும், ஜனங்களிடையே நல்ல பெயரும் கிடைக்கும் சூழ்நிலை உண்டு.

கணவரின் விளையாட்டுத் திறமை போன்ற அதிகப்படியான சிறப்புக்கள் வெளிக்கொணரப்படும் காலமாக இம்மாதம் இருக்கும்.

## தனுசு

கடைசி இரண்டு வாரங்களில் மனோ ரீதியாக எடுக்கும் முடிவுகளைச் சரியாகவும், நிதானமாகவும் எடுக்க முயற்சி செய்யுங்கள். ஏனென்றால் இப்போது எடுக்கும் முடிவே உங்களுடைய எதிர்காலம் இன்னது என்று நிர்ணயிக்கக் கூடியதாக அமைந்துவிடும். முதல் இரண்டு வாரங்கள் குடும்பத்தில் சுப நிகழ்ச்சிகளும், உறவினர்களின் வரவும் உண்டு. வழக்கமாக இருக்கும் வேலைகளைப் புறக்கணிக்காமல் செய்வதுடன், அதிகப்படியான பொறுப்புக்கள் வந்து சேருவதற்கான சூழ்நிலை இருக்கிறது.

கணவருக்கு வரவு அதிகரிப்பதுடன் நல்ல நட்புச் சூழ்நிலையும் கிடைக்கும்.



## கும்பம்

கூட்டங்களில் கலந்து கொள்வதற்கும், வெளியுலகத் தொடர்புகளை அதிகரித்துக் கொள்வதற்கும் இம்மாதம் சிறந்த மாதமாக அமையும். நீண்ட நாட்களாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த காரியம் ஒன்று விரைவில் கைகூடி வரும். அதனால் ஏற்படும் பலனால் பொருளாதார ரீதியான நல்ல முன்

வேற்றம் உண்டாகும். உடல் நலக் குறைவு ஏற்பட்டு விரைவில் சீர்பட்டுவிடும். நீண்ட தூரப் பயணங்கள் ஏற்பட வாய்ப்புண்டு. நீண்ட நாளைய உறவுகள் முறிந்து புதிய நண்பர்கள் கிடைப்பார்கள்.

கணவரின் உறவு முறையினரால் குறிப்பிடத்தக்க சொத்துக்கள் கிடைக்க வாய்ப்புண்டு.



**மீனம்**

உங்களுடைய பொழுதுபோக்கு வேலையினால் மற்றவர்கள் கவரப்பட்டு அதன் காரணமாகக் கூடுதல் வருமானம் கிடைக்கும்.. நல்ல உதவிகளும், எதிர்பாராத வரவுகளும் உண்டானாலும் செலவினங்களும் அதிகரிக்கவே செய்யும். பெரியவர்களுடன் ஏற்படும் மன வருத்தங்களின் காரணமாக குடும்பத்தில் அமைதியற்ற சூழ்நிலை ஏற்படும். லட்சியம், கொள்கை என்று உறுதியாக இருப்பதன் காரணமாக, முடிவுகளை எடுக்கும் போது கவனத்துடன் இருக்க வேண்டும்.

கணவருக்கு வரவிருக்கும் நல்லதொரு அழைப்பு உங்கள் குடும்பத்தின் பிரகாசமான எதிர்காலத்திற்கு வழி வகுக்கும்.'



**மகரம்**

உங்களுடைய தொழிலுடன் இணைந்திருக்கும் சில நண்பர்களினால் ஏற்படும் பிரச்னைகள் அமைதியற்ற சூழ்நிலையை உண்டாக்கினாலும், விரைவில் கஷ்டமான நிலைமை மாறிவிடும். பொழுது போக்குக் குதூகலங்களுக்கு நேரமில்லாமல் இம்மாதம் முழுமையாக உங்களை வேலைகள் பிடித்துக் கொள்ளும். ஆனால் உங்களுடைய கடினமான உழைப்பு மற்றவர்களால் புரிந்து கொள்ளப்பட்டு வரவேற்கப்படும் காலம் விரைவில் வரவிருக்கிறது.

உங்களுடைய கணவரின் நண்பர் ஒருவரால் குழந்தைகளிடையே மகிழ்ச்சி நிலவும்.

## இவர்கள்



## பத்மினி

எழுத்தாளர், ஓவியர், நடனமணி என ஒரு துறையை வி..ாமல் அனைத்திலும் தேர்ச்சி பெற்றிருக்கும் பத்மினி விளம்பர ஓவியத் துறையில் முதல் பெண்மணியாகவும் உள்ளார். நீ படத்திற்கு விளம்பர ஓவியராகப் பணியாற்றியுள்ளார்.

தமிழ், கன்னடம், மலையாளம், இந்தி, ஆங்கிலம், தெலுங்கு ஆகிய ஆறு மொழிகளை அறிந்த இவர் 'மஹிளா' எனும் தெலுங்கு மாத இதழுக்கு ஓவியம் வரைந்து வருகிறார். தமிழக அரசு 'வன விலங்கு விழா' வினை யொட்டி நடத்த ஓவியப் போட்டியில் முதல் பரிசு இவருக்குத்தானும். இத்தனையும் போதாதென்று சில மலையாளப் படங்களிலும் நடித்து வருகிறாராம்!

—கலா மூர்த்தி

# மாறுதல்

அசோகமித்திரன்

குறுநாவல்

"நிம்மி!"

பங்கஜம் கூப்பிட்டது வீடு முழுக்கக் கேட்டது.

"நிம்மி!"

பங்கஜம் மறுபடியும் கூப்பிட்டாள்.

சமையலறையிலிருந்து அம்மா சுருக்கமாக பதில் சொன்னாள்: "அவ குளிச்சிண்டிருக்கா."

பங்கஜம் தன் கணவனின் மேஜை டிராயரை முழு வேகத்துடன் மூடினாள். மேஜை விளிம்பில் தொத்திக் கொண்டிருந்த மைப்புட்டி புரண்டது. அது கீழே விழுவதற்குள் சட்டென்று கையை நீட்டி அதைப் பிடித்து நிறுத்தினாள். அதற்காகக் காத்திருந்தது போல அவளது நாடித் துடிப்பு சீறிக்கொண்டு உயர்ந்தது. பங்கஜம் கண்களை மூடினாள். ஒரு கணம் அந்த அறையே அசைந்து அசைந்து சுழல்வது போலிருந்தது.

பங்கஜம் மேஜையைப் பிடித்த வண்ணம் எழுந்து நின்றாள். இனி இந்தப் படபடப்பு அடங்குவதற்கு அரைமணிநேரமாவதுஆகும்.

அம்மா கீரை நறுக்கிக் கொண்டிருந்தாள். அவள் ஒரு பூகம்பத்தை எதிர்பார்த்திருப்பது பங்கஜத்துக்குத் தெரிந்தது.

பங்கஜம் அம்மா பக்கத்தில் போய் நின்று கொண்டாள். அவளால் இயன்ற அளவு

அமைதியான குரலில், ''இந்த நிம்மி ஏம்மா இப்படி இருக்கா?'' என்று கேட்டாள்.

நல்ல வேளையாக அம்மா பதிலேதும் தரவில்லை. இன்னும் கவனமாகக் கீரையை நறுக்கினாள்.

''அம்மா...''

இப்போது அம்மா தலையை நிமிர்த்திப் பார்த்தாள். பங்கஜம் அவள் பக்கத்தில் உட்கார்ந்தாள்.

''அம்மா, நிம்மியை அவருடைய டிராயரைக் குடைய வேண்டாம்னு சொல்லேம்மா''

''நிம்மிதான் குடைஞ்சிருக்காளா?''

''இல்லேன்னா வேற யாரும்மா அவர் டிராயரைத் திறக்கப் போறா? இன்னிக் காத்தாலே கூட எல்லாத்தையும் ஒழுங்கா அடுக்கி வைச்



மாஜிஸ்டிரேட்: ''இந்தக் கனவான் குடித்திருந்தார் என்று உங்களுக்கு எப்படித் திட்டவட்டமாகத் தெரியும்?''
கான்ஸ்டபிள்: ''அவருடைய கார் நடு வழியில் மக்கர் செய்தபோது நான் போய்த்தள்ளி ஸ்டார்ட் செய்வித்தேன். அதற்கு உடனே அவர் 'உங்க ரெண்டு பேருக்கும் தாங்ஸ்' என்றார்!''
- அ. வா. தேவன்

சிட்டுப் போயிருக்கார். அதுக்குள்ளே இவ கலைச்சுப் போட்டிருக்காளே.''

''அவ எதுக்குக் கலைச்சுப் போடப்போறா?''

பங்கஜம் ஒரு கணம் தயங்கினாள். பிறகு, மெதுவாக, ''அவ சில்லறை எடுக்கிறா!'' என்றாள்.

அம்மா கீரை நறுக்குவது ஒரு கணம் நின்றது. அவள் மறுபடியும் நறுக்கத் தொடங்கிய போது ஒரு சொட்டுக் கண்ணீர் நறுக்கிய கீரை மீது விழுந்தது.

பங்கஜம் அம்மாவின் தோளைப் பிடித்துக் கொண்டாள். ''அழாதேம்மா. உன்னை அழ விடறதுக்கா அப்பா போனப்புறம் உங்களை இங்கே கொண்டு வந்து வைச்சிண்டிருக்கேன்?''

சிறிது நேரம் கீரை நறுக்கும் சப்தம் மட்டும் வந்து கொண்டிருந்தது.

நிம்மி குளித்துவிட்டு வந்தாள். அம்மாவையும் பங்கஜத்தையும் ஒரு பார்வையில் பார்த்துவிட்டு முன் அறைக்குச் சென்றாள்.

பங்கஜம் அம்மாவின் காதோரமாகச் சொன்னாள்: ''அம்மா, நான் அவளைப் போய் விசாரிக்கிறேன். இப்படியே விட்டா நம்ம எல்லோருக்குமே அப்புறம் ரொம்பக் கஷ்டமாப் போயிடும். நீ மட்டும் அழாதேம்மா. நானும் ஒண்ணும் பண்ணிட மாட்டேன்.''

பங்கஜம் எழுந்து முன் அறைக்குச் சென்றாள். நிம்மி பாவாடையையும் சட்டையையும் உடுத்திக் கொண்டு கண்ணாடி முன் நின்று கொண்டிருந்தாள்.

பங்கஜம் மிகவும் நிதானமாக, ''நிம்மி, இன்னிக்கு அத்திம்பேர் டிராயரை எதுக்குத் திறந்தே?'' என்று கேட்டாள்.

நிம்மி பதிலே பேசாமல் நின்றாள்.

''ஏண்டி மறுபடியும் மறுபடியும் அவர் டிராயரைத் திறந்து காசு எடுக்கறே?''

''நான் ஒண்ணும் திருடலே.''

''உன்னை யாரு திருடின்னு சொன்னா? யாருக்கும் தெரியாம அவர் டிராயரை ஏன் திறக்கறே?''

''நான் ஒண்ணும் திறக்கலே.''

''திறக்காம அவர் டிராயர்லே இருக்கிற சில்லறை டப்பியிலே காசு எப்படிக் குறைஞ்சிருக்கும்?''

''காசு குறைஞ்சா நான்தான் எடுத்தேனா? நீதான் எல்லாத்தையும் பூட்டிப் பூட்டி வைக்கறயே?''

''அதுக்குத்தான் பூட்டாத அவர் டிராயரைத் திறக்கணுமோ?''

''எனக்கு ஒண்ணும் தெரியாது, போ.''

பங்கஜம் இன்னமும் நிதானம் இழக்காமல் இருந்தாள். அதே அறையில் நிம்மியின் புத்தகங்கள் வைத்திருக்கும் இடத்துக்குச் சென்றாள்.

''என் புத்தகங்கள் கிட்டப் போகாதே'' என்று நிம்மி சொன்னாள்.

''என்னதான் வெச்சிருக்கே பார்க்கறேனே.''

நிம்மி பாய்ந்து வந்தாள். ஆனால் அதற்குள் பங்கஜம் நிம்மியுடைய பள்ளிக்கூடப் பையை எடுத்து விட்டாள்.

''அதை எடுக்காதே! அதை எடுக்காதே!'' நிம்மி இரண்டு கைகளாலும் பையைப் பிடித்து இழுத்தாள். பங்கஜம் அதற்குத் தயாராக இருந்தாள்.

''ஒண்ணும் எடுத்துக்க மாட்டேன். என்ன இருக்குன்னுதான் பார்க்கலாமே.''

''விடு விடு! நீ ஒண்ணும் என் சாமானெல்லாம் தொட வேண்டாம்.''

பங்கஜம் உறுதியாகப் பையில் கையை விட்டு நிம்மியுடைய ஜாமெட்ரி பாக்ஸை எடுத்தாள்.

நிம்மி பையை விட்டுப் பங்கஜத்தின் கையைப் பிடித்தாள். பங்கஜம் திமிறிக் கையை விடுவித்துக் கொண்டு அந்தத் தகரப் பெட்டியைத் திறந்தாள். பென்சிலும் பேனாவும் ரப்பரும் காம்பஸூம் கீழே சிதறி விழுந்தன. கூடவே ஒரு ரூபாய் நோட்டும் கொஞ்சம் சில்லறையும் விழுந்தது.

அம்மாவும் உள்ளே இருந்து ஓடி வந்தாள்.

''நான் சொல்லலேம்மா? இதைப் பாரு!'' என்று பங்கஜம் சொன்னாள். அம்மா நிம்மியின் முகத்தைப் பார்த்தாள். நிம்மி பங்

கஜத்தின் முகத்தைப் பார்த்தாள். பங்கஜம் நிம்மியைப் பார்த்தாள். அப்படியே பயத்தில் உறைந்து போனாள். அப்போதே குளித்து விட்டு வந்து ஒரு பன்னிரண்டு வயதுப் பெண்ணின் முகத்தில் இவ்வளவு துவேஷம் வெளிப் படக்கூடும் என்று பங்கஜம் எண்ணவில்லே.

''இது என்னடி நிம்மி!'' என்று அம்மா தான் அந்த நேரத்தின் இறுக்கத்தைக் குறைத்தாள்.

''உனக்கு ஒன்னுமில்லே போ'' என்று நிம்மி பதில் சொன்னாள்.

''உனக்குக் காக வேணும்னு என்னேக் கேட்கக் கூடாது?'' என்று பங்கஜம் கேட்டாள்.

''ஆமாம், கேட்டா உடனே கொடுத்துடுவே.''

''நீ எப்போக் கேட்டு நான் கொடுக்காம இருந்தேன்?''



நிம்மி கீழே விழுந்த சில்லறையை எடுத்து பங்கஜம் இருந்த திசையில் வீசி எறிந்தாள். ''போடி, எடுத்துண்டு போடி.''

''நிம்மி, இது நன்னாவே இல்லே...'' பங்கஜம் சொன்னாள்.

''எது நன்னா இருக்கு? நான் நன்னாவா இருக்கேன்? எல்லாருமே என்னை ஓட ஓட விரட்டறேளே!'' நிம்மி ஓவென்று அழ ஆரம்பித்தாள். அம்மா நிம்மியைக் கட்டிக் கொண்டாள். பங்கஜம் அங்கிருந்து விலகிச் சென்றாள்.

பங்கஜம் மீண்டும் அந்த அறைக்கு வந்த போது அம்மா சமையலறைக்குச் சென்றிருந்தாள். நிம்மி ஒரு மூலையில் முழங்கால்களைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். பங்கஜத்துக்கு அவளைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. ஒரு வருஷமாக அப்பா படுத்த படுக்கையாக இருந்தபோது கூட நிம்மி எப்போதும் குதித்து ஓடிய வண்ணம் இருப்பாள். இந்த ரெண்டு மாதங்களில் பங்கஜம் வீட்டுக்கு வந்த பிறகு அவள் ஒரு முறைகூட சிரித்தபடி இருந்தது கிடையாது.

தரையில் நிம்மியின் புத்தகங்களும் சில்லறையும் அப்படியே சிதறிக் கிடந்தன. பங்கஜம் ஒரு கணம் தயங்கினாள். பிறகு எல்லாவற்றையும் எடுத்து ஒழுங்காக நிம்மியின் பையில் வைத்தாள். சில்லறையை எடுத்து ஜாமெட்ரி பெட்டியிலேயே பத்திரப்படுத்தினாள். பெட்டியையும் பையினுள் நுழைத்துப் பையை அலமாரியில் வைத்தாள். நிம்மியிடம், ''சரி, சரி. எழுந்து சாப்பிட்டு ஸ்கூலுக்குக் கிளம்பு'' என்றாள்.

நிம்மி அவள் பேசியதைக் காதில் வாங்கியதாகவே தெரியவில்லை. பங்கஜம் அவளருகில் போய் உட்கார்ந்து கொண்டு, ''எழுந்திரு. ஏற்கனவே நிறைய நாள் ஸ்கூலுக்குப் போக முடியாமல் போச்சு. எழுந்திரு'' என்றாள்.

நிம்மி முகத்தைத் திருப்பிக் கொண்டாள். பங்கஜம் சொன்னாள், ''இவ்வளவு சின்ன வயசிலே இப்படி முரண்டு பிடிக்கக் கூடாது, நிம்மி. உனக்கு அப்பா இல்லேன்னா எனக்கும் தான் அப்பா இல்லே. எனக்கு வருத்தம் இல்லையா? நீ நல்லபடியா படிச்சு முன்னுக்கு வரணும்னு அப்பாவுக்கு எவ்வளவு ஆசை இருந்ததோ அவ்வளவு எனக்கும் இருக்கு. கொஞ்சம் வருஷம் பொறுத்துக்கோ. நாம்ப எல்லாச் சமயத்திலேயும் நம்ப இஷ்டப்படியே இருந்துட முடியறதா? இதோ பார், பாப்பா அழறது. நீ அழாமே இருந்தாத்தான் எனக்கும் அதைப் போய்க் கவனிக்க முடியும்? நான் உன்னை ஒண்ணும் தப்பாச் சொல்லிடலே. நான் எல்லாத்துக்கும் அத்திம்பேருக்குப் பதில் சொல்லணும். உனக்கு என்ன வேணும்னாலும் என்னைக் கேளு. ஆனா யாருக்கும் தெரியாம அவர் டிராயரைத் திறக்காதேம்மா. இப்படி இன்னொருத்தர் டிராயரைத் திறக்கறது, பணம் எடுக்கிறது எல்லாம் நல்லதில்லே. அதைத் தப்பாத்தான் நினைச்சுப்பா. எழுந்திரு. போய் ஏதாவது சாப்பிட்டுட்டு ஸ்கூலுக்குப் போ.''

நிம்மி எழுந்தாள். பங்கஜத்துக்கு அந்த நேரத்தில் அது போதுமானதாக இருந்தது.

பங்கஜத்தின் குழந்தை அழுதவண்ணமிருந்தது. கைக்கெட்டும் தூரத்தில்தான் அம்மா உட்கார்ந்திருந்தாள். அம்மா அதைக் கவனிக்க ஒரு எத்தனமும் செய்யவில்லை.

அம்மா நிலைகொள்ளாமல் இருந்ததைப் பங்கஜம் சட்டை செய்யாமல் இருக்க முடியவில்லை. மணி ஐந்தரை ஆகியும் நிம்மி வீடு திரும்பவில்லை. பங்கஜத்துக்கும் வயிறை என்னவோ செய்தது.

''அவர் வந்தா காப்பி கலந்து தந்துடறயாம்மா. நான் போய்ப் பார்த்துட்டு வரேன்'' என்று அம்மாவிடம் சொன்னாள்.

அம்மா பங்கஜத்தை வெறித்துப் பார்த்தாள். பங்கஜம் துணிந்து, ''நல்ல டிகாஷன் சின்னத் தம்ளர்லே இருக்கு. இப்பவே வந்துட்டா நானே கலந்து கொடுத்துடுவேன். அவருக்கும் இன்னிக்கு நாழியாறது போலிருக்கு. நீ கொஞ்சம் பார்த்துக்கோ. நான் நிம்மி ஸ்கூல் வரைக்கும் போயிட்டு வரேன்'' என்றாள்.

பங்கஜம் செருப்பை மாட்டிக் கொள்வதற்கு முன்னால் முன்னறையில் தூங்கிக் கொண்டிருந்த தன் குழந்தையைப் பார்த்தாள். ஒரு வயதாகப் போகிற குழந்தை இன்னும் கையலகத்துக்கு மேல் வளர்ச்சியுறாமல் படுத்துக் கிடந்தது. அதுவும் விழித்துக் கொள்ளும் நேரம். ஆனால் அவள் திரும்பி வந்துதான் அதைக் கவனிக்க வேண்டும். இப்போதெல்லாம் அம்மாவிடம் குழந்தை பற்றி அதிகம் எதிர்பார்க்க முடியவில்லை.

வெளியே போக்கு வரத்து பயமெழுப்பும் படியாக இருந்தது. அந்தச் சாலையில் எப்போதுமே பஸ்கள் அதிகம். இப்போது எல்லாவிதமான வண்டிகளும் பாதசாரிகளும் நிறைந்து இருந்தார்கள். பஸ்களில் ஏறி இறங்குமிடங்களில் கொத்துக் கொத்தாக மனிதர்கள் தொத்திக் கொண்டு தொங்கிய வண்ணம் பயணம் செய்து கொண்டிருந்தார்கள்.

பங்கஜம் பஸ்ஸுக்காகக் காத்திராமல் ஒரு சைக்கிள் ரிக்ஷாவைக் கூப்பிட்டாள். நிம்மியின் ஸ்கூல் ஒரு மைல் தள்ளியிருந்தது.

பள்ளிக்கூடம் காலியாக இருந்தது. மூன்றரை மணிக்கே வகுப்புக்கள் முடிந்துவிடும். ஹெட்மிஸ்டிரஸ் அறையில் மட்டும் பேச்சுக் குரல் கேட்டது. பங்கஜம் அங்கு போனாள்.

ஹெட்மிஸ்டிரஸுடன் இரு டீச்சர்கள் பெரிய தாள்களாக இரண்டு மூன்றை மேஜை மீது பரப்பிக் கொண்டு அதிலுள்ள கட்டங்களில் சில தகவல்களைக் குறித்துக் கொண்டிருந்தார்கள். பங்கஜத்தை ஒரு டீச்சர்தான் முதலில் கவனித்தாள். ''யாரைப் பார்க்கணும்?'' என்று கேட்டாள்,

''என் தங்கை இன்னும் வீடு வந்து சேரலே.''

''என்ன கிளாஸ்?''

''எட்டாவது. பி. செக்‌ஷன்.''

''எய்ட் பி — உங்க கிளாஸ்தான் டீச்சர்.''

இன்னொரு டீச்சர் பங்கஜத்தைக் கேட்டாள், ''இன்னும் குழந்தை வீட்டுக்கு வரலையா? இன்னிக்குக் கடைசி பீரியட் கேம்ஸ் கூட வேண்டாம்னு சொல்லிட்டமே? பேர் என்ன?''

''நிர்மலா. கே. நிர்மலா.''

''நிர்மலாவா?'' இப்போது ஹெட் மிஸ்டிரஸ்கூடப் பங்கஜத்தைவிசேஷமாகப் பார்த்தாள்.

''அவ ஃபாதர் கூட சமீபத்தில் தவறிவிட்டாங்களே—''

''ஆமாம், அவதான். நான் அவ அக்கா.''

இப்போது இரு டீச்சர்களும் எழுந்து பங்கஜத்தருகே வந்தார்கள். இரண்டாவதாகப் பேசிய டீச்சர் சொன்னாள், ''இத்தனே நேரத்துக்கு வீட்டுக்குப் போய்ச் சேர்ந்திருப்பா. நாங்க கிளாஸ் விட்டப்புறம் கூட கிரவுண்டிலே விளையாடிண்டிருந்ததைப் பார்த்தேன். நீங்க அவளுக்குச் சொந்த அக்காவா?''

''ஆமாம். எனக்கும் அவளுக்கும் நிறைய வருஷம் வித்தியாசம். அவ இந்த ஸ்கூலுக்கு வந்தப்போ எனக்குக் கல்யாணம்கூட ஆயிடுத்து. அதுதான் இங்கே வர சந்தர்ப்பமில்லே. நான் போய்ப் பார்க்கிறேன், வீட்டிலே.''

பங்கஜம் ஓரடி வைப்பதற்குள்ளே அந்த டீச்சர் சொன்னாள். ''நிர்மலா மேலே இங்கேயே கம்ப்ளெயிண்ட்ஸ் இருக்கு. கொஞ்சம் கண்டிச்சு வையுங்கோ.''

பங்கஜத்துக்குத் திக்கென்றது. ''என்ன கம்ப்ளெயிண்ட்?'' என்று கேட்டாள்.

''படிப்பு எல்லாம் நன்னாத்தான் படிக்கிறா. ஆனா நீங்க வீட்டிலே அவகிட்டே நிறையப் பணம் தறீங்க போலிருக்கு—''

''அவ ஸ்கூலுக்குப் பணம் கொண்டு வராளா?''

''ஏதோ நாலணா எட்டணா கொண்டு வந்தா சரி. ஒரு நாளைக்கு நாலு பேருக்கு லிம்கா வாங்கிக் கொடுத்திருக்கா.''

''என்ன வாங்கிக் கொடுத்தா?''

''கூல் டிரிங்க்ஸ். ஒரு பாட்டில் ஒண்ணே கால் ரூபா.''

''அன்னிக்கு அவ பர்த் டே—''

''தினம் பர்த் டே வருமா?''

பங்கஜத்துக்குப் படபடப்பு மறுபடியும் வந்துவிட்டது. அப்பா போனதிலிருந்துஅடிக்கடி வர ஆரம்பித்து விட்டது. வெளியே வந்து ரிக்‌ஷாவில் ஏறிக் கொண்டாள். இன்னும் சிறிது நேரத்தில் விளக்கு ஏற்ற வேண்டியிருக்கும். தங்கையைக் காணவில்லை என்பதோடு தங்கையை இன்னும் வேறெதற்கெல்லாமோ கண்டித்து வைக்க வேண்டும். யார் கண்டிப்பது? பங்கஜம் கண்டித்தால் அதற்கு விளைவு நேர் மாறாக நிலைமை இன்னும் மோசமாகவல்லவா ஆகிவிடுகிறது?

நிம்மி இன்னும் வீடு வரவில்லை என்ற எண்ணத்தைக் காட்டிலும் நிம்மியை இனி எப்படிச் சமாளிக்கப் போகிறோம் என்கிறதே மேலோங்கி யிருந்தது. தெருவில் பாவாடை சட்டை அணிந்து மூன்று பெண்களை ஒரு சேரப் பார்த்தபோதுதான் பங்கஜத்துக்குத் தன் உடனடிக் கவலை மீண்டும் தலை தூக்கியது. அந்தப் பெண்களிலும் நிம்மி இல்லை. போக்கு வரத்து மிக அதிகமாக இருந்ததால் ரிக்‌ஷா ஓயாமல் மணிச் சத்தத்துடன் பிற மனிதர்கள் வண்டிகளினூடே வளைந்து

---

தென்னை மரத்தின் காயோ மட்டையோ, வளர்த்தவர்கள் வீட்டு மனிதர்கள் தலை மேலே விழுமா, விழாதா என்ற சர்ச்சை இருக்கட்டும்! எங்கள் வீட்டுத் தோட்டத்துச் சுரைக்காய் செய்த வேலையைக் கேளுங்கள்! தென்னை ஓலை கொண்டு பின்னிய வாசல் பந்தலை நம்பி ஒரு சுரைக் கொடி போட்டுவிட்டேன். அதுவும் நன்றாக வளர்ந்து படர்ந்து காய்க்க ஆரம்பித்துவிட்டது. வாசலில் படுத்திருக்கும் எங்கள் வீட்டு நாய் படுக்கும் இடத்துக்கு மேலே நேரே தலைக்கு மேல் பிஞ்சு விட்டு உட்பக்கமாக அது வளர ஆரம்பித்தது. காயை வேறு இடத்துக்கு மாற்ற முயற்சித்தால் ஒடிந்துவிடுமோ என்ற கவலை வந்தது. நாயை வேறு இடத்தில் படுக்கச் சொன்னாலும் அது பிடிவாதமாக அதன் இடத்தில்தான் படுப்பேன் என்றது. காயோ நாளொரு மேனியும் பொழுதொரு எடையுமாக பத்துக் கிலோ அளவுக்கு வளர்ந்து விட்டது. அந்தரத்தில் பந்தலுக்குள் நாய் இருக்கும் இடத்துக்கு நேரே அதன் தலைக்கு மேல் உறி போல கயிறு கட்டி அதை வளர்ப்பதைத் தவிர வேறு வழியே இல்லை என்ற நிலையில் அது வளர்ந்து விட்டது. என்றைக்கு நாயின் தலைமேல் அது அறுந்து விழுமோ என்று பார்ப்பவர்கள் கூறுவார்கள். ஒரு நாள் வாசலில் ஏதோ சலசலப்பு வந்தது போல இருக்கவே நாய் ஆவேசமாக எழுந்து ஓடியது. அது எழுந்து ஓடிய நேரம் தொபீர் என்று ஒரு சத்தம் கேட்டது. ஓடிப் போய்ப் பார்த்தால் அந்தச் சுரைக்காய் விள்ளாமல் விரியாமல், நாய் படுக்கும் அதே இடத்தில் உட்கார்ந்து சிரித்துக்கொண்டிருந்தது! கயிற்றை அறுத்துக் கொண்டு வீழ்ந்துவிட்ட சுரைக்காய் சில விநாடிக்கு முன் விழுந்திருந்தால் நாய் நிச்சயம் தப்பியிருக்க முடியாது!

—ரமணி ரங்கநாதன்



நெளிந்து போய்க் கொண்டிருந்தது. இதனால் வழியில் போவோரைச் சரியாகக் கவனிக்க முடியவில்லை. பங்கஜத்தின் கணவன் வீடு திரும்பியிருந்தால் அவளுடைய பளு இன்னும் அதிகமாகிவிடும்.

அவன் வீடு திரும்பி யிருந்தான். நல்ல வேளையாக அவன் உடனே கோபப்படும்படி ஒன்றும் நடந்திருக்கவில்லை. பங்கஜம் எதற்காக வெளியே சென்றிருந்தாள் என்று அவன் அறிந்திருக்கவில்லை என்று பங்கஜம் ரிக்ஷாக்காரனை அனுப்பிவிட்டு வீட்டுக்குள்ளே நுழைந்தபோது உணர முடிந்தது. ஆனால் நிம்மி இன்னும் வீடு திரும்பவில்லை.

குழந்தையை மடியில் கிடத்திப் பால் கொடுத்த வண்ணம் அம்மா பங்கஜத்தின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள். பங்கஜத்துக்கு ஒரு கணம் ஆறுதலாகவும் அதே நேரத்தில் எரிச்சலும் பொங்கியது. இந்த அம்மா அப்பாவை இன்னும் கொஞ்சம் அக்கறையுடன் கவனித்துக் கொண்டிருந்தால் அப்பா இவ்வளவு சீக்கிரம் செத்திருக்க மாட்டான், ஆனால் அம்மாவை மட்டும் குறை கூறி என்ன பயன்? அப்பாவும் ஒழுங்காக

''நீ எங்கேம்மா போவே? அவர் கிட்டே சொல்லி போலீஸ்லியாவது தேக்கச் சொல்லலாம்.''

''நான் ஒரு தரம் போய்ப் பார்த்துட்டு வரேன்.''

அம்மா தீர்மானமாக எழுந்து நின்றாள். ''ஒரு ரூபாய் சில்லறை கொடு'' என்றாள்.

''ஒரு ரூபாய் போறுமா? அவர் கிட்டே ஒண்ணும் சொல்ல வேண்டாமா?''

''நான் நாங்க இருந்த வீட்டுக்குப் போய்ப் பார்த்துட்டு வரேன். என்கிட்டே எல்லாம் பத்து ரூபாய் நோட்டா யிருக்கு.''

பாழ் நெற்றியோடு அம்மா கிளம்பிவிட்டாள். பங்கஜம் குழந்தையுடன் சமையலறையிலேயே இருந்தாள். ஒரு மூலையில் அம்மாவின் பூஜைப் பெட்டி இருந்தது. அது அம்மாவுக்கு அவள் அம்மா கொடுத்தது. அம்மா ஒரு பூ வைத்து நமஸ்காரம் செய்வது அந்தப் பெட்டிக்குத்தான். பங்கஜம் அந்தப் பெட்டியைப் பார்த்தாள். அவளுக்கு எப்படிப் பிரார்த்தனை செய்து கொள்வது என்று அந்த நேரத்தில் விளங்கவில்லை.

---

வீட்டில் நெய் சிறிதளவே இருக்கிறது. விருந்தினர் நிறையப்பேர் வந்துவிட்டார்கள். இந்த நெருக்கடியைச் சமாளிக்க ஒரு வழி: தேங்காய் நீர் அல்லது இளநீர் இருந்தால் அதைச் சுடவைத்து உருக்கிய நெய்யை அதனுடன் கலந்துகொள்ளுங்கள். நெய் கூடுதலாகி விடுவதுடன் சுவையும் குன்றாமல் இருக்கும்!

—ரமணி ரங்கநாதன்



---

வைத்தியம் செய்து கொள்ளவில்லை. ஒழுங்காக வைத்தியம் செய்து கொள்ள வைத்தியரிடம் போய்க் கொண்டிருக்க வேண்டும். வைத்தியர் சொன்ன பரிசோதனைகளை ஒழுங்காகச் செய்து கொண்டு அவர் எழுதிக் கொடுத்த மருந்துகளை ஒழுங்காகச் சாப்பிட்டுக்கொண்டுவரவேண்டும். அதற்குத் தாராளமாகப்பணம்செலவழிக்க வேண்டும். தாராளமாக இருக்க வேண்டும். அப்பாவிடம் பணம் தாராளமாக இருந்தால் அது உரிய செலவுக்குப் பயன்படாது. பத்து வயசுப் பெண்ணுக்குத் தினம் ஒரு ரூபாய் இரண்டு ரூபாய் கைச் செலவுக்குக் கொடுக்கிறவரிடம் பணம் தாராளமாக எப்படி இருக்கும்? இருந்தால்தான் என்ன பிரயோசனம்?

அம்மாவிடம் ஒன்றும் சொல்ல முடியாமல் போய்விட முடியாது. பங்கஜம், ''நிம்மி ஸ்கூல்லே இல்லே. அவ சிநேகிதி யார் வீட்டுக்காவது போயிருப்பாளா? உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டாள்.

அம்மா, ''நீ குழந்தையை வாங்கிக்கோ. நான் போய்ப் பார்த்துட்டுவரேன்.''என்றாள்.

''ஏன் வீட்டை எல்லாம் இருட்டா வைச்சிருக்கே? அம்மா இல்லேயா?'' என்று கேட்டபடி அவள் கணவன் அங்கு வந்தான்.

மடியில் குழந்தை இருந்ததால் பங்கஜம் எழுந்திருக்கவில்லை.

''உன் அம்மா எங்கே வெளியே போயிருக்கா?'' என்று அவன் மீண்டும் கேட்டான்.

''அவ பழைய வீட்டுப் பக்கம் போயிருக்கா'' என்று பங்கஜம் சுருக்கமாகச் சொன்னாள்.

''உன் தங்கையைத் தேடிண்டா?''

பங்கஜத்துக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவளில்லாதபோதே அம்மா சொல்லிவிட்டாளோ?

''அவளை அங்கே போய்த் தேட வேண்டாமே.பக்கத்துத்தெருவிலேதான்இருக்கா.''

''அவளை நீங்க பார்த்தேளா?''

''நான் ஆபீஸ்லேருந்து வரப்போ அங்கே தான் இருந்தா.''

''பின்னே ஏன் முன்னாலியே சொல்லலே?''

''நீ கேட்டியா?''

# FREE ENERGY FROM THE SUN



## UCAL
## Solar Water Heaters

The ideal water heating system for domestic applications, Hotels, Restaurants, Guest Houses, Canteens, Hospitals etc.

UCAL Solar Water Heater can meet more than 75% of your hot water requirements.

The economy of operating UCAL systems is evident from the fact that a total return of investment is possible within five years in most applications.

For determining specifications of the UCAL Solar Water Heater you need, contact:

**The Union Company (Motors) Pvt. Ltd.**
118, Mount Road,
MADRAS 600 002.

பங்கஜம் குழந்தையைத் தூக்கிக்கொண்டு எழுந்தாள். ''ஒரு நிமிஷம் குழந்தையைப் பார்த்துக்குங்கோ. நான் போய் அவளை அழைச்சுண்டு வரேன்.''

''நீ ஒண்ணும் அழைச்சுண்டு வர வேண்டாம். அவளே வந்துடுவா.''

பங்கஜத்துக்கு அழுகை வந்துவிடும் போலிருந்தது. அவன் சொன்னான், ''உங்க அம்மாக்கு வேறே பிள்ளை பொண்ணு யாரும் கிடையாது, அண்ணு தம்பி கிடையாது. உன்னோட வந்திருக்கா; எங்க மனுஷா ஏதாவது சொன்னாக்கூட அவ வேறே எங்கே போக முடியும்னு சொல்லலாம். அதைத் தான் சொல்லிண்டிருக்கேன். ஆனு எல்லாத்தையுமே உன் தங்கை கெடுத்துடுவா போலேயிருக்கு.''

நிம்மி அன்று வீடு திரும்பியபோது பங்கஜம் அவளை ஒன்றும் கேட்கவில்லை. அவள் திரும்பி வந்த ஒரு மணி நேரத்துக்குப் பிறகு அம்மா வீடு வந்தபோதும் என்ன விஷயம், என்னுயிற்று என்று கேட்கவில்லை. ஆனல் மறு நாள் அம்மா தன் பெட்டி படுக்கையைக் கட்டிக் கொண்டிருக்கும்போதுதான் முதல் நாளே எல்லாவற்றையும் பேசித் தீர்த்திருக்கலாமென்று தோன்றிற்று. அம்மா பழைய இடத்துக்கே திரும்பிப் போக ஏற்பாடு செய்து கொண்டிருந்தாள்.

''நீ எப்படி அம்மா தனியா இருந்து சமாளிப்பே? என் கிட்டே முன்னுலேயே ஒரு வார்த்தை சொல்லியிருக்கக் கூடாதா?''

''வேண்டாம் பங்கஜம். நான் எங்கே போயிடப் போறேன்? பஸ்ஸிலே ஏறினு அரை மணிலே போய்ச் சேர்ந்துடற இடம் தானே? நல்ல வேளையா அந்த வீட்டிலேயே இன்னொரு சின்ன இடம் இப்போ காலியாத்தான் இருக்கு. எனக்கும் நிம்மிக்கும் அது போதும். பழகின இடம். ஒண்ணும் கஷ்டம் இருக்காது.''

''கார்த்தாலே சொல்லியிருந்தா நான் அவர் கிட்டேயும் ஒரு வார்த்தை கேட்டிருப்பேனே? நீ திடுதிப்புன்னு போனு அவர் என்ன நினைச்சுப்பார்? மத்தவா தான் என்ன நினைச்சுப்பா? வேண்டாம்மா. இப்போ என்னுயிடுத்து, நீ இங்கேருந்து போயிட மாதிரி?''

''ஒண்ணும் ஆயிடலே. ஆனு ஒண்ணும் ஆயிடக் கூடாது இல்லையா? நீ எதுக்கும் கவலைப்பட்டுக்காதே.''

''என்னுலே எப்படிம்மா கவலைப்படாம இருக்க முடியும்? நான் நிம்மியைக் குத்தம் சொல்லறேன்னு நினைக்காதே. அவ பழக்க வழக்கமெல்லாம் அவ்வளவு சரியா யில்லே. அப்பா இருந்தப்ப மாதிரி வேறே. இப்போ அவளைக் கேக்கறதுக்கு யாரும் இல்லேன்னு என்னென்ன மாதிரி யெல்லாமோ ஆயிடும். இங்கேயாவது மாப்பிள்ளையைக் காட்டிக் கொஞ்சமாவது பயம் மரியாதை இருக்கிற மாதிரி செய்யலாம். நிம்மி நேத்தி சாயங்காலம் என்ன பண்ணிண்டிருக்கா தெரியுமா? பக்கத்துத் தெருவிலே இருக்கிற இரண்டு மூணு பேரோட சேர்ந்து சைக்கிள்விடக் கத்துகறேன்னு போயிருக்கா. வயசுக்கு வர பொண்ணு இப்படி யாரோடயோ சேர்ந்துண்டு பார்க்குக்கும் மைதானத்துக்கும் போனு நல்லதா?''

''அவ அப்பாவே அவளுக்கு இந்த வருஷம் சைக்கிள் வாங்கித் தரேன்னு தான் சொல்லிண்டிருந்தா—''

''அப்பா இருந்தா சரிம்மா. அப்பா இல்லாததுனலேதானே இந்தப் பேச்சே வரது. நீ அவளை வச்சுண்டு தனியா இருக்கிறது சரியில்லேன்னுதான் எனக்குத் தோணறது''

''எவ்வளவு நாளைக்கு? நான் தனியாப் போறது சரியில்லேன்னு எப்பவுமே தோணும இருக்கும்னு உனக்கு நிச்சயம் இருக்கா?''

பங்கஜம் பதில் பேசாமல் இருந்தாள்.

''வேண்டாம் பங்கஜம். இப்போ அந்த வீட்டிலேயே போய் நாங்க இருக்கிறதினலே பெரிய கஷ்டம் ஒண்ணும் வந்துடாது. இன்னும் இரண்டு மூணு வருஷம் அங்கே இருந்துட்டா அவ எஸ். எஸ். எல். சி. முடிச்சுடுவா. அதுக்கப்புறம் பார்த்துக்கறது.''

'உன் பெண் எஸ். எஸ். எல். சி. முடிப்பாளா' என்று பங்கஜத்துக்குக் கேட்கத் தோன்றிற்று. பிள்ளைகள் தத்தாரியாக இருந்து பிறகு திருந்திதலையெடுக்கலாம். ஆனல் ஒரு பெண்ணுக்கு அது சாத்தியமா?

''நீ எதுக்கும் அவர் வந்தப்புறம் ஒரு வார்த்தை சொல்லிட்டுப் போறதுதான் சரின்னு தோணறது.''

அம்மா இப்போது பேசாமல் இருந்தாள். ஆனல் சாமான்களை எடுத்துக் கட்டுவதை நிறுத்தவில்லை.

''அம்மா, நான் சொல்றதைக் கேக்க மாட்டியா?''

''வேண்டாம் பங்கஜம். அப்புறம் தாட்சண்யத்துக்கு இடமாயிடும். அவரும் ஏன் போறேள், இருங்கோன்னு சொல்லுவார். நான் இருந்துடுவேன். ஆனு மறுபடியும்

''எங்க அம்மா ஒரு டம்ளர் அளவு உப்பு கடனு வாங்கிட்டு வரச் சொன்னாங்க ...'' என்று கேட்டபடி வந்த சிறுமியைப் பார்த்து சிடுசிடுத்தாள் அண்ணி.

''கேவலம், உப்புலேயிருந்து ஹார்லிக்ஸ் வரை கடனு! ரொம்பத் தொல்லையாப் போச்சு! இப்படி கடன் கேக்க அனுப்பறதுக்கு ஒரு முழம் கயத்துல தொங்கலாம்!''

பயந்துபோய் திரும்பிப்போன சிறுமி சிறிது நேரங்கழித்து திரும்பி வந்தாள்.

''எங்க அம்மா கயிறு கொஞ்சம் இரவல் வாங்கிட்டு வரச்சொன்னாங்க!'' - மிஸஸ் கிரிஜானந்த



ஏதாவது ஆகும். ஒருத்தரை யொருத்தர் மூஞ்சியைத் தூக்கின்டு மூலைக்கு மூலையா உக்காந்துண்டிருக்கணும். அவாவா இடத்திலே இருக்கறதுதான் சரி.''

''சரி, எப்போ போகப் போறே?''

''மத்தியானமாத்தான்.''

''அப்போ நிம்மி? இங்கே வந்தா அவளை அனுப்பறதா?''

''வேண்டாம். அவ ஸ்கூல்லேந்து நேரே அங்கே வந்துடுவா.''

''அப்போ அம்மாவும் பொண்ணும் முன்னுலியே பேசி வைச்சுண்டேளா?''

அம்மா தலையைக் குனிந்து கொண்டாள். பங்கஜத்துக்கு ஆத்திரம் பொங்கியது. உடனேயே பச்சாதாபமும் ஏற்பட்டது. அம்மாவும் தன்னிடம் விஷயங்களை மூடி மறைத்து வைக்கும்படியல்லவா நேர்ந்து விட்டது!

அம்மா எல்லா சாமானையும் எடுத்துப் போகவில்லை. துணிமணி, படுக்கை, சமைத்துச் சாப்பிடத் தேவையான சில பாத்திரங்கள் – இவ்வளவுதான். அம்மாவே ஒரு ரிக்ஷா அழைத்து வந்தாள். அவள் போகும் போது பங்கஜத்தின் குழந்தையை ஒருமுறை முத்தம் கொடுத்துவிட்டுக்கூடப் போகவில்லை.

குழந்தை தவம் கிடந்து, சீமந்தம் நடத்திப் பிறந்த குழந்தை. பிறந்த வீடும் சென்னையிலேயே இருந்ததால் அநேகமாகப் பிரசவம் ஆகிறவரையில் பங்கஜம் அவள் கணவன் வீட்டில்தான் இருந்தாள். பிரசவம் முடிந்து ஒரு மாதம் முடிவதற்குள் மீண்டும் இங்கேயே வந்தாயிற்று. அம்மா இரு வீடுகளுக்கும் வந்து போய்க் கொண்டிருந்தாள். அப்போதுதான் அப்பாவுக்கு உடம்பு மோசமாகி யிருக்க வேண்டும். அம்மா பெண்ணையும் சரியாகப் பார்த்துக் கொள்ள முடியவில்லை. பேரக் குழந்தையையும் சரியாகப் பார்த்துக் கொள்ள முடியவில்லை. அங்கே அப்பாவையும் திண்டாட விட்டாயிற்று. அப்பா ஆஸ்பத்திரியில் இருந்த ஒரு மாதம் அம்மா மூன்று இடங்களுக்குமிடையே சுற்றிச் சுற்றி வந்தாள். அம்மாவின் அலைச்சலைப் பார்த்துச் சகிக்க முடியாமலேயே கூட அப்பா சீக்கிரமாகப் போய்ச் சேர முடிவு செய்து விட்டிருக்கலாம்.



சீமந்தக் குழந்தை சோனியாகத் தரையில் கிடந்தது. இன்னும் ஒழுங்காகக் குப்புறப் படுத்துக்கொள்ள முடியவில்லை. மல்லாந்து கிடந்து முதுகுத் தண்டுக்கடியில் கொப்புளங்கள் கூட வர ஆரம்பித்து விட்டது. சில குழந்தைகள் மெதுவாகத்தான் வளர்ச்சியுறும் என்று சொன்னார்கள். எப்போதும் படுத்தபடியே கிடப்பதால் பங்கஜத்தின் கணவனுக்குக் கூடக் குழந்தையிடம் அதிகம் கொஞ்ச முடியவில்லை.

அதிகம் கொஞ்சாமல் வளருவதே நல்லது. எல்லாரும் கொஞ்சிக் கொஞ்சித்தான் நிம்மி இப்போது நீர்க்கமாகப் பிடிவாதம் பிடிக்கிறாள்; திருடுகிறாள். அவள் இதோடு நிறுத்திக்கொண்டால் போதும்.

அம்மா வீட்டில் இல்லாதது பெரிய சிரமமாக இல்லை. படுக்கையிலேயே கிடக்கும் குழந்தையினால் வீட்டு வேலை செய்வதற்கு யாதொரு தொந்தரவும் கிடையாது. பங்கஜத்துக்கு ஓய்வு நேரம் நிறையக் கிடைத்தது.

ஓய்வு அதற்குரிய விளைவுகளையும் கொண்டு வந்தது. பங்கஜத்துக்குப் பகலில் என்று மட்டுமில்லை. இரவிலும் தூக்கம் வரவில்லை. கண்களை மூடினால் குளித்து ஈரம் படிந்த முகத்தோடு நிம்மி அவளைக் குரோதத்துடன் அன்று பார்த்த பார்வை அவள் முன் வந்து மிதந்தது.

அப்பா இருந்தபோதுகூட நிம்மி பங்கஜத்திடம் வாஞ்சை கொண்டவள் என்று கூற முடியாது. வயது முற்றிய பெற்றோர்களுக்குப் பெண்ணாகப் பிறந்தது அவளுக்கு ஏதோ ஒரு நிராதரவான உணர்வை ஏற்படுத்தியிருக்க வேண்டும். பங்கஜத்துக்குப் பெண்ணாக இருக்க வேண்டிய வயதுடையவள் தங்கையாக வந்து விட்டாள். பங்கஜத்துக்கே குழந்தை பிறந்தபோது பங்கஜத்துக்குத் தலை நரைக்கத் தொடங்கிவிட்டது.

யார் மீது குறைப்பட்டுக் கொண்டாலும், பங்கஜத்தால் கணவனைக் குற்றம் கூற முடியாது. அவன் உறவுக்காரர்கள், வேண்டப்பட்டவர்கள் ஏதாவது சங்கடம் விளைவிக்கும்படி பங்கஜத்தைப் பற்றிச் சொல்லும் பேச்சுக்களை அவன் காது கொடுத்துக் கேட்டதில்லை. இனிக் குழந்தை பிறக்காது என்று ஒரு மாதிரி அவன் மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்ட நேரத்தில் இந்தக் கையகலக் குழந்தை உதிக்கப் போகும் அறிகுறிகள் தோன்றின. பிரசவம் சாதாரணப் பிரசவந்தான். குழந்தைதான் பிறந்ததிலிருந்து இன்றுவரை ஒரே இடத்தில் கிடந்து கை கால்களை மட்டும் அசைக்கும் பொம்மையாகி விட்டது.

பங்கஜம் படுக்கையிலிருந்து எழுந்து விளக்கு ஸ்விட்சை அழுத்தினாள். மணி இன்னும் இரண்டுகூட ஆகவில்லை. குழந்தை நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தது. சற்றுத் தள்ளி கட்டிலில் அவளுடைய கணவன் முகமெல்லாம் போர்த்திக் கொண்டு படுத்திருந்தான்.

அந்த விளக்கை அணைத்துவிட்டு பங்கஜம் பாத்ரூம் சென்றாள். முன்பெல்லாம் இரவு விளக்குக்காகப் பாத்ரூம் விளக்கை எப்போதும் ஏற்றியபடியே வைத்திருப்பதுண்டு. அந்த வெளிச்சம் அவளது கணவனை முகத்தைப் போர்த்திக் கொண்டு தூங்க வைத்தது. குழந்தையின் உணவு பழக்க வழக்கம் சிறிது நிலைப்பட்டவுடன் அந்த விளக்கைப் போட்டு வைப்பதை நிறுத்தியாயிற்று. ஆனால் அவள் கணவனுக்கு இப்போது முகத்தை மூடிக் கொள்ளாவிட்டால் தூக்கம் வருவதில்லை.

பங்கஜம் தன் படுக்கை அருகில் உட்கார்ந்து கொண்டாள். அம்மா இருந்தால் எழுந்து என்ன விஷயம் என்று கேட்டிருப்பாள். குழந்தையைப் பார்த்துக் கொள்வதில் அம்மாவால் பெரிய ஒத்தாசை என்று கூற முடியாது. அம்மாவுக்குப் பல விஷயங்கள் மறந்து போய் விட்டன. குழந்தையைச் சரியாக எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டக்கூடத் தடுமாறுவாள். நிம்மியையே அவள் தடுமாற்றத்துடன் வளர்த்திருக்க வேண்டும்.

பங்கஜம் குழந்தையின் முகத்தைப் பார்த்தாள். அது வாயை ஒரு கோடியில் சிறிது வளைத்துக் கொண்டு தூங்கிக் கொண்டிருந்தது. இப்படி வாயைக் கோணிக் கொண்டு தூங்குவது அவளுடைய அப்பாவின் செயல். பங்கஜம் முன்னிலையிலேயே நிம்மி அப்பாவை இதற்காகக் கேலி செய்திருக்கிறாள். அவள் என்ன கேலி செய்தாலும் அப்பா அவளுக்கு அளவுக்கு மீறிய செல்லம் கொடுத்து வளர்த்தார். அதனால்தானோ என்னவோ

---

**காஸ் அடுப்பு வைத்திருப்பவர்களுக்கு:**

நெருப்புக் கொழுந்து அணைந்து சுமார் பத்து நிமிடங்கள் வரை சூடு இருக்கும். ஆகையால் கடைசிவரை அடுப்பை ஏற்றி வைக்க வேண்டும் என்பதில்லை.

ஒரு முறை அணைத்து மறுபடியும் ஏற்றுவதைவிட அணைக்காமல் ஒரு நிமிடம் வைத்துக் கொள்வதற்கு அதிகச் செலவு ஆகிறது. ஆகையால் அவசியமில்லா விட்டால் உடனே அணைத்துவிடுங்கள்.

சமையலின் ஆரம்ப நிலையில்தான் அதிகமான சூடு தேவையாக இருக்கிறது. ஆகையால் தண்ணீர் கொதிக்க ஆரம்பித்து சோறு பதம் காண ஆரம்பித்ததும் குறைந்த அளவு சூட்டுக்கு நெருப்புக் கொழுந்தைக் குறைத்து விடுங்கள். காஸ் செலவழிவது குறையும்.





## தேவையற்ற சதை குறைவதற்கான சில யோசனைகள்

வெள்ளை நிறமான வெங்காயத்தை நெய்யில் வறுத்து எடுத்து அதனுடன் பனங்கற்கண்டைச் சேர்த்துக் காலை, மாலை இருவேளைகளிலும் ஐந்துகிராம் சாப்பிட்டு வந்தால் - உடலில் தேவையற்ற சதை குறையும்.

2. வாழைத் தண்டின் சாறு எடுத்துப் பருகிவர எடை குறையும்.

3. வெறும் வயிற்றில் (காலையில் எழுந்தவுடன்) ஒரு டம்ளர் வெதுவெதுப்பான நீரில் ஒரு ஸ்பூன் தேனைக் கலந்து சாப்பிட்டு வந்தால் தொந்தி குறையும்.

4. தினசரி காலையில் ஒரு சுற்று (வாக்கிங்) நடை நடந்துவிட்டு வந்தால் உடல் பருமன் குறையும்.

- கோவை ஜெயா

---

அப்பா போன பிறகு அப்பா ஸ்தானத்தில் இருந்து யார் நிம்மியைக் கண்டித்தாலும் நிம்மிக்குத் துவேஷம்தான் பொங்கி எழுந்தது.

பங்கஜத்தின் கணவன் படுக்கையில் அசைந்து கொடுத்தான். தூக்கி வாரிப் போட்டவன் போல் எழுந்து கொண்டான். பங்கஜத்தைப் பார்த்து, ''நீயா உள் விளக்கைப் போட்டு வைச்சிருக்கே?'' என்று கேட்டான்.

''மறந்துட்டேன். இதோ அணைச்சுட றேன்'' என்று பங்கஜம் எழுந்தாள்.

''அப்போ தூங்கலியா நீ?''

அவன் படுக்கையிலிருந்து எழுந்து இறங்கி வந்தான். பங்கஜத்தின் முகத்தைப் பார்த்தவன் திடுக்கிட்டான். ''ஐயையோ, ஏன் உன் மூஞ்சி என்னமோ மாதிரி இருக்கு?''

''என்ன மாதிரி இருக்கு?''

''என்னமோ மாதிரி இருக்கே? என்னாச்சு? அம்மா வந்தாளா இன்னிக்கு?''

''இல்லையே. அம்மா அன்னிக்குப் போனவள் அப்புறம் வரவேயில்லே.''

''அதுக்காக வருத்தப்பட்டுண்டு இருக்கியா?''

பங்கஜம் படுத்துக் கொண்டாள். அவன் சொன்னான்: ''நானாக உங்க அம்மா கிட்டே ஒண்ணும் சொல்லலே. அவ இருந்துட்டுப் போறதுலே எனக்குப் பெரிய ஆட்சேபணை கிடையாது. யார் எந்த இடத்திலே இருந்தாலும் யாருக்காவது அசௌகரியம் இல்லாமப் போகாது. உங்கம்மா அவ்வளவு கோச்சுண்டு உடனே கிளம்பறேன்னு போயிருக்க வேண்டாம். அன்னிக்கு நான் அவளோட ஒண்ணுமே பேசலியே?''

''நீங்க பேசலே. நான்தான் நிம்மியோட பேசினேன். அது பெரிய சண்டையாகப் போயிடுத்து.''

''நினைச்சேன். அன்னிக்குத்தானே நாலு தடிப் பசங்களோட சைக்கிள் கத்துக்கறேன்னு இருட்டற வரைக்கும் வீட்டுக்கு வரலே அவ?''

விளக்கை அணைத்துவிட்டு அவன் படுக்கையில் படுத்துக் கொண்டான். பங்கஜத்துக்குக் கண்களையே மூட முடியவில்லை. மூடினால் பயம் கவ்விக் கொண்டது. அவளுடைய குழந்தை விழித்துக் கொண்டு அழுதால் கூட எவ்வளவோ நன்றாக இருக்கும். சின்னச் சின்னத் தொந்தரவுகளே பெரிய கவலைகளை மறக்கடிக்கப் போதும்.

பொழுது விடிந்தபோது சின்னச் சின்னத் தொந்தரவுகளே எல்லா நேரத்தையும் ஆக்ரமித்துக் கொண்டன. காலையில் கணவன் ஆபீஸுக்குக் கிளம்பிப் போன பிறகு பங்கஜம் சமையலை முடித்தாள். காரியர் எடுத்துப் போகும் ஆள் வருவதற்குள் கணவனுக்குச் சாப்பாடு எடுத்து வைத்தாள். வேண்டா வெறுப்பாகத் தன் சாப்பாட்டை முடித்துக் கொண்டாள். கணவன் சாப்பாட்டைக் கொடுத்தனுப்பிய பிறகு குழந்தையை எடுத்துக்கொண்டு வீட்டைப் பூட்டிக் கொண்டு வெளியே கிளம்பினாள்.

**அ**ந்த வீடு அப்பா இருந்தபோது தோற்றமளித்த மாதிரிதான் இப்போதும் இருந்தது. வாசற்படியை நெருங்கும்போது அப்பாவைக் கடைசியாகத் தூக்கிச் சென்ற காட்சிதான் அவள் கண் முன் வந்து நின்றது. வீட்டுக்காரர்கள் அப்பாவின் பிணத்தைக் கீழே ரேழியில் கிடத்த இடம் ஒதுக்கியிருந்தார்கள். அந்தக் குறுகலான ரேழியில் அப்பாவின் பக்கத்திலிருந்து துக்கத்தை அழுது தீர்க்கக் கூடச் சரியாக இடம் கிடையாது. அப்பாவும் அம்மாவும் முன்பிருந்த போர்ஷனைக் காலி செய்யும்போது சாமான்களை வெளியே எடுத்துப் போக எல்லோரும் சிறிது சிரமப்படத்தான் வேண்டியிருந்தது. அந்தக் குறுகலான ரேழி வழியாக மீண்டும் அம்மா அந்த வீட்டுக்குள் சென்றுடைந்து விட்டாள். பின் கட்டில் ஒரு சிறிய அறைக்குள் தன்னை அடக்கிக்கொண்டுவிட்டாள்.

பங்கஜம் அங்கு போனபோது அம்மா தரையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தாள். அம்மாவால் பகலில் தூங்க முடிந்தது.

''அம்மா!'' பங்கஜம் மெதுவாகக் கூப்பிட்டாள்.

அம்மா உடனே விழித்துக் கொண்டுவிட்டாள். ''எப்போ வந்தே?'' என்று கேட்டாள். உடனே, ''சாப்பாடாச்சா? இங்கே சாப்பிடறியா?'' என்றும் கேட்டாள்.

''இல்லே, நான் சாப்பிட்டுத்தான் கிளம்பினேன். நிம்மி ஸ்கூலுக்குப் போயிருக்காளா?''

''ஆமாம். நானே இன்னிக்கு நாளேக்கு வரலாம்னுதான் இருந்தேன். நீ வரது தெரிஞ்சா ரெண்டு மூணு சாமானை எடுத்துண்டு வரச் சொல்லியிருப்பேன். உடம்பு ஒண்ணுமில்லையே? குழந்தையை அப்படிப் பாயைப் போட்டுக் கீழே விடு.''

பங்கஜம் கீழே உட்கார்ந்தாள். ''உனக்கு இன்ஷூரன்ஸிலேருந்து ஒரு கடிதாசு வந்தது. இன்னொரு ஃபாரம் கையெழுத்துப் போட்டு அனுப்பணுமாம்'' என்றாள்.

''கொண்டு வந்திருக்கியா?''

''இதோ.''

அம்மா கடிதத்தை வாங்கிக் கொண்டாள். ''உனக்கு யார் வாசக் கதவைத் திறந்து விட்டா? வீட்டுக்காரரைப் பார்த்தியா?''

''இல்லையே. கதவு திறந்துதான் இருந்தது. நான் நேரே இங்கே வந்துட்டேன்.''

''மாப்பிள்ளை ஆபீஸிலே அவாளுக்கு ஏதோ காரியம் ஆகணும் போலேயிருக்கு. நேத்திக்குச் சொன்னா.... மாப்பிள்ளைக்குச் சாப்பாடு எடுத்து அனுப்பிச்சாச் சொல்லியோ''

''ஆச்சு. சைக்கிள் ஆள் வந்தப்புறம்தான் கிளம்பினேன்.''

''பஸ் உடனே கிடைச்சுடுத்தா?''

''உம். கொஞ்சம் கூட்டமா இருந்தது. ஆனா உடனே கிடைச்சுடுத்து.''

''இப்பல்லாம் எப்பவுமே பஸ்ஸிலே கூட்டமாத்தான் இருக்கு.''

''அன்னிக்கு நீ ஜாக்கிரதையா வந்து சேர்ந்துட்டயா? சாமானெல்லாம் சரியாயிருந்ததா? இங்கே கொஞ்சம் குளிரலே? கம்பளி இரண்டையும் எடுத்துண்டு வந்திருக்கலாம்.''

''எடுத்துண்டு வந்தாப் போச்சு.''

பங்கஜத்துக்குத் தான் பேச வேண்டியது எல்லாம் முடிந்து விட்டது போலிருந்தது. நல்லவேளையாக அம்மாவுக்கு இன்னும் ஓரிரண்டு விஷயங்கள் இருந்தன.

''சாஸ்திரிகள் வந்தா இந்த மாசத்திலேந்து இங்கே வந்துடச் சொல்லு. வந்தாரா அவர்?''

''இல்லே. வந்தாச் சொல்றேன். இல்லாட்டாச் சொல்லி அனுப்பறேன்.''

''அங்கே வந்தாச் சொல்லு. இல்லேன்னு நிம்மியை அனுப்பிச்சுத் தகவல் கொடுக்கச் சொல்றேன்.''

பங்கஜத்தின் குரலுக்குத் தெளிவு வந்தது. ''இதுக்கெல்லாம் நிம்மியைஅனுப்பிச்சுண்டிருக்காதே'' என்றாள்.

அம்மா பேசாமல் இருந்தாள்.

''நிம்மி போக்கு சரியாயில்லேம்மா.''

அம்மா சூள் கொட்டினாள். ''தோப்பனில்லாத குழந்தை. அதனுடைய கஷ்டம் அதுக்கேகூடத் தெரியலே.''

''அப்பா இல்லாமப் போயிட்டா என்னம்மா நம்பள்ளாம் இல்லேயா?''

''அவளுக்கு அப்படித் தோணணும் இல்லேயா?''

பங்கஜத்துக்கு மேலும் விஷயத்தைக்கிளறி அம்மாவை வேதனைக்கு உட்படுத்த விருப்பமில்லை. அவளுக்கு ஒரு விஷயம் ஆச்சரியமாக இருந்தது. அம்மாவுடைய அம்மாவுக்கும் அம்மாவின் கோலம் நிகழ்ந்தது. அப்போது வீட்டில் ஏகக் கூட்டம். நிறையப் பேர் உறவினர்களும் தெரிந்தவர்களும் அந்தப் பத்துப் பதினைந்து நாட்களுக்கு அங்கு கூடி அழுது அலறி காப்பி குடித்து விட்டுப் போனார்கள். அம்மாவின் அம்மா மாதக் கணக்கில் துக்கம் பாராட்டிக் கொண்டு மூலையில் விழுந்து கிடந்தாள். ஆனால் இப்போது அப்பா போனபோது முதல் நாள் பத்து பேர் வந்தார்கள். இரண்டாம் நாள் நான்கு பேர் வந்தார்கள். அப்பா செத்துப்போய் ஒரு வார காலத்துக்கெல்லாம் அம்மாவே எழுந்து பல விஷயங்களைக் கவனிக்கும் படியாகி விட்டது. நாலு மாத காலத்துக்குள் அம்மா காலம் காலமாக விதவையாக இருந்து அனுபவப்பட்டவள் போல் நடந்து கொள்கிறாள்!

வாசலில் ஐந்தாறு பையன்கள் பேசுவது கேட்டது. அம்மா சுவரில் மாட்டியிருந்த ஒரு படத்துக்குப் பின்னாலிருந்து ரேஷன் கார்டை எடுத்தாள். பங்கஜத்திடம், ''அடுத்த தடவை ஞாபகமாக கிரசின் ரயில் டின்னை எடுத்துண்டு வரணும். இங்கே வந்ததும் வராததுமா மண்ணெண்ணெய் வாங்கிக் கொண்டு வரவேண்டியிருந்தது. இப்போ எதிலே விட்டு வைச்சிருக்கேன் தெரியுமா? எவர்சில்வர் தூக்குலே'' என்றாள்.



''அம்மா! அம்மா!'' என்று கூப்பிட்ட படியே நிம்மி வந்தாள். வந்தவள் பங்கஜத்தைப் பார்த்தவுடன் உற்சாகம் குறைந்து அப்படியே நின்றாள்.

பங்கஜம் அதைக் கவனியாதது போல நிம்மியுடன் சகஜமாகப் பேசினாள். ''உன் டிக்ஷனரியையும் கலரிங் பாக்ஸையும் வைச்சுட்டு வந்திட்டியே? எடுத்துண்டு வந்திருக்கேன். உன்னுடைய பாவாடை தையல் விட்டிருந்ததையும் தைச்சு எடுத்துண்டு வந்திருக்கேன். ஸ்கூல் எல்லாம் சரியா நடக்கிறதா இல்லையோ? உன்னைத் தேடிண்டு மூணு ஃபிரண்ட்ஸ் நேத்திக்குக் கூட வந்தா. நீ பழைய வீட்டிலே இப்போ இருக்கேன்னு சொன்னேன். உன் கால் புண்ணு எல்லாம் ஆறிடுத்தா? பிளாஸ்டர் போட்டுக்கறே இல்லியா?''

மலேஷியாவில் விநாயகரை (விக்னேஸ்வரி) பெண் தெய்வமாக வழிபடுகின்றனர். தமிழகத்தில் சுசீந்திரம் கோவிலிலும் இம்மூர்த்தி வழிபடுகின்றனர்.



நிம்மி எதற்கும் பதில் சொல்லாமல் அறை மூலையில் அவளுடைய பள்ளிக்கூடப் பையை வைத்தாள். மறுபடியும், ''அம்மா'' என்று கூப்பிட்டுக் கொண்டே வெளியே போனாள்.

பங்கஜமும் எழுந்து அவளைப் பின் தொடர்ந்து போனாள்.

அம்மா மாடியில் குடியிருந்தவர்களிடம் பேசிக் கொண்டிருந்தாள். அப்பா படுத்த படுக்கையாக இருந்தபோதுகூட அவர்கள் தான் மிகவும் ஒத்தாசையாக இருந்தார்கள். பங்கஜத்தைப் பார்த்து அந்த அம்மாள், மலர்ந்த முகத்துடன், ''வா, பங்கஜம். நீ வந்ததே தெரியாது. இப்போத்தான் அம்மா சொன்னா. உடம்பு ஒண்ணுமில்லாம இருக்கயா?'' என்றாள்.

பங்கஜத்துக்குச் சிறிது கோபம் கூட வந்தது. இவர்கள் இவ்வளவு அன்பாக இருப்பதால்தான் அம்மா திரும்ப இங்கேயே வந்துவிடத் தீர்மானித்திருக்க வேண்டும்.

''பாருங்கோ. பொண் கூட வேண்டாம்னு எங்கம்மா உங்ககிட்டயே வந்துட்டா.''

''வந்தா என்ன? முதல்லியே கொஞ்சம் யோசிச்சுட்டு முடிவெடுத்திருக்கலாம். இந்த லோகத்தை விட்டுப் போய்ச் சேர்றவா போயிட்டா. இருக்கிறவா எங்கேயாவது இருந்துதானே தீரணும்? பட்டணத்திலே ஒரு இடம் விட்டு இன்னொரு இடத்துக்குக் குடி போறதுன்னு சாதாரணமாவா இருக்கு? பால் கார்டை மாத்தணும், ரேஷன் கடை மாத்தணும்; தபாலெல்லாம் ஒழுங்கா வந்து சேராது. எல்லாத்துக்கும் மேலே நிம்மியோட ஸ்கூல் வேற இருக்கு. இங்கேயிருந்தா நடந்தே போயிடலாம். வருஷம் நடுவிலே வேறே ஸ்கூல்லேயும் சேர்க்க முடியாது. நல்ல வேளை நீங்க ஸ்கூலை மாத்தலே.''

பங்கஜம் அவள் அம்மாவிடம், ''நான் கிளம்பட்டுமாம்மா? இப்போ கிளம்பினாத் தான் சரியாயிருக்கும்'' என்றாள்.

''இரு வரேன்'' என்று சொல்லி அம்மா, ''நிம்மி, கீழே போய் ஸ்டவ்வை மூட்டு'' என்றாள்.

ஆனால் நிம்மி தனியாகக் கீழிறங்கி வரவில்லை. அம்மாவும் இரு பெண்களுமாகத் தான் கிளம்ப வேண்டியிருந்தது. பங்கஜம் மாடிப் படியில் நிம்மியின் கையைப் பிடித்தாள். நிம்மி கையை உதறிவிட்டுக் கொண்டாள்.

காலையில் இறக்கி வைத்திருந்த டிகாஷனில் அம்மா பங்கஜத்துக்குக் காபி கலந்து கொடுத்தாள். பங்கஜம் தன் குழந்தைக்குப் பால் கரைத்துக் கொடுத்தாள். அவள் கிளம்பும்போது அம்மா, ''சித்த இரு. வீட்டுக்காரா முருங்கக் காய் பறிச்சுப் போட்டிருக்கா. நாலு வாங்கித் தரேன்.'' என்றாள்.

''நாலு முருங்கக் காயை வைச்சுண்டு என்ன பண்ணப் போறேன்? ஒண்ணுரெண்டு போறும்'' என்று பங்கஜம் சொன்னாள்.

அம்மா முருங்கைக் காய் வாங்கி வர அந்த அறையை விட்டகன்றவுடன் பங்கஜம் நிம்மியிடம் சொன்னாள். ''இன்னும் ரொம்ப கோபமா என் மேலே?'' என்று கேட்டாள்.

''உன் மேலே கோவிச்சுக்க நான் யாரு?''

''ஏன் இப்படிச் சொல்லறே? என்னைத் தான் நன்னாக் கோச்சுக்க முடியும்.''

இதைப் பங்கஜம் அன்பு தெரியத்தான் சொன்னாள். ஆனால் நிம்மிக்கு அப்படி ஒலித்ததாகத் தெரியவில்லை.

''அப்பா இருக்கிறவரைக்கும் இங்கேந்து இருக்கிறதை யெல்லாம் சுருட்டிண்டு சுருட்டிண்டு போனே? அப்பா செத்துப் போனப்புறம் கூடவா இங்கேந்து தூக்கிண்டு போகணும்?''

''என்ன பேசறே நிம்மி? நான் உன்னுதை ஒண்ணும் எடுத்துண்டு போக வரலே.''

''எடுத்துண்டு போக என்ன பாக்கி வைச்சிருக்கே? எல்லாத்தையும் தூக்கிண்டுதான் உன் வீட்டிலே அடைச்சு வச்சிருக்கியே? உன் காரியம் எல்லாம் ஆனப்புறம் எங்க இரண்டு பேரையும் தூக்கி அடிச்சுட்டே.''

''இதெல்லாம் சின்னப் பொண்ணு பேசற பேச்சா? யார் இந்த மாதிரியெல்லாம் பேசச் சொல்லித் தரு?''

''இருக்கிறதைத்தானே சொல்றேன்?, யார் சொல்லித் தரணும்?''

''அம்மா கூட இப்படிச் சொல்றாளா?''

''அம்மாக்கு என்ன தெரியும்? நீ வந்தா உனக்குக் கொட்டிக் கொட்டித் தரத் தெரியும்.''

அம்மா ஐந்தாறு முருங்கைக் காய்களுடன் வந்தாள். பங்கஜத்திடம் நான்கை நீட்டினாள். நிம்மி பங்கஜத்தையே உற்று நோக்கிய வண்ணம் இருந்தாள்.

''இதுக்கு எவ்வளவு ஆச்சம்மா?'' என்று பங்கஜம் கேட்டாள்.

''அவா விலை ஒண்ணும் சொல்லலை.''

''எனக்கு வேண்டாம்மா. நீ எனக்கே எல்லாத்தையும் செஞ்சுடறே. கொடுத்துடறேன்னு நிம்மி சொல்லறா. அவ சொல்றதிலேயும் நியாயம் இருக்கு.''

''என்ன சொல்றே நீ?''

''இதெல்லாம் நாம்ப எப்பவோ சொல்லிப் பேசியிருக்க வேண்டியதைத்தான் சொல்லறேன். நிம்மி பெரியவளானா அவளுக்கும் கல்யாணம் பண்ணி அவளும் குடித்தனம் செய்யற மாதிரிக்கு ஏற்பாடு பண்ணணும் இல்லியா? நீ உன் மூத்த பெண்ணுக்கே எல்லாத்தையும் கொடுத்துட்டேன்னு அப்புறம் பேச்சு வரக் கூடாது பாரு.''

''யாரு என்ன பேசினா? நிம்மி - கல்யாணத்துக்கு இன்னும் எவ்வளவோ வருஷம் இருக்கு. — நீ என்ன சொல்றே, பங்கஜம்? நானே ரொம்ப நொந்து போய்க் கிடக்கேன்—''

''நான் வித்தியாசமா ஒண்ணுமே சொல்லலேம்மா. எனக்கும் உன்னையும் நிம்மியையும் விட்டா என் மனுஷான்னு யார் இருக்கா? நம்ப ஒத்தரை ஒத்தர் முகத்தைப் பார்த்துக்க முடியாதபடி போகக் கூடாது இல்லையா? இப்படிச் சந்தேகம் வந்துட்டா அது எப்படி முடியும்? நீ எனக்கு நிறையச் செஞ்சுட்டே. இனிமே நான்தான் உனக்கும் நிம்மிக்கும் என்னாலே ஆனதைச் செய்யணும்.''

பங்கஜம் குழந்தையை எடுத்துக்கொண்டு கிளம்பி விட்டாள். அவளுக்குப் படபடப்பு மிகவும் அதிகமாக இருந்தது. கீழே விழுந்து விடுவோமோ என்று கூடப் பயமாகஇருந்தது.

பஸ்ஸுக்காகக் காத்திருக்க நேர்ந்தது. சிறிது ஆசுவாசம் பெறுவதற்கு வசதியாயிருந்தது. நிம்மி சந்தேகப்படுவது இந்த நேரத்தில் பொருத்தமில்லை என்றாலும் அவள் சந்தேகப்படுவதை முற்றிலும் அநியாயம் என்று சொல்லிவிட முடியாது. ஒரு பெண் புருஷன் வீட்டுக்கு எவ்வளவு கொண்டு போகிறாள் என்பதைப் பொறுத்துத்தான் அங்கே அவள் அந்தஸ்து நிர்ணயிக்கப்படுகிறது. பங்கஜத்தின் கணவன் எதற்கும் ஆசைப்படாதவனாக இருக்கலாம். ஆனால் எல்லாரையும் அப்படி எதிர்பார்க்க முடியுமா? நிம்மி பங்கஜத்தைப் போட்டியாளராக நினைப்பதற்கு அந்தப் பயம்தான் காரணமோ?

பங்கஜம் தன் குழந்தையை ஒரு முறை துணி விலக்கி முகத்தைப் பார்த்தாள். வருஷக் கணக்கில் காத்திருந்து பிறந்த குழந்தை பிறந்ததுதான் பிறந்தது, ஆணாகப் பிறந்திருக்கக் கூடாதா? இது பெரிதாகப் போகும் போது யார்மீது ஆத்திரப்படப் போகிறது? இதற்கும் பொறாமை, குரோதம், பயம் எல்லாம் வரும். ஒரு வயது வரை கிடத்திய இடத்தில் பொம்மையாக விழித்துக்கிடக்கும். குழந்தை பெரிதான பிறகு எல்லா துர்க்குணங்களையும் வளர்த்துக் கொள்ளும். தன்னையும் வருத்திக் கொண்டு பிறரையும் வருத்தத்துக்குள்ளாக்கும். அப்படியிருந்தும் குழந்தை வேண்டும் என்று தவிப்பவர்கள் இருந்து கொண்டே இருப்பார்கள். இப்படியொரு வாழ்க்கை தொடர வேண்டும் என்று கல்யாணம் செய்வார்கள், கல்யாணம் செய்துகொள்வார்கள். குழந்தை பெற்றுக் கொள்வார்கள்.

அன்று மீண்டும் பங்கஜத்தின் கணவன் அவள் முகத்தைப் பார்த்துத் திடுக்கிட்டான். ''உனக்கு என்ன ஆச்சு? உன்னை யார் அம்மா வீட்டுக்குப் போகச் சொன்னா?'' என்று கேட்டான். இரவெல்லாம் அவள் தூங்காமல் உட்கார்ந்திருப்பதைக் கண்டு மிகவும் பயந்து போனான். வைத்தியரிடம் அழைத்துச் சென்றான்.

அங்கே ஒரே கூட்டம். வைத்தியரிடம் காட்ட அழைத்து வரப்பட்டவர்கள் பாதிக்கு மேல் பெண்கள். ஓரிருவரைத் தவிர எல்லாரும் மிகவும் சாதாரணமானவர்கள். சாதாரண பொருளாதார வசதி, சாதாரண அழகு. முகத்தில் குழப்பம் அல்லது மந்தத்தனம். புதிய இடத்தில் பல பேர் மத்தியில் இருக்க நேர்வதால் ஒரு செயற்கை அமைதி. அந்த அறையின் பளபளப்புக்கும் அவர்கள் நிலைக்கும் பொருத்தமே கிடையாது. எல்லாம் அறிந்தவர் போல டாக்டரின் தோற்றம். மேலோட்டமான கேள்விகள். கேள்விகளுக்குப் பதில் சொல்லியாக வேண்டுமே எனக் கூறப்பட்ட அரை குறைத் தகவல்கள். கல்யாணமாகி, மிகத் தாமதமாகக் குழந்தை பிறந்தது என்பது என்ன தெரிவிக்க முடியும்? குழந்தைக்கு வழக்கமான வளர்ச்சி இல்லை என்பது எவ்வளவு விஷயங்களைத் தெரிவிக்க முடியும்? அப்புறம் அப்பா செத்தது, கொஞ்



பெண்ணை அழும்படி செய்யாதே! ஆண்டவன் அவளுடைய கண்ணீரை அளந்து பார்ப்பான்.

— எபிரேடியம் (குமரிமலர்)

நாட்கள் அம்மா கூட இருந்தது. இப்போது தனியாக இருப்பது....

ஒரு பலனும் இல்லை. மருந்துகளை விழுங்கிப்பகலெல்லாம் தூங்கி வழிந்து கொண்டு இருப்பது பலனென்ருல் ரொம்பச் சரி. இப்போது மீண்டும் தற்காலிகமாக அம்மாவும் நிம்மியும் வந்து சேர்ந்துவிட்டார்கள். அம்மா சமையலையும் குழந்தையையும் பார்த்துக் கொள்கிருள். 'நிம்மி சற்று வேலையில் விட்டுக் உதவியாக இருந்து கொண்டுபள்ளிக்கூடத்துக்குப் போய் வருகிருள். நாளுக்கு நாள் உயரமாகிக் கொண்டு வருகிருள். அவ்வப்போது தாவணி போட்டுக் கொள்கிருள். வீட்டைக் குடைகிருள். நிச்சயம் பணம் திருடிப் போக ஆரம்பித்திருப்பாள்.



'கிராமப் பெண்களின் முன்னேற்றம்' என்னும் கருத்தைச் சித்தரிக்கும் காட்சிகள் பொறிக்கப்பட்ட 10 காசு, 25 காசு, 10 ரூபாய், 100 ரூபாய் நாணயங்கள் வெளியிடப்படவிருக்கின்றன.

- மிஸஸ். விஜானந்த

பங்கஜத்துக்கு விட்டு விட்டுத்தான் தெளிவு நிலை வந்து கொண்டிருந்தது. தெளிவு வரும் நேரங்களில் கூடவே பயமும் கவலையும் கவ்விக் கொள்ளும். எதைப் பார்த்தாலும் ஏதோ பேராபத்தில் இருப்பது போன்ற தோற்றம் ஏற்படும். குளிர்ந்த ஈரம் இன்னும் உலராத முகமாகத்தான் நிம்மியைப் பார்த்தபோதெல்லாம் தெரிந்தது. குழந்தையின் வாயே அப்பாவின் முகமாக மாறிப் போயிருந்தது. அம்மா முகமில்லாதவளாக இருந்தாள். யாராவது இரண்டு பேரைச் சேர்த்துப் பார்த்தால் அவர்கள் ஒருவரை யொருவர் கிழித்துக் குதறிக் கொள்ளத் தயாராக இருப்பவர்கள் போலத்தான் தோன்றினர்கள். இதெல்லாம் பொறுக்க முடியாத அளவுக்கு எட்டுவதற்குள் பச்சையும்சிவப்பும் வெளுப்பு மான மூன்று மாத்திரைகள்.

மருந்து சாப்பிட்டவுடனே ஒன்றும் ஆகி விடாது. ஆனல் கால் மணி நேரத்தில் மெதுவாக ஒரு குகைபுலப்படத் தொடங்கும். அவளுடைய எத்தனமே இல்லாமல் அவள் அந்த குகைக்குள் நுழைய ஆரம்பிப்பாள். குகை செங்குத்தாகத் திசை மாறும். அப்போதும் அவள்உள்ளே போய்க்கொண்டே இருப்பாள். இனி திரும்பவே முடியாது என்றுதோன்றிய போது குகை அப்படியே கவிழ்ந்து ஒரு கிணருகி விடும். பங்கஜம் கிணற்றுள் விழத்தொடங்குவாள். அது முடிவுருத ஆழம் கொண்டது. அதனல் விழுவதும் முடிவுருதது. தலை குப்புற விழுந்து கொண்டிருப்பவள் சட்டென்று கைக்கு எட்டும் தூரத்தில் ஏதோ ஒன்றைக் கண்டு எட்டிப் பிடிப்பாள்.

பஸ்ஸில் நின்று கொண்டு போகும்போது பிடிக்கும் தோல் பட்டை! தோல்பட்டை உருளை வடிவத்திலா இருக்கும்? அதுவும் இவ்வளவு மெல்லியதாகவா? புரிந்து விட்டது. இது பஸ்ஸூம் இல்லை, தோல் பட்டையும் இல்லை. முருங்கைக் காய்! யாரோ முருங்கைக் காயை மேஜை டிராயரில் பத்திரப்படுத்தி வைத்திருக்கிருர்கள். முருங்கைக் காய்க்கு ஒரு குணம். அது அழுகிப் போய்விடாது. உலர்ந்து சக்கையாகிப் போகும். முருங்கை விதை கிடைக்கும். அந்த விதையைப் புதைத்து வைத்தால் முருங்கைச் செடி வரும். முருங்கைச் செடிக்கு விதை விதைப்பார்களா, முருங்கைக் கிளையைநட்டுவைப்பார்களா? கிளையை நட்டு வைத்தால் தான் அது வளரும் போலிருக்கிறதே! குழந்தை ஒரு பிஞ்சு முருங்கைக்காய் மாதிரிதான் இருக்கிறது. நிறைய முருங்கைக்காய் சேர்த்துக்கொள். உனக்கு நிறையக் குழந்தை பிறக்கும். முருங்கைக்காய் முருங்கைக் காயாகக் குழந்தை பிறக்கும்.

பங்கஜம் தானகவே மருந்துகளை கேட்டு வாங்கிச் சாப்பிட்டாள். காலையிலும் மாலையிலும் கணவன் கொடுத்து விடுவான். மத்தியானம் ஒரு வேளை மட்டும் அம்மா அவளுக்கு மருந்து தரவேண்டும் என்று ஏற்பாடு. மிகவும் சின்னப் பொறுப்பு. மிக எளிதான பொறுப்பு. ஒரு சிவப்பு மாத்திரை, ஒரு வெளுப்பு மாத்திரை. ஆனல் அம்மாவுக்கு எப்போதுமே குழப்பம். கூடவே பச்சை, மஞ்சள் மாத்திரைப் புட்டிகளும் இருந்தன. இன்னொரு வெள்ளை மாத்திரை. எந்த இரண்டைத் தருவது? பங்கஜத்தின் கணவன் மாமியாருக்கு ஒவ்வொரு முறையும் விஸ்தாரமாகச் சொல்லுவான். ஆனல் அன்று மத்தியானமே அம்மா எல்லா மருந்து புட்டிகளையும் சேர்த்து வைத்துக் கொண்டு குழம்பிக் கொண்டு இருப்பாள். குழப்பமாக இருக்கும் போது மருந்துடன் விளையாட வேண்டாம் என்று மருந்தே தராமல் இருந்து விடுவாள்.

பங்கஜத்துக்கு அம்மாவின் குழப்பத்தைத் தெரிந்து கொள்ள முடிந்தது. சிவப்பு மாத்திரை ஒரு ரகந்தான். இதில் யாருக்கும் சந்தேகம் வந்திட வழியில்லை. வெள்ளை மாத்திரைகளில் பெரிதாக இருக்கும் மாத்திரையைப் பிற்பகலிலும் சாப்பிட வேண்டும். பங்கஜம் அம்மாவிடம் இதைச் சொல்லி மருந்து வாங்கிக் கொள்வாள். அம்மாவும் தயக்கத்துடன் தருவாள். குகையை உண்டு பண்ணும் மாத்திரை சிவப்பு மாத்திரைதான். இப்போதெல்லாம் கிணருக மாறிவிடும் அந்தக் குகையில் விழ ஆரம்பித்தவுடன் நினைவு பிசகிவிடுகிறது. நினைவு இழந்த நிலை நன்ருகத்தான் இருக்கிறது. நினைவே இல்லாதபோது, நல்லது எது, கெட்டது எது?

பங்கஜத்துக்குத் தரும் மருந்துகளின் எண்ணிக்கை குறைய ஆரம்பித்தது. பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை அவள் டாக்டரை பார்த்தால் போதும். டாக்டருக்காகக் காத்திருக்க வேண்டிய வரவேற்பு அறை அதன் மினுமினுப்பில் குறைந்து வருவது போல் இருந்தது. அங்கொன்றும் இங்கொன்றுமாக ஒட்டடை தொங்குவது தெரிய ஆரம்பித்தது. அவருக்காகக் காத்திருக்கும் கூட்டத்திலும் மாறுதல். வழக்கமாக வருபவர்கள் பாதிப்பேர்தான். புதிதாக வருபவர்கள் நிறையவே இருந்தார்கள். இருபது வயது தாண்டாத பெண்கள்தான் அதிகம். அவர்கள் முகத்தில் குழப்பம், பயம்.. மந்தப் பார்வை.

டாக்டருக்கு தொடர்ந்து எல்லாம் தெரிந்த தோரணை. இன்னும் அதே அரை குறைத் தகவல்கள். உண்மை நிலைக்கு வெகு தூரமே உள்ள கேள்விகள். அந்தக் கேள்விகளுக்குப் பதில்கள். இப்போது எப்படி இருக்கிறாள்? இப்போது என்பதற்கும் எப்படி என்பதற்கும் எதுதான் பதில்? ஒரு வாக்கியம் இரு வாக்கியங்களில் என்ன தெரிந்துவிட முடியும்? சொற்கள் உண்மையைச் சுட்டிக் காட்டச் சிறிதும் பயனற்றவை. ஆனால் இந்தச் சொற்களை வைத்துத்தான் வைத்தியம் நடக்கிறது. வைத்தியம் மட்டும்தானா? எல்லாமே. அப்பா, அம்மா, கணவன், அக்கா, தங்கை, மாமியார், உறவினர்கள், அக்கம் பக்கத்தவர்கள், அறிமுகமே இல்லாத புது மனிதர்கள், பங்கஜத்துக்குத் தெளிவு வரத் தொடங்கியதிலிருந்து கவலையும் அதிகமாயிற்று. இந்த பைத்தியக்கார வைத்தியத்தைச் சீக்கிரமே முடித்துக் கொள்ள வேண்டும்.

டாக்டரின் முக மலர்ச்சியைக் கண்டு பங்கஜத்துக்குச் சிரிப்புக் கூட வந்தது. அவருடைய மருந்துகள் பங்கஜத்திடம் அபிவிருத்தி ஏற்படுத்தி வருவதாக அவர் திருப்தியடைந்து அதை வெளிப்படவே கூறுகிறார். பங்கஜத்திடம் நட்புத் தோன்றப் பேசுகிறார். புன்னகை புரிகிறார். கணவனும் திடம் பெற்று அவர் கையைக் குலுக்குகிறான்.

அன்று வீட்டில் எல்லோரும் சந்தோஷமாக இருந்தார்கள். அம்மா மாப்பிள்ளைக்கு இரண்டாம் டோஸ் காப்பி கலந்து தருகிறாள். அவன் நிம்மி எங்கே என்று கேட்கிறான். நிம்மி ஓடிவருகிறாள். அவன் நிம்மியை லாண்டரியிலிருந்து சலவை செய்யப்பட்ட துணிகளை வாங்கி வரச் சொல்கிறான். அவனுடைய மேஜை டிராயரிலிருந்து பணம் எடுத்து அவளிடம் தருகிறான். அவள் அதை எடுத்துக் கொண்டு வெளியே விரைகிறாள். பத்து நிமிடத்தில் கட்டுத் துணிகளுடன் திரும்பி வருகிறாள். அவன் நிம்மியிடம் ஏதோ வேடிக்கையாகச் சொல்கிறான். அவள் தாங்க மாட்டாத சிரிப்புப் பொங்கிப் பொங்கி வருவது போலச் சிரிக்கிறாள். நடுவில் குழந்தை ஈனக் குரலில் அழுகிறது. பங்கஜத்தின் கணவன், நிம்மி இருவரும் குழந்தை அருகே போகிறார்கள். அந்த அறை மூலையில்தான் பங்கஜம் உட்கார்ந்திருக்கிறாள். குழந்தையை அவர்கள் இருவரும் பார்த்து இன்னும் சந்தோஷமடைகிறார்கள். ஒரு வயதுக் குழந்தை தானாகக் குப்புறப் படுத்துக் கொண்டு விட்டது!

''இன்னிக்கு நானே சமைச்சுடறேன்'' என்று பங்கஜம் அம்மாவிடம் சொன்னாள்.

## வெற்றிலை மகிமை!

வெற்றிலையானது அதன் நிறத்தாலும் மணத்தாலும் கார்ப்புச் சுவையின் பேதத்தாலும் மூன்று வகைப்படும் எனக் குணபாடம் எனும் மருத்துவ நூல் கூறுகிறது. அதிகக் காரமும், மணமும், கறுப்பு நிறமுமில்லாத வெற்றிலை ஒரு விதம்; கறுமையும் காரமும் மிகுந்தது கம்மாறு வெற்றிலை இரண்டாவது விதம்; கற்பூர மணமும் சிறு காரமும் கூடிய கற்பூர வெற்றிலை மூன்றாவது விதம்;

- முட்டைக்கோஸில் உள்ள வைட்டமின்களைவிட வெற்றிலையில் அதிகமான வைட்டமின்கள் இருக்கின்றன. இதில் வைட்டமின் ஏ. சி., புரோட்டின், கொழுப்பு, இரும்பு, தாதுப் பொருள், கால்ஷியம், எரிபொருள் முதலியன இருக்கின்றன.
- வெற்றிலையில் பாலைவிட வைட்டமின் 'ஏ'யும் இரும்புச் சத்தும் அதிகமாக இருக்கின்றன. 150 மிலி பால் ஆறு வெற்றிலைப் பாக்குக்குச் சமமான கால்ஷியம் கொண்டுள்ளது என்று ஆராய்ச்சியின் மூலம் கண்டறிந்திருக்கிறார்கள்.
- பிரசவித்த பெண்களின் உடல் கதகதப்பாக இருக்க வெற்றிலைச் சாறு கொடுக்கலாம்.
- உணவுச் செறிமானத்துக்கு இது மிகவும் துணையாக இருக்கிறது என்றாலும், ஒரு நாளில் பதினாறு வெற்றிலைக்கு மேல் உபயோகிக்கக் கூடாது. வெற்றிலையோடு புகையிலை சேரக் கூடாது.

—''நோய் தீர்க்கும் கீரைகள்'' என்ற புத்தகத்திலிருந்து
—பிரேமா வீரப்பன்



அம்மா கீரை நறுக்கித் தர, பங்கஜம் குளித்து விட்டு வந்து குக்கரை அடுப்பு மேல் வைத்தாள். குழம்புக்குத் தாளித்துக் கொட்டும் போது மட்டும் கை சிறிது தடுமாறியது. மற்றபடி பெரிய சம்பவம் ஏதும் நேராமல் சமையல் முடிந்து விட்டது.

அம்மா குழந்தைக்குச் சிறிதளது சாதம் பிசைந்து ஊட்டிக் கொண்டிருந்தாள். புது தாவணி அணிந்து கொண்டு ஸ்கூலுக்குக் கிளம்பிய நிம்மி குழந்தையின் கன்னத்தைச் செல்லமாகக் கிள்ளி, ஒரு முத்தம் கொடுத்து விட்டுக் கிளம்பினாள்.

கணவனுக்குப் பகல் சாப்பாடு எடுத்துப் போகிறவனையும் அனுப்பியாகி விட்டது. இனி மறுபடியும் மத்தியானப் பால் வாங்கி வரும்வரை வீட்டில் ஓய்வு நேரம்.

**இப்பொழுது இலையுதிர்காலம். பழுத்து உதிரும் வேப்பம் இலைகளை சேகரித்து எடுத்து தூள் செய்து நெருப்பில் போட்டால், கொசுக்கள் ஓடிவிடும்.**



அம்மா ஒரு பலகையைத் தலைக்குயரத்துக்கு வைத்துக் கொண்டு தூங்கிவிட்டாள். பங்கஜத்துக்கு மயக்கம் வருவதும் போவதுமாக இருந்தது. அதற்கு இடம் கொடுக்கக் கூடாது என்று அவள் நினைத்துக் கொள்ளும்போது மயக்கம் ஓடிப்போகும். கண்களை அகலமாகத் திறந்து வைத்துக் கொண்டாள். கிணற்றங்கரைக்குச் சென்று அங்கு காயப் போட்டிருந்த குழந்தை துணிகளை எடுத்து வந்து மடித்து வைத்தாள். குழந்தை நன்றாக விளையாட ஆரம்பித்திருந்தது. தானாகவே நகர முயன்று கொண்டிருந்தது. பங்கஜத்தைப் பார்த்துச் சிரித்தது.

அம்மா சில சாமான்களைத்தான் திரும்ப எடுத்து வந்திருந்தாள். எல்லாமே கவரோசமாகவும் கட்டில் மற்றும் பெஞ்சக்கடியிலும் சீராக வைக்கப்பட்டிருந்தன. சமையலறை மிகவும் துப்புரவாக இருந்தது. பங்கஜம் கணவன் மேஜையருகே சென்றாள். இப்போதெல்லாம் நிம்மியும் அங்குதான் உட்கார்ந்து அவளுடைய பாடங்களை எழுதிப் படிக்க வேண்டியிருக்கிறது. பங்கஜம் மேஜை டிராயரைத் திறந்து பார்த்தாள். பேனா, கத்தரிக்கோல், பாங்க் பாஸ் புக், டைரி, பெரிய பர்ஸ், ஐந்தாறு பெரிய காகித உறைகள், சில கடிதங்கள் எல்லாமே மிக நேர்த்தியாக வைக்கப்பட்டிருந்தன. வட்டமான கருநிற எனாமல் பெட்டி. அது மூடியது மூடியபடி இருந்தது. அதில்தான் அவன் சில்லறையாக அவனிடம் சேரும் நாணயங்களைப் போட்டு வைப்பான். இன்றைக்கு அதை யாரும் திறந்திருக்க முடியாது. திறந்திருந்தாலும் ஒழுங்காகத் திரும்ப மூடி வைத்திருக்கிறார்கள்.

எவ்வளவோ நாட்களுக்குப் பிறகு பங்கஜத்துக்கு அவள் எப்போதோ கற்றுக்கொண்ட பாட்டு ஒன்றின் முதல் அடி நினைவுக்கு வந்தது. அவளுக்குச் சிரிப்புக்கூட வந்தது. அந்தச் சிறு வீட்டில் இப்போது எங்கு திரும்பினாலும் ஒருவித ஒழுங்கைப் பார்க்கக் கிடைத்தது. —அவளாகக் குடித்தனம் நடத்திய நாட்களில் கூட அந்த அளவுக்கு இருந்ததில்லை. ஆனால் அவளுக்குப் பைத்தியம் பிடித்த போது வீட்டுக்கு நல்ல காலம் வந்துவிட்டது. கணவன் சிரித்துப் பேசுகிறான். அப்பா போய் இன்னும் ஓராண்டு முடியவில்லை. அம்மா நிம்மதியாக மாப்பிள்ளை வீட்டில் பகலில் தூங்குகிறாள். நிம்மி சந்தோஷமாகவே பள்ளிக்குப் போய் வருகிறாள் போலிருக்கிறது. இப்போதெல்லாம் தினம் ஒரு ரூபாய் அத்திம்பேரிடம் கேட்டு வாங்கிப் போகிறாள். அவனும் கணக்கமே இல்லாமல் தருகிறான். அவன்தான் ஒரு சமயம் நிம்மியால் வீட்டு அமைதியும் உறவும் கெட்டுவிடப் போகிறது என்று பங்கஜத்துக்கு எச்சரிக்கை விடுத்துக் கொண்டிருந்தான். மனிதர்கள்தான் எவ்வளவு சீக்கிரம் மாறிவிடுகிறார்கள்!

பங்கஜத்துக்கு அந்தப் பாட்டு முழுக்க நினைவுக்கு வந்து விட்டது. அந்தப் பாட்டு கற்றுக்கொண்ட நாட்களில் அவளுக்கு இப்போது நிம்மியின் வயதுதான் இருக்கும். அவள் ஸ்கூலுக்குப் போகும்போது முழு ரூபாயாகக் கண்டது கிடையாது. அவளுக்கு சைக்கிள் கற்றுக் கொள்ள வேண்டும் என்று தோன்றியது கிடையாது. உரிமையுடன் பிறர் பொருளை எடுத்துச் செல்லும் தைரியம் கிடையாது. காலத்துடன் மனிதர்கள் மாறுகிறார்கள். அவளுக்குத்தான் அந்த மாறுதலைச் சகித்துக் கொள்ள முடியாமல் போய்விட்டது.

தனக்கு உடல் நலமில்லாமல் போனதும் ஒருவிதத்தில் நல்லதுதான் என்று பங்கஜத்துக்குத் தோன்றிற்று. அவளுக்கு அந்த வேளையில் எங்காவது போய் நன்றாக வாய் விட்டுப் பாட வேண்டும் போலிருந்தது.

# புதிய பொலிவுடன்
# இனிய மணம் கமழும்
# கோகுல்
## ஸாண்டல்வுட்
## முகப்பவுடர்...

இப்பொழுது கோகுல்
ஸாண்டல்வுட் முகப்பவுடர்
புதிய முறையில் சீல் செய்த
பிளாஸ்டிக் டப்பியில் கிடைக்கிறது.
கலப்படம் செய்ய முடியாதது.
சீல் உடையாமல் இருக்கிறதா
என்று கவனித்து வாங்கவும்.

கோகுல்-
இந்தியாவிலேயே
முதன் முறையாக
ISI முத்திரை
பெற்ற பவுடர்.

IS:3959



CM/L. NO.8223





# கோகுல்
ஸாண்டல்வுட் &
ஸான்டால் பவுடர்கள்

டி.எஸ்.ஆர் & கம்பெனி
மதராஸ்





# ஒரு குயிலின் கதை (நட்சத்திர வாழ்க்கை)

-லதாமங்கேஷ்கர்



ஏழ்மை, கொடுமை, துரதிர்ஷ்டம்— இன்றைய நட்சத்திரப் பாடகி லதா மங்கேஷ்கரின் இள வயது வாழ்க்கை இன்னல் மிக்கதாகவே இருந்து விட்டது. அவருடைய அப்பா தினநாத் மங்கேஷ்கர் கோவாவிலிருந்து இந்தாருக்குப் பிழைப்பு தேடி வந்தவர். பாட்டும் நாடகமும்தான் பிழைப்பு. லதா உள்ளிட்ட நான்கு பெண்கள், ஒரே பையனுடன் ஊர் ஊராகச் சென்று நாடகம் போட்டார். கழைக்கூத்தாடிப் பிழைப்பை விட சற்று மேல். அவ்வளவுதான்.

குழந்தைகளுக்கு அவரால் பள்ளிப் படிப்பு அளிக்க இயலவில்லை. அதற்கு ஈடு செய்யும் வகையில் பாட்டுச் சொல்லிக் காடுத்தார். நாடகம் பூராவும் பாட்டு, பாட்டு, பாட்டு தான். குழந்தைகள் பலவித வேஷங்கள் அணிந்து பாடி விட்டுப் போகும்.

சுமாராக வரும்படி வந்தது. ஆனால் கடுமையான சூழ்நிலைதான். இரண்டு வயதில் லதாவுக்குப் பெரியம்மை போட்டது. முக மெல்லாம் ஆழமான வடுக்கள். இன்றுகூட இருக்கிறது.

1934ல் 'டாக்கி'—பேசும் சினிமா வந்தது. நாடகங்கள் படுத்து விட்டன. தினநாத்தின் பல்வந்த் மண்டலும் மூடப்பட்டது. சாங்லி என்னும் சிற்றூருக்குப் போய் குடும்பம் நிலைத்தது.

தினநாத் மனைவியின் நகைகளை அடகு வைத்து ஒரு சினிமா கம்பெனி ஆரம்பித்தார். 'அந்தேரி துனியா' என்று ஒரு படம் எடுத்தார். நாடக பாணியிலேயே இருந்த அந்த சினிமா ஓடவில்லை. தலைக்கு மேல் — கடன் மிஞ்சியது. கவலைகளை

மறக்க தினநாத் குடிக்க ஆரம்பித்தார். கடன்காரர் தொல்லையிலிருந்து தப்ப குடும்பத்தோடு புனாவுக்கு ஓடிப்போனார்.

புனாவில் ரேடியோவில் பாட்டுக்கள் பாடி கொஞ்சம் சம்பாதித்தார். 1942-ல் லதாவுக்கு 13 வயதான போது தினநாத் இறந்து போனார்.

## 13 வயதில் குடும்பப் பொறுப்பு

லதாவின் தம்பி ஹ்ருதயநாத்—இப்போது பிரபல இசை இயக்குநராக இருப்பவர்-டி.பி. நோயில் விழுந்து படுத்த படுக்கையாகக் கிடந்தார். குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு லதாவின் தலையில் விழுந்தது. விநாயகராவ் என்பவர் ஒரு படம் எடுத்துக் கொண்டிருந்தார். அதில் பாடி நடிக்க வேண்டிய சந்தர்ப்பம் லதாவுக்குக் கிடைத்தது. 'பஹிலி மங்களாகூர்' என்ற படத்தில் லதாவுக்குத் தோழி வேடம்.

''கண் கூசும் விளக்கின் முன்னே நடிப்பதை அடியோடு வெறுத்தேன். ஆனால் அப்படத்தில் வேலை கிடைத்திரா விட்டால் என் குடும்பமே பட்டினியில் செத்துப் போயிருக்கும்'' என்கிறார் லதா.

அதே சமயம் லதாவுக்கு இன்னொரு படத்தில் பின்பாட்டு பாடும் வாய்ப்புக் கிடைத்தது. 'கிட்டி ஹஸால்' என்ற அப்படம் வெளி வந்தபோது லதாவின் பாட்டு இல்லை. நன்றாக இல்லை என்று வெட்டி விட்டார்கள்.

ஆனால் 'பஹிலி'யில் பாட்டும் நடிப்பும் நன்றாக அமைந்தது. லதாவை விநாயக்ராவ் மாதம் 60 ரூபாய் சம்பளத்தில் நிரந்தர நடிகையாக நியமித்தார். 1945-ல் சினிமா கம்பெனியோடு லதா பம்பாய்க்குக் குடியேறினார். நானாசௌக் என்ற இடத்தில் 25 ரூபாய் வாடகையில் இரண்டு அறையில் குடும்பம் முழுவதும். (இன்று அருகிலேயே பெட்டர் ரோடில் லதா 20 லட்சம் மதிப்புள்ள பங்களாவில் வசிக்கிறார்!) ஆனால் அப்போது குடும்பத்தில் எட்டுப் பேர். இரண்டு பேர் ஒன்றுவிட்ட தங்கைகள். ஹ்ருதயநாத்தும், தங்கை ஆஷா பான்ஸ்லேயும் (இன்றைய முன்னணிப் பாடகி) சுயமாக சம்பாதிக்கும் வயது வராதவர்கள். லதாவின் சம்பாத்தியத்தில் கஷ்ட ஜீவனமாக குடும்பம் ஓடியது.



## லதாவின் குரு

பம்பாயில் லதாவுக்கு ஓர் அதிர்ஷ்டம் கிட்டியது. அமான் அலிகான் பிண்டிபஜார் வாலா — பெரிய பாடக விற்பன்னர். லதாவைத் தன் சிஷ்யையாக ஏற்றுக் கொண்டார்.

1947-ல் அவர் பாகிஸ்தானுக்குப் போய் விட்டார். அமீர்கான் என்னும் இன்னொரு திறமையான பாடகரிடம் லதா பயிற்சி பெற்றார். நான்கு வருடத்தில் அவர் கற்ற வித்தையெல்லாம் லதாவுக்குத் தந்துவிட்டு இறந்து போனார் அமீர்கான்.

''அவர் இறந்திரா விட்டால் சினிமா பாடகி ஆகி இருக்க மாட்டேன். க்ளாஸிகல் சங்கீதம் பாடிக் கொண்டு மேடை பாடகியாகவே இருந்திருப்பேன்'' என்கிறார் லதா சற்று வருத்தத்துடன். சினிமாத்துறை பாடும் மெஷினாக லதாவை ஆக்கி விட்டது.

1947லேயே லதா சினிமா பாடகியாக பெயர் பெற்று விட்டார். அந்த ஆண்டு 'மஜ்பூர்' என்ற படத்திற்கு லதா பின்னணி பாடல்கள் செய்திருந்தார். படம் மாபெரும் வெற்றியாகி லதாவுக்குப் புகழ் குவிந்தது.

'மஜ்பூரில்' லதாவுக்கு சான்ஸ் கிடைத்தது ஒரு அதிர்ஷ்டம். மாஸ்டர் குலாம் ஹைதர் என்பவர் அப்போது பிரபல இசை









இயக்குநர். லதாவின் குரல் கேட்டு பிரமிப் படைந்தார். தயாரிப்பாளர் ஒருவரிடம் லதாவுக்குப் பாடும் சந்தர்ப்பம் தரும்படி சிபாரிசு செய்தார்.

சுபோத் முகர்ஜி என்னும் அத் தயாரிப்பாளர் காமினிகௌசலை ஹீரோயினாக வைத்துப் படம் எடுத்துக் கொண்டிருந்தார். 'லதாவின் குரல் கீச்சென்று இருக்கிறது. பொருந்தாது' என்று அலட்சியமாகத் தள்ளி விட்டார். ஹைதருக்குக் கோபம் வந்து விட்டது.

''முகர்ஜி இன்றைக்கு சொல்லுகிறேன், கேட்டுக் கொள்ளுங்கள். பின்னாளில் இந்தச் சிறுமி லதா மற்ற எல்லா பாடகிகளையும் தூக்கிச் சாப்பிடுவாள். பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று சபதம் செய்தார்.

## ரயில் பிளாட்பாரத்தில் ரிஹர்ஸல்

அன்றைக்கே ரயிலில் கொட்டும் மழையில் லதாவை பம்பாய் ஸ்டுடியோவுக்குஅழைத்துச் சென்றார். முன்பயிற்சியாக கோரேகான் ரயில் ஸ்டேஷனிலேயே லதாவைப் பாடச் சொன்னார். ஹைதர் கையில் வைத்திருந்த சிகிரெட் டின்னில் தாளம் போட, வெளியே 'சோ'வென்று மழை கொட்ட லதா தன்னை மறந்து பாடினாள். ரயிலுக்குப் போகிறவர் வருபவர் எல்லாம் நின்றனர். கேட்டனர். பிளாட்பாரம் முழுதும் கும்பல் நிறைந்து விட்டது. பாட்டு முடிந்ததும் ஹைதர் ஏதும் பேசவில்லை. பம்பாய் டாக்கீசின் இசை இயக்குநர் முன்னே அதே பாட்டை பாடச் சொன்னார். லதா மஜ்பூர் படத்திற்கு ஒப்பந்தமானார்.

அன்று முதல் ஹைதரின் கண்டு பிடிப்பான லதாவின் புகழ் பம்பாய் சினிமா உலகைத் தாக்கியது. நௌஷாத் லதாவை 'அந்தாஜ்' படத்திற்குப் பாடச் சொன்னார். படம் அமோக வெற்றி கண்டது. அதன் பிறகு 'ப்ரஸாத்' — அப் படத்தில் வந்த 'ஜீயா பேகரார் ஹை' இன்னமும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. படத்திற்குப் படம் லதாவுக்குப் புகழ் குவிந்தாலும் பணம் 'தட்டுப்பாட்டில் தான் இருந்தது. பாட்டுக்கு ரூ. 200 முதல் ரூ. 400 வரை கிடைத்தது. ஒவ்வொரு பாட்டும் பல தடவை பாடிய பின்னேதான் பதிவு செய்யப்பட்டது.

''ஸ்டுடியோ ஸ்டுடியோவாகப் போனேன். மிகவும் கஷ்டமான நாட்கள் அவை'' என்கிறார் லதா. பல நாட்கள் மதிய உணவுக்கு நேரம் கிடைக்காது. இருந்தாலும் காண்டீனில் சாப்பிட காசிருக்காது. டாக்ஸிக்குக் கூட வழியில்லை. ரயிலில் போய் வந்து கொண்டிருந்தார். சில நாட்கள் வேலை முடிய இரவு நேரமாகி விடும். ரயிலில் தூங்கி விடுவார். சர்ச்கேட் டர்மினஸ் போனதும் தான் விழித்துக் கொள்வார். கடைசி ரயில் போயிருக்கும்.

''அங்கிருந்து ஒரு மணி நேரம் நடந்து வீட்டுக்குப் போயிருக்கிறேன். அப்போதெல்லாம் பம்பாய் பாதுகாப்பான நாகரிக நகரமாக இருந்தது'' என்கிறார்.

## திலீப்குமாருடன் சந்திப்பு

ஒருநாள் ரயிலில் மூன்றாம் வகுப்பில் சக பிரயாணி ஒருவரை சந்தித்தார். திலீப்குமார் லதாவின் மராத்தி ஹிந்தியை கேலி செய்தார். பல ஆண்டுகளுக்குப் பின் அதே திலீப் குமார் லதாவின் ஹிந்தி உருது உச்சரிப்பு சுத்தத்தைக் கேட்டு வியந்தார்.

''லதா மங்கேஷ்கர் பெண் விடுதலை இயக்கத்தின் முன்னோடி'' என்கிறார் இயக்குநர் பாசு பட்டாச்சார்யா. ஆண்கள் ஆதிக்கம் செலுத்தி வரும் ஒரு தொழிலில் லதா எதிர்நீச்சல் போட்டு முன்னணிக்கு வந்து விட்டார். பல ஆண் இசை இயக்குநர்கள் லதாவை தம் சொந்த சொத்துப் போலப் பாவித்து உரிமை கொண்டாடி மூக்குடைந்தனர். இதனால் கோபமுற்ற இசை இயக்குநர்களில் ஒருவர் ராம் சந்திரா. ''லதா திமிர் பிடித்தவர், சர்வாதிகாரி, மற்ற பாடகிகள் முன்னுக்கு வராமல் அடக்கி விடும் சூழ்ச்சக்காரி'' என்றெல்லாம் விமர்சிக்கிறார்.

பிற பாடகிகளை பொறாமை காரணமாக அடக்கி விடுகிறார் என்ற குற்றச்சாட்டு லதாவின்மேல் பரவலாகஇருப்பது உண்மைதான். வாணி ஜெயராம், ருனைலைலா, சுலக்ஷனா பண்டிட், பிரீதி சாகர், ஹேமலதா முதலானோர் சுடர்விட்டுப் பிரகாசிக்கத் தொடங்கிய உடனேயே இசை இயக்குநர் ஆதரவு இழந்து மங்கிப் போயிருக்கின்றனர். வாணி ஜெய





ராம் ஹரீந்திப்பட உலகையே வெறுத்து தென்னாட்டுக்குப் போய் விட்டார். 'லதாதான் தன் முடிவுக்குக் காரணம்' என்று பகிரங்கமாகவே சொல்லியிருக்கிறார்.

''லதா மேலுக்கு தேனாக வழிந்தாலும் பின்னால் குழிபறிப்பதில் கெட்டிக்காரி'' என்கிறார் இன்னொரு பாடகி. திறமைசாலிகளாகத் தோன்றுபவர்களைத் தானே முன் வந்து தட்டிக் கொடுத்து இசை இயக்குநர்களுக்கு சிபாரிசு செய்வார் லதா. பின்னர் 'புதியவளுக்கு' சந்தர்ப்பம் கொடுப்பவர்களைப் புறக்கணிக்க ஆரம்பிப்பார். லதாவை எதிர்த்து சினிமாவில் பிழைக்க முடியாது. எனவே இசை இயக்குநர், பக்க வாத்தியக்காரர் யாரும் புதிய பாடக நட்சத்திரங்களைப் புறக்கணித்து வருகின்றனர். இதுதான் லதாவின் சூழ்ச்சி முறை என்று சொல்லப்படுகிறது.

**வாணிஜெயராமுடன் பகை**

வாணி ஜெயராம் ரிஷிகேஷ் முகர்ஜியின் 'குட்டி' படத்தில் 'போலேரே பாபீஹரா' பாடி எடுத்த எடுப்பிலேயே பெரும் புகழ் பெற்றார். ஆனால் அடுத்த பல படங்களில் அவருக்கு சான்ஸ் கிடைக்கவில்லை. குல்ஜாரின் 'மீரா' படத்தில் லதா பாடுவதாக இருந்தது.

தம்பி ஹ்ருதயநாத்தை இசை இயக்குநராக்க வேண்டும் என்று கண்டிஷன் போட்டார். குல்ஜார் ரவிஷங்கரை இசை இயக்குநராக ஏற்பாடு செய்திருந்ததால் லதாவின் நிபந்தனைக்கு ஒப்புக் கொள்ளவில்லை. லதா பாட மறுத்ததும் வாணி ஜெயராம் குரல் கொடுத்துப் படம் வெற்றிகரமாக முடிந்தது. அதிலிருந்து லதாவுக்கு வாணிஜெயராமிடம் திரைப்பகை தோன்றி விட்டது. ஹிந்தி பட உலகிலிருந்தே வாணி ஜெயராம் வெளியேற நேர்ந்தது. காரணம் லதாதான் என்கிறார்கள்.

இக் குற்றச்சாட்டை லதா தீவிரமாக மறுக்கிறார்.

''வாணியை இசை இயக்குநர்களுக்கு சிபாரிசு செய்தது நான்தான். ஆனால் வாணி பாட்டை கெடுத்து விடுகிறார் என்று அவர்கள் சொன்னார்கள். அதற்கு நானா பொறுப்பு'' என்கிறார்.

லக்ஷ்மிகாந்த் பியாரிலால், கல்யாண்ஜி முதலான இசை இயக்குநர்கள் லதாவைக் கோயிலில் வைத்து கும்பிடுவார்கள்.

''25 வருஷமாக லதாவுடன் இசை அமைத்திருக்கிறேன். லதாவின் குரலுக்கு ஈடு இணை இல்லை'' என்கிறார் லக்ஷ்மிகாந்த்.

''சினிமா இசையில் லதாவின் பங்கு ரூபாய்க்கு 90 காசு. எங்கள் பங்கு 10 காசு தான்'' என்கிறார் கல்யாண்ஜி.

லதா 15 மொழியில் பாடியிருக்கிறார். திருப்பதி தேவஸ்தானத்தில் ஆஸ்தான வித்வானகப் பட்டம். 24 மணி நேரமும் ஓயாமல் எங்கேயாவது ஒரு மூலையில் லதாவின் குரல் இசைத்தட்டில் ஒலித்துக் கொண்டிருக்கும். இமய மலையில் ஜவான்கள் கடும் குளிரில் தனிமையை மறப்பது லதாவின் குரலில்தான். 23 ஆண்டுகளில் 26000 பாட்டுகள் பாடி உலக ரிக்கார்டு கண்டவர். கின்னஸ் புக்கில் இடம் பெற்றிருக்கிறார்.

## மணிக்கு ரூ. 400

அவருடைய வருமானம்? யாராலும் கணிக்க முடியவில்லை. முதல் ஐந்தாண்டுகள் பாட்டுக்கு ரூ. 300 வீதம் பெற்றவர். இப்போது ரூ. 25000 வாங்குகிறார். இசைத் தட்டு விற்பனையில் கிடைக்கும் ராயல்டி லட்சங்கள்.

''ஒரு மணிக்கு ரூ. 400 என்று சம்பாதிப்பவர் லதா'' என்கிறார்கள்.

கோல்ஹாபூரில் ஒரு சினிமா ஸ்டூடியோ அவருக்குச் சொந்தம்.

மதுபாலா நர்கீஸ் முதல் இன்றைய விஜய தாவரை குரல் கொடுத்துக் கொடுத்து லதாவுக்கு இப்போதுதான் அலுக்க ஆரம்பித்திருக்கிறது. பின்னணி பாடுவதைக் குறைத்துக் கொண்டு நியூயார்க் லண்டன் என்று பறந்து மேடை நிகழ்ச்சிகள் தந்து வருகிறார். லண்டனில் அவர் பாடிய தொகுப்பு, இசைத் தட்டில் வந்து ஒரே நாளில் 25000 விற்றுப் போயிற்று. ஒவ்வொன்றும் ரூ. 100 விலை.

வெளி நாடுகளில் ஒரு நிகழ்ச்சிக்கு ஒரு லட்ச ரூபாய்க்கு மேல் வாங்குகிறார். (ரவிஷங்கருக்குக் கிடைப்பது ரூ. 8000)

லதாவுக்கு 51 வயதாகிறது. இன்னும் கன்னியாகவே இருக்கிறார். ராஜஸ்தான் இளவரசர் 45 வயதான ராஜ்சிங் துங்கர்பூர், லதாவுடன் கூடவே இருக்கிறார். லாஸ்வேகாஸில் சூதாடிப் பணம் இழப்பதில் சளைப்பதில்லை என்றும், வெளிநாடுகளில் உல்லாசமாகத் திரிவதில் விருப்பமுள்ளவர் என்றும் சொல்கிறார்கள்.

ஆனால் இந்தியாவில் அவருடைய முகம் மீராவை நினைவூட்டுகிறது. அவரது குரல் தேனையும் தென்றலையும் தருவிக்கிறது. அவரது வாழ்க்கை பெண்மையின் வெற்றியைப் பறைசாற்றிக் கொண்டிருக்கிறது.

— சுமீத் மித்ரா





சரோஜா ராமசந்திரன்

# என்ன கூட்டம்!

''படம் ஆரம்பிச்சுடுத்து...அந்தக் காலத்துப் படம்தான்...இருந்தா என்ன? நன்னாத்தான் இருக்கு...ஜெமினி, சாவித்திரி· லவ் சீன்...ரொம்ப நேச்சுரலா இருக்கு...ஆம்பளையான் பெண்டாட்டியா இல்லாத ஆக்டர்களை ரொம்ப நெருங்கி நடிக்கும்போது நிஜ தம்பதிகள் நெருங்கி நடிக்கக் கேட்பானேன்!''

(பக்கத்திலே உட்கார்ந்திருக்கிற என் ஆத்துக்காரர் மெள்ள என் இடுப்பிலே கிள்றார்...கஷ்டம்...இந்த ஆம்பிளேகளே இப்படித்தான்...கொஞ்சம்கூட 'இது' இல்லாமெ...பொது எடத்துலே...சீச்சீ!) சாவித்திரியின் கண்ணும் உதடும்தான் என்ன அழகு...நன்னாத்தான் இருக்கா! என்ன தத்ரூபமான நடிப்பு! அவ அழும்போது எனக்கும் அழுகை வரது!

(''மாமி, இந்தப் புடவை எங்கே வாங்கினேள், ரொம்ப நன்னாருக்கே! ''காஞ்சிபுரத்துலெ ஸ்பெஷலா ஆர்டர் குடுத்து நெய்யச் சொன்னேன்'' கர்மம்! இங்கே வந்தும் இந்தப் புடவை வம்புதானா! மத்தவாளெ ஒழுங்காப் பாக்க விடாமெ! டயலாக் எல்லாம் ஒழுங்காவே காதுலெ விழமாட்டேங்கறது! கர்மங்கள்!)



பிளாக் அண்ட் ஒயிட் படமா இருந்தா என்ன? இப்போ வர சில படங்களெவிட எவ்வளவோ தேவலே! நிஜ வாழ்க்கையிலே எல்லாருமே செக்கச் செவக்கவா இருக்கா? கறுப்பும் வெளுப்புமாத்தானே இருக்கா...அந்தக் காலத்துப் படங்களேதான் பாட்டு எப்படி இருக்கு...தேன் மாதிரி!

('அம்மா ஆத்துக்கு வா...பசிக்கறது...சாதம் போடு! அடப்பாவி! நாலு மணிக்குத்தானே ஒரு தட்டு உப்புமா கொட்டிண்டே! அதுக்குள்ளே திரும்பவும் பசியா!'

'போம்மா...பெரிய்ய உப்புமா...வா, சாதம் போடு' ('பிடுங்காதேடி, நச்சுக் கடங்காரி! உன்னைக் கூட்டிண்டு வந்தேன் பாரு...வந்து தொலே!')

(நல்லவேளே தொலைஞ்சா! சீச்சீ! எங்கே வந்தாலும் வயறுதான்!) ஜெமினி மன்மதனாட்டம் இருக்கார்...கிராமத்து சீன்களெல்லாம் ரொம்ப தத்ரூபம்...அதோ தங்கவேலு! அவருடைய ஹாஸ்யமே அலாதிதான்!

''இவ யாரு, கெக்கே பிக்கேன்னு...டிரஸ் பண்ணிண்டு...காபரே டான்ஸா...எல்லாப் படத்துலேயும் திருஷ்டிப் பரிகாரம் மாதிரி இது ஒண்ணு வந்துடறது. குமட்டிண்டு வரது எனக்கு...''

படம் முடிஞ்சுடுத்து. கௌம்பறேன்.

மாமி, இருங்கோ...குங்குமம் எடுத்துண்டு போங்கோ.''

ஆஹா...

குங்குமம் எடுத்துக் கொள்கிறேன்.

இனிமே டி. வி. பார்க்கணும்னு இந்த வீட்டுக்கு வரப்படாது...சேசே! என்ன கும்பல் சளசளன்னு...அடுத்த மாசம் நான் டி. வி. வாங்கினதுக்கப்புறம் ஒரு பிராணியை உள்ளே விடுவேனா...

# பில்வமங்கள்

ஸ்ரீ வேணுகோபாலன்

ஆந்திர? — 

தக்காணத்தில் பிறந்தவர் பில்வமங்கள். சுமார் ஆயிரம் ஆண்டுகள் முன் வாழ்ந்தவர். நிறைய புலமை பெற்றவர். நல்ல அறிவாளி. அருமையாகக் கவிதை எழுதும் ஆற்றல் பெற்றவர். அழகான உடல் வனப்பும், வாக்குச் சாதுர்யமும் படைத்தவர். வசதியான குடும்பத்தில் பிறந்தவர்.

ஆனால் இவ்வளவு நல்ல அம்சங்கள் இருந்தும் அத்தனையும் ஒரே ஒரு காரணமாக விரயமாகி வந்தன. அவர் ஒரு பெண் லோலர்; காமாந்தகர்.

தினமும் தாசிகளை நாடிச் செல்லாவிட்டால் பொழுது போகாது. அவர்கள் சகவாசத்தைத்தான் மெய்யான சுகம் என்று எண்ணினார். இதனால் அவரைப் பல கெட்ட சிநேகிதர்கள் சூழ்ந்தார்கள். கெட்ட நடவடிக்கைகள் நிறைய வந்தன.

ஒரு அறிவாளியான மனிதன் கெட்டவர்கள் இடையேஅகப்பட்டால் விடுவார்களா?

பில்வமங்களின் அபார கவிப் புலமையினை அவர்கள் பயன்படுத்தினார்கள்.

தாசிகள் பேரிலும் உபயோகமற்ற விஷயங்களிலும் அவரைப் பாடச் சொன்னார்கள். பில்வமங்களின் திறமை திசை திரும்பியது. காமக் கேளிக்கைகள், துர்சிநேகிதர்கள், கெட்டுப் போன பெண்கள் இவர்களைப் பற்றிய பாடல்கள் இயற்றுவது அவரது பொழுது போக்காயிற்று.

இந்த நிலையில் பில்வமங்கள் முதன் முறையாக சிந்தாமணியைச் சந்தித்தார். சிந்தாமணி ஒரு பேரழகி. அவள் ஒரு தாசி! பார்த்ததும் அவள் மீது மையல் கொண்டார் பில்வமங்கள். தம் உடல் பொருள் ஆவியை அவளிடம் சமர்ப்பித்தார். எப்போதும் அவள் நினைவும் தியானமுமாக இருந்தார். தினம் அவளை ஒரு முறையாவது அவர் சந்திக்க வேண்டும். இல்லாவிடில் உயிர் தரியாது.

சிந்தாமணி தோன்றியதும் அவர் வாழ்க்கை

மேலும் மோசமாகியது. தமது திரவியங்களை இழக்க ஆரம்பித்தார். வீட்டில் மனைவி, தாய் தந்தையர்களை உதாசினமாக நடத்த ஆரம்பித்தார். மனைவியின் நகைகளையெல்லாம் சூறையாடினார்.

தந்தை நோய்வாய்ப்பட்டார். கடைசியில் துயரத்தில் மூழ்கி ஒரு நாள் இறந்தார். வீட்டில் நிம்மதியைப் பாதுகாத்த ஒரே ஜோதி அணைந்து விட்டது.

பில்வமங்கள் தந்தையின் சமக்கிரியைகள் முடியக்கூட இல்லை. அதற்குள் சிந்தாமணி நினைவு அவருக்கு வந்துவிட்டது. அவளைப் பார்க்காத விரகம் அவரை நெருப்பாக வாட்டியது. புறப்பட்டார். சில நாட்களாக இடியும் மழையுமாக இருந்தது. அன்று பெரிய புயல் வீசியது. அதை அவர் பொருட்படுத்தவில்லை. கிரியைகளுக்காகப் பட்டினி போட்ட உடம்போடு கிளம்பினார். யார் நிறுத்தியும் பொருட்படுத்தவில்லை.

ஊருக்கு வெளியே கிருஷ்ண வீணா என்ற நதி. அது இப்போது பெருக்கெடுத்து ஓடியது. நன்றாக இருட்டி விட்டது. இரு கரைகளும் தெரியவில்லை. ஆற்றைக் கடக்கப் படகில்லை.

பில்வமங்கள் துடித்தார். சிந்தாமணியை அவர் எப்படியும் அன்று பார்த்தாக வேண்டும். இல்லாவிடில் உயிர் தரியாது.

தண்ணீரில் குதித்தார். ஆற்றில் நீந்த ஆரம்பித்தார். சிறிது தூரம் போனதும் கை சளைத்து விட்டது. நீந்த முடியவில்லை. தண்ணீரில் மூழ்க வேண்டிய நிலை. அப்போது தெப்பக் கட்டை போல் ஏதோ பொருள் கிடைத்தது. அது அவரைக் காப்பாற்றியது. அந்தக் கட்டையின் உதவியால் மூழ்காமல் தப்பினார். நீந்தி அக்கரை சேர்ந்தார். கட்டையைக் கரை ஓரம் ஒதுக்கிவிட்டுக் கரை ஏறினார்.

ஓட்டமும்நடையுமாக சிந்தாமணிவீட்டை அடைந்தார். இருட்டி வெகு நேரம் ஆகி விட்டது. அவள் தூங்கி இருந்தாள். கதவைத் திறக்க ஆளில்லை. வீட்டைச் சுற்றி வந்தார். ஒரு புறத்தில் பருமனை கயிறு ஒன்று தொங்கியது. அதைப் பிடித்து மேலே ஏறினார். வீட்டு முற்றத்தில் குதித்தார்.

சத்தம் கேட்டு சிந்தாமணி விழித்தாள். யார் என்று கேட்டு வந்தாள். விளக்கை ஏற்றினாள். பில்வமங்களைப் பார்த்ததும் ஆச்சரியப்பட்டாள். இந்த மழையிலும் புயலிலும், இந்த இரவு வேளையில் இப்படி ஒரு நதியை நீந்தி வருவார் என்று எதிர்பார்க்கவில்லை. தன்மீது பில்வமங்களுக்கு இருக்கும் அன்பும் விசுவாசமும் ஆச்சரியத்தைத் தந்தன. அதே நேரம் சங்கடத்தையும் தந்தது.

தவிர, பில்வமங்களின் தந்தை இறந்திருப்பது அவளுக்குத் தெரியும். கிரியைகள் நடக்கும் நாளில் பில்வமங்கள் அவளைத் தேடி வந்தது அவளுக்குப் பிடிக்கவில்லை. அவன் மீது உள்ள மோகத்தை அது காட்டினாலும் அது பாவம் என்று கருதினாள்.

"சுவாமி! தாங்கள் செய்தது சரியில்லை! தங்களது குடும்பத்தில் துக்கம் ஏற்பட்டிருக்கிற வேளையில் அங்கு இல்லாமல் இப்படி என்னைப் பார்க்க வரலாமா? அது தப்பு ஆயிற்றே. என்மீது இருக்கும் பற்றில் ஒரு சிறிதாவது பகவான் மீது இருந்தால் எவ்வளவோ நல்லதாயிற்றே! தாங்கள் பண்டிதர். இப்படிச் செய்யலாமா?" என்று கேட்டாள்.

ஒரு தாசியின் வாயிலிருந்து வரும் அதிசயமான மொழிகளைக் கேட்டு பில்வமங்கள் திகைத்து நின்றார். சிந்தாமணியா அப்படிப் பேசுகிறாள் என்று தோன்றியது. பதில் சொல்ல முடியவில்லை.

அதற்குள் சிந்தாமணி அவர் உடம்பைப் பார்த்து "இதெல்லாம் என்ன கறைகள்?" என்று திடுக்கிட்டுக் கேட்டாள்.

பில்வமங்களுக்கும் கறைகளின் காரணம் தெரியவில்லை.

சிந்தாமணிக்குச் சந்தேகங்கள் வந்தன.

அப்போது பொழுது விடிந்து கொண்டிருந்த நேரம்.

வானம் தெளிந்திருந்தது. புயல் அடங்கி விட்டது.



## இவர்கள்

தஞ்சாவூரில் குறிப்பிடத்தக்க புள்ளியாக திகழும் திருமதி தனம்மாள் திருவையாறு சீனிவாசராவ் மேல் நிலைப் பள்ளியில் இடைநிலை ஆசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

சௌராஷ்டிரா மத்ய சபை மாதர் நலக் குழுவின் செயலாளரான இவர், அங்கு தையல், பொம்மை செய்தல், எம்பிராய்டரி, இரவுப் பள்ளிக்கூடத்தில் பெண்களுக்கு கல்வி ஆகியவற்றைக் கற்பித்து வருகிறார்.

தஞ்சையின் முதல் ஹிந்திப் பண்டிட்டான இவர் 1953ல் தஞ்சை நகரசபையில் கௌன்சிலராகவும் பணியாற்றியிருக்கிறார். தாம் வசிக்கும் பகுதியில் சிறுவர், சிறுமிகளுக்குத் தரமான பள்ளுக்கூடம் இல்லை என்று ஆங்கிலப் பள்ளியொன்றை நிறுவியிருக்கிறார்.

சிந்தாமணி பில்வமங்களை அழைத்துக் கொண்டு வீட்டுக்கு வெளியே வந்தாள்.

பில்வமங்கள் தாம் வீட்டுக்குள் ஏற உதவிய தாம்புக் கயிற்றைக் காட்ட, இருவரும் திடுக்கிட்டார்கள்.

அது கயிறல்ல. கூரையிலிருந்து ஒரு பாம்பு தொங்கிக் கொண்டிருந்தது. அதைப் பிடித்துத்தான் பில்வமங்கள் மேலே ஏறி முற்றத்தில் குதித்திருக்கிறார்.

அதிசயித்த அவர்கள் நேராக ஆற்றுக்குச் சென்றார்கள். ஆறு பெருக்கெடுத்து ஓடியது. பில்வமங்கள் தாம் கரையேறிய இடத்தை அடையாளம் காண்பித்தார்.

இருவரும் போய்ப் பார்க்க,

பில்வமங்கள் நீச்சலடிப்பதற்கு உதவியாயிருந்த கட்டை ஒரு துணியோடு கிடந்தது.

அருகில் சென்று பார்க்கும்போது, அது விறைத்துக் கிடந்தது.

அது கட்டையல்ல. பில்வமங்களின் மனைவியின் பிணம்! அவள் தற்கொலை செய்திருந்தாள். கணவனின் போக்கு அவளுக்குப் பிடிக்கவில்லை. ஆற்றில் விழுந்து இறந்த அவளது உடலைத்தான் பில்வமங்கள் கைப் பற்றித் தமக்குத் தெப்பமாய்ப் பயன் படுத்தியிருந்தார்.

இறந்த பிறகுகூடத் தமக்கு வாழ்வளித்தாளே என்று பில்வமங்கள் நினைத்தார். அவர் கண்கள் கலங்கின. முதல் முறையாக மனைவிக்காகவும் குடும்பத்துக்காகவும் கண்ணீர் விட்டார்.

சிந்தாமணி உடனே, ''சுவாமி! வாழ்க்கைத் துயரமானது. ஒரே புகல் கடவுள்தான். கிருஷ்ணரை நினையுங்கள். அவரது புகழைப் பாடி மற்றதையெல்லாம் மறந்து விடுங்கள்! நமக்கு நிரந்த இன்பம் கிடைக்கும்'' என்றாள்.

பில்வமங்களுக்கு அது தேவ வாக்காகப் போயிற்று. அன்றிலிருந்து மாறிவிட்டார். தமது உடைமைகள் யாவற்றையும் துறந்தார். கிருஷ்ணனை நினைத்து எப்போதும் அவன் புகழையே பாடி, நேராகப் பிருந்தாவனம் சென்றார். மன உருகிக் கசிந்தார். கண்ணீரால் தம் மேனியை நனைத்தார். இரவும் பகலும் 'கோவிந்தா, கிருஷ்ணா, தாமோதரா!' என்று புலம்பி அழுதார்.

''உன்னைக் காண வேண்டும்'' என்று விரக தாபத்தில் புலம்பினார்.

கடும் தவமும் தியானமும் முடிந்த பிறகு அவருக்குக் கண்ணனின் தரிசனம் கிடைத்தது. தமது திருக் கையால் பகவானே தமது பக்தனின் உடம்பைத் தொட்டார். பில்வமங்கள் பேரானந்தத்தில் மூழ்கினார். பிறகு கண்ணன் தமது கையை எடுத்த போது, பில்வமங்கள் வெதும்பி,

> ஹஸ்தம் உத்க்ஷிப்யே யதோ ஸி பலாத்
> கிருஷ்ண கிம் சித்புதம்!
> ருதயத் யதி நிர்யாஸி பௌருஷம்
> கண்யாமி தே!

'என் பலவீன கை அணைப்பிலிருந்து பலத்துடன் போக முயல்வது அற்புதமா? என் இருதய அணைப்பிலிருந்து நீ போக முயற்சித்தால்தான் உன் பலத்தை நான் பெரிதாக நினைப்பேன்!'' என்று பாடினார்.

தரிசனம் கிடைத்த நாளிலிருந்து பிருந்தாவனத்தில் விஹாரத் துறையில் இருந்து கொண்டு (கோவிந்த தேவர் கோவிலுக்கு எதிர்ப்புறமாக உள்ளது இந்தத் துறை) சாதுக்களோடு சேர்ந்து கடவுள் நாமத்தையே பாடிக் கொண்டிருந்தார் பில்வமங்கள்.

அவர் புகழ் சிந்தாமணிக்கு எட்டியது. 'தான் மட்டும் உலக வாழ்க்கையில் ஏன் இருக்க வேண்டும்?' என்று நினைத்து, துறவு பூண்டு பில்வமங்கள் பக்கமே வந்து சேர்ந்தாள். பில்வமங்களின் ஞானத்தைக் கண்டு அவளுக்கும் வேகம் எழுந்தது. 'கண்ணனே எனக்கு அமுது ஊட்டினால் தவிர உண்ண மாட்டேன்' என்று உறுதி எடுத்தாள். உண்ணாமல் மெலிந்தாள். கண்ணனை நினைத்துக் கசிந்தாள். கடைசியில் கண்ணன் அருள் அவளுக்கும் கிடைத்தது. கண்ணனே அவளுக்கு முதல் அமுது ஊட்டினான்.

பின்னர் பில்வமங்களும், சிந்தாமணியும், பஜனையும் கீதமுமாக வாழ்க்கையைக் கழித்தார்கள். பில்வமங்கள் பாட, அதற்கு இசைய சிந்தாமணி தெய்வ நடனம் புரிந்தாள். பார்ப்பவரும், கேட்பவரும் பரவசம் ஆனார்கள்.

பில்வமங்களின் வாயிலிருந்து வடமொழியில் அற்புதமாய்க் கவிதைப் பெருக்கு வந்தது.

''கிருஷ்ண கர்ணாம்ருதம்'' என்று வழங்கப் பெறும் கிருஷ்ண லீலைப் பாடல்கள் இன்றும் நமக்குக் கிடைப்பவை. அவற்றை பஜனைப் பாடல்களில் கலந்து நாம் இன்றும் பாடுகிறோம்.

ஒரு பாடல்:

> லீங்கனு மங்கனு மந்தரே மாதவோ,
> மாதவம் மாதவம் சாந்தரேணங்கனு!
> இத்தமாகல்பிதே மண்டலே மத்யக:
> ஸஞ்ஜகௌ வேணுனா தேவகீ நந்தன:

தமது குரு தேவதாசி சிந்தாமணிதான் என்பதைச் சொல்லி அவர் துதிசெய்யும் பாடல் இதோ:

> சிந்தாமணிர் ஜயதி ஸோமகிரிர் குரூர் மே!
> சிக்ஷா குருஸ்ச பகவான் ஸிகிபிச் மௌமி!

'எனது குருக்களான சிந்தாமணி, ஸோமகிரி கண்ணன் ஆகியவர்களை வணங்குகிறேன். சிந்தாமணிதான் என் முதல் குரு.'



தக்காளியை முதன் முதலில் உலகுக்கு அறிமுகப்படுத்திய நாடு இத்தாலி. அமெரிக்கர்கள் தக்காளியை 'காதல் ஆப்பிள்' என அழைக்கின்றனர்.

# 1981ல், 1980ல் நாட்டப்பட்ட அடிக்கல்லின்மேல் கட்டுமானம் செய்வோம்

1980ல், கட்டுக்கடங்காது பெருகிய பண வீக்கம் கட்டுப்படுத்தப்பட்டு, நிலக்கரி, மின்சாரம், தொழில் துறைப் பொருட்கள் மற்றும் உணவுத் தானியங்களின் உற்பத்தி கணிசமாக கூடுதலாக்கப்பட்டது.

சமூகத்தின் ஏதேனுமொரு பிரிவினர், தேசீயப் பயனில் தமக்கு மிகப் பெரிய பங்கு வேண்டுமென கோருமுன்னர், நாம் கண்ட பயன்களை உறுதிப்படுத்தி உற்பத்தியை அதிகரிக்க இது தருணம்.






## கடும் உழைப்பும் சுயக் கட்டுப்பாடும் நமது கொள்கையாக வேண்டும்

davp 80/451

தென் ஆப்பிரிக்காவில் வீட்டு வேலைகள் செய்ய வேலைக்காரி கிடைப்பது மிகவும் சிரமம். ஆப்பிரிக்கப் பெண்கள் இந்தியர் வீட்டில் வேலை செய்வதை அவ்வளவாக விரும்புவதில்லை. அவர்களை வேலைக்கு வைத்துக்கொள்வதில் பல தொல்லைகள். பெயர், ஊர், மற்ற விவரங்களைச் சொல்லி அரசியலார் அலுவலகத்தில் பதிவு செய்து விட்டுத்தான் வேலைக் கமர்த்த முடியும். இந்தியப் பெண்களை இந்தியர் எவ்வித இடைஞ்சலுமின்றி வேலைக் கமர்த்திக் கொள்ளலாம். ஆனால் வேலை செய்ய வருகிறவர்கள்தான் குறைவு. தொழிற்சாலைகளில் வேலை வாய்ப்பும் நிறையச் சம்பளமும் வார இறுதியில் ஓய்வும் கிடைப்பதால் இந்தியப் பெண்கள் வீட்டு வேலைக்கு வரமாட்டார்கள். எங்கேயாவது கிராமத்துப் பக்கத்தில் படிப்பும் தொழிற்சாலை வேலைக்குத் திறமையும் இல்லாத பெண்கள் அபூர்வமாக வீட்டு வேலை செய்ய ஒத்துக்கொண்டு வருவார்கள். அவர்களை நாம்தான் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும். ராஜி சரோஜனிக்குச் சொன்னாள். அவள் கண்ணம்மாவுக்குச் சொன்னாள் — அவள் எனக்குச் சொன்னாள் என்று யார் யாரோ சொன்ன தகவலை வைத்துக் கொண்டு காரை எடுத்துக் கொண்டு பல கிலோ மீட்டர் தூரம் பயணப்பட்டு வேலைக்காரியைக் கண்டு பிடித்து வீட்டுக்கு அழைத்து வரவேண்டியிருக்கும்.

ஒரு சமயம் இப்படி யாரோ சொன்ன விவரத்தை வைத்துக் கொண்டு தோழியைத் துணைக்கு அழைத்துக் கொண்டு வேலைக்காரியைக் கண்டு அழைத்து வர நான் காருடன் கிளம்பினேன்.

நூறு கிலோ மீட்டர் பயணப்பட்டு முடிவில் தென்பட்ட கிராமத்தின் எல்லையிலிருந்த

# கண்ணியாத்தா வந்தாள்!



'லக்ஷ்மி'

ஒரு சிறு தோட்டத்துக்குள் கார் நுழைந்தது. சுற்றிலும் ஒரே புதர். நடுவில் ஒரு சிறு தகரக் கூரை வீடு. நாங்கள் போன சமயம் தந்தை மண்வெட்டியால் தோட்டத்தைக் கொத்திப் பாத்தி கட்டிக் கொண்டிருந்தார். தாயார் குழாயடியில் பாத்திரங்களைத் தேய்த்துக் கொண்டிருந்தாள். முழங்கையிலும் முகவாயிலும் கரியைப் பூசிக் கொண்டிருந்தாள். எங்களைக் கண்டதும் பரபரப்புடன் கையைக் கழுவிக் கொண்டு வாராது புரண்டு கிடந்த கூந்தலைத் தட்டி முடிந்து கொண்டு ஓடிவந்தாள். அதற்குள் அக்கம் பக்கத்து வீடுகளிலிருந்து எங்களைப் பார்க்க ஒரு கூட்டம் சேர்ந்து விட்டது.

நாங்கள் வந்த விஷயத்தை ஆரம்பித்தோம். ''வேலைக்கு நீங்கள் பெண்ணை அனுப்பப் போவதாகக் கேள்விப்பட்டோம். உங்கள் மகள் எங்கே?'' என்று என் தோழி கேட்டாள்.

''கடைக்குச் சாமான் வாங்கப் போயிருக்காள், வருவாள் இருங்க'' என்று உபசரித்தார் தந்தை. அரை மணிக்கு மேல் காத்திருந்தோம். கூடியிருந்த மற்ற இந்தியப் பெண்கள் கேட்ட கேள்விகளுக்குப் பொறுமையாகப் பதிலளித்தோம்.

முடிவில் பெண் வந்தாள். வீட்டுச் சாமான்கள் நிறைந்த கூடையைத் தலையில் சுமந்து கொண்டு வந்தவளைப் பார்த்தேன். திகைப்பாகி விட்டது.

உதட்டில் சாயம், நகங்களில் பூச்சு! உயர போட்டிருந்த கொண்டையில் ஒத்தை ரோஜா! குட்டை பாவாடை பிளவுஸ், ஹைஹீல்ஸ் ஷூ... இந்த அலங்காரத்தில் இருப்பவள் வீட்டு வேலை செய்வாளா?... ரொம்பக் கவலையாகி விட்டது.

குப்பம்மா என்ற தம் மகளைத் தந்தை டாலி என்று செல்லமாக அழைத்தார்.

''இலங்க வீட்டுக்கு வேலைக்குப் போறியாம்மா? கூட்டிக்கிட்டுப் போக வந்திருக்காங்க... பிறகு என்மேலே குத்தம் சொல்லாதே. இஷ்டமில்லாட்டி நாம எல்லாரும் இருக்கிற கஞ்சியைப் பகிர்ந்து குடிக்கலாம்... என்ன சொல்றே...'' பீடிக் கையுடன் தன் மீசையைத் தடவிக்கொண்டார்.

''ரேடியோகிராம் இருக்கா... எனக்கு வேலை செய்யறப்போ ரிகார்டு போட்டு விளையாடிக்கிட்டே வேலை செஞ்சாத்தான் அலுப்புத் தோணுது.'' என்றாள் அவள்.

அடி சக்கை! இருநூறு பவுன் போட்டு நான் வாங்கி வைத்திருக்கும் ரேடியோகிராமில் இவள் புகுந்து விளையாடணும் என்கிறாளா, பேஷ்! மனத்துக்குள் எரிச்சல் பட்டேன். ''இருக்கு'' என்று தலையாட்டினேன்.

''ஊட்லே எத்தனை பேரு? ரொம்பத் துணிமணிகள் விழுமா? வாரத்துக்கு இரண்டு வாட்டி கறியும் மீனும் கிடைக்குமா? சினிமாவுக்கு அனுப்புவியா?''

''கணவன் — மனைவி, பள்ளிக்குப் போகும் சிறுவன் ஆக மூணு பேர் அடங்கிய குடும்பம். சைவ உணவுக்காரர்கள். வேண்டுமானால் காசு தரேன். வெளியில் வேண்டியதை வாங்கிச் சாப்பிட்டுக்கோ'' என்றேன்.

''புஷ் வாஷிங் மெஷின், பாலிஷிங் மெஷின், வாக்வம் கிளீனர், துணி துவைக்கும் மிஷின் இதுகள் இருக்கா?'' — அடுத்த கேள்வி.

இவைகளின் ஸ்விட்சுகளை எனக்குத் தட்டி ஓட்டத் தெரியும். இவைகள் வேலை செய்த பின்னர் நீ எதுக்கு? ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. அடக்கிக் கொண்டேன்.

''இருக்கு'' என்று தலையாட்டினேன்.

மாதம் இத்தனை சம்பளம். தினசரி இவ்வளவு நேரம் ஓய்வு, வாரத்துக்கு ஒரு நாள் விடுமுறை... என்று நிபந்தனைகளை விதித்தார் அப்பா.

எல்லாவற்றுக்கும் தலையை ஆட்டினேன். பல வேலைக்காரர்களிடம் பெற்ற அனுபவத்தின் பயனாக நானும் சில கேள்விகளைக் கேட்பதுண்டு. அவைகளை மெதுவாக ஆரம்பித்தேன்.

''உனக்கு அடிக்கடி சளி ஜுரம் வருமா?''

''வீட்டை நினைச்சு நடு ராத்திரி அழுது புலம்பி ஊருக்குப் போகணும்னு அடம் பிடிப்பியா?''

''கை நகங்களை வெட்டி சுத்தமாக் குளிச்சுட்டு சீருடை போட்டுக் கொண்டு வேலை செய்வியா?''

''பச்சைத் தண்ணீரைத் தொட்டால் ருமாட்டிஸம் வந்துடுமா? உங்க வீட்டில் யாருக்காவது ஆஸ்துமா, காச நோய் இதுகள் உண்டா? உனக்கு காதலன் இருக்கிறான். அவன் அடிக்கடி தொலை பேசியில் கூப்பிடுவானு? (நான் தொலை பேசியைப் பூட்டிவிட்டு வேலைக்குப் போய்விடுவது வழக்கம்.)

ஒரு வழியாக நான் கேட்க வேண்டிய கேள்விகளைக் கேட்டாகி விட்டது. எங்கள் வீட்டில் வேலை செய்ய ஒப்புக் கொண்டு அவள் தன்

---

சுயநலம் என்பது ஒரு
சிறு உலகம். அந்த
உலகில் ஒரு மனிதன்
மட்டுமே வாழ முடியும்

- நார்வே நாட்டு பழமொழி

தகவல்: - திருச்சிற்றம்பலம் முத்து



துணி மூட்டையுடன் கிளம்பினாள். அவளை நான் கடத்தல் செய்து கொண்டு போகிறேனோ என்று சந்தேகப்பட்ட அவள் தந்தை தாய், பக்கத்து வீட்டு அத்தை மாமி எல்லோரும் எங்கள் காரில் இடித்துப் பிடித்துக் கொண்டு எங்கள் வீட்டுக்கு வந்தார்கள். வீட்டைப் பார்த்துச் சமாதானமடைந்து தம் பெண்ணை வேலைக்கு அமர்த்திவிட்டுப் புறப்பட்ட தந்தைக்கும் கூட வந்தவர்களுக்கும் சாப்பாடு போட்டு வீட்டுக் காரில் திரும்ப அனுப்ப நேர்ந்தது.

எங்கள் வீட்டு வேலைகளை அவள் எப்படிச் செய்ய வேண்டும் என்று நான் காட்டியதைப் பார்த்தபடி நான்கு தினங்கள் ஓட்டிவிட்டாள். ஆனால் வயிறுரச் சாப்பிட மறக்கவில்லை. வேளை தவறாது தேநீர் போட்டுப் பருகினாள். பிரிஜ்ஜைத் திறந்து நான் வாங்கி வைத்திருந்த ஐஸ்கிரீமை ஒரு கை பார்த்தாள். குழந்தைக்கு என்று வைத்திருந்த சாக்லெட், கேக்குகள், பிஸ்கட்டுகள், எல்லாம் விரைவில் காலியாயின. வந்த நாளிலிருந்து ஒரு வேலையும் உருப்படியாகச் செய்யாதிருப்பதைக்காண எனக்கு எரிச்சல் பற்றிக் கொண்டுவந்தது.

அன்று சனிக் கிழமை. எனக்கு ஆஸ்பத்திரியில் ஓய்வு நாள். மார்க்கெட்டிலிருந்து வாரத்துக்கு வேண்டிய காய்கள், பழங்கள் வாங்க எங்களது ஆப்பிரிக்க வேலையாள் ஜோஹனசுடன் நான் காரில் புறப்பட்டேன்.

''சீக்கிரம் பிரிஜ்ஜைத் துடைத்துத் தயாராக வை. காய்கறிகளுடன் நான் விரைவில் மார்க்கட்டிலிருந்து திரும்புவேன். மசமசன்னு நிக்காதே'' என்று அதட்டிவிட்டுக் கிளம்பியிருந்தேன். கொஞ்ச நேரத்தில் நான் திரும்பி வந்தபோது எங்கள் வீட்டு முன் அறையில் ஒரு பெரிய கூட்டம்.

அக்கம் பக்கத்துப் பெண்கள் புடைசூழ டாலி நாக்கை நீட்டிக் கொண்டு தலைவிரி கோலமாகத் தரையில் விழுந்து கிடந்தாள். பயந்துபோய்விட்டேன் நான்.

'ஒண்ணுமில்லே. டாலி மேலே கன்னியாத்தா வந்திருக்கு. அவ்வளவுதான்' என விளக்கம் தெரிவித்தாள் கூடியிருந்த பெண்களில் ஒருத்தி.

வீட்டு வேலை போட்டது போட்டபடி கிடக்க முன் அறையில் டாலி மருள் வந்து கிடந்ததைக் கண்டு எனக்குக் கோபம் மூண்டு எழுந்தது. கூடியிருந்தவர்களை அனுப்பி விட்டுக் கதவைச் சாத்தினேன். ஆப்பிரிக்க வேலையாளைக் கூப்பிட்டு வீட்டு வேலைகளைக் கவனிக்கச் சொன்னேன்.

தரையில் படுத்துப் புரண்டபடி உம்... அம்... என்று கத்தி அவள் அமர்க்களப்படுத்தியதைக் காணாதது போல் அசட்டையாக இருந்தேன்.

திடீரென்று எழுந்து நின்ற அவள் என் அருகில் வந்து பற்களைக் கடித்து கண்களை உருட்டி மிரட்டலாக ''ங்கோ...ங்கோ....'' என்று கூவினாள்.



## தேங்காய் சரிபாதியாக உடைய

தேங்காய் உடைக்கும் பொழுது சில சமயம் ஒரு மூடி பெரியதாகவும், மறுமூடி சிறியதாகவும், சிலசமயம் கோணலாகவும், மூன்றாகவும் உடையலாம். இதைத் தவிர்க்க கீழ்க்கண்ட முறையைக் கையாளவும்.

தேங்காயை முதலில் தண்ணீரில் நன்றாக அலம்பவும். தேங்காயின் மேல்புறம் மூன்று கண்கள் இருக்கும். இதில் இரண்டு கண்கள் பக்கம் பக்கமாகவும் ஒரு கண் சற்று எட்டியும் இருக்கும். அந்த இரண்டு கண்களுக்கு கீழே உள்ள கோட்டை (உத்தேசமாக தேங்காயின் மத்திய பாகத்தில்) கல்லில் உடைத்தால் பெரும்பாலும் தேங்காய் சரிபாதியாக உடையும்.

- வெ. சியாமளாரமணி

---

''நான் மேலே இருக்கும் கன்னியாத்தா. உன் பெரியாத்தாளைக் கூட்டிக்கிட்டு நேரே வந்தாக்கூட நான் பயப்படற ஆசாமியில்லே. இந்த மிரட்டலே எல்லாம் உங்க ஊரிலே வைச்சுக்கோ... உனக்கு வந்திருக்கிறது ஒரு தினுசு வயிற்று வலி. அதுக்கு உடனடியா ஆபரேஷன் செய்தாகணும்... உன்னே இப்போ ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப் போறேன். முதலில் ஒரு ஊசி போடறேன்.'' சொல்லிக் கொண்டே மருந்துப் பெட்டியைத் திறந்தேன்.

''ஆண்டி!'' எனக்கு வயித்து வலி இல்லே. மருள் வந்திருக்கு... எங்க குலதெய்வம் கன்னியாத்தா என் மேலே அடிக்கடி வருவா....'' வாய் திறந்து படபடவென்று பேசினாள்.

''உன் கன்னியாத்தாவோட நீ இப்பவே மூட்டை கட்டிக் கொண்டு சம்பளத்தைக் கணக்குப் பார்த்து வாங்கிட்டு நட... காரில் உன்னைத் திரும்ப ஊரில் கொண்டு விட ஏற்பாடு செய்யறேன். உம்... கிளம்பு''— அதட்டினேன். அவளும் சட்டென்று மூட்டையைக் கட்டிக் கொண்டு ஆயத்தமானாள்.

அதற்குப் பின்னர் இந்தியவேலைக்காரியைத் தேடிக்கொண்டு நான் செல்லும்போது நான் கேட்கும் கேள்விகளில் மிக முக்கியமானது 'உங்கள் பெண்ணுக்கு மருள் வருமா...உங்க குல தெய்வம் அவ மேலே வந்து குறி சொல்ற வழக்கம் உண்டா?...'

# குரோஷா பின்னலாம்!

1. நூல் கண்டின் ஒரு நுனியை இடது கைப் பெருவிரலுக்கும் ஆள்காட்டி விரலுக்கும் இடையில் வைத்துப் பிடித்துக் கொண்டு வலது கையால் நூலில் ஒரு வளையம் செய்து கொள்ளுங்கள். அந்த நூல் வளையத்தைப் படத்தில் உள்ளது போல் இடது கைப் பெருவிரலாலும், ஆள்காட்டி விரலாலும் பிடித்துக் கொள்ளுங்கள்.

2. எழுதுவதற்குப் பென்சிலைப் பிடித்துக் கொள்வது போல் குரோஷா ஊசியின் அகலமான பகுதியைப் பிடித்துக் கொள்ளுங்கள். ஊசியின் வளைந்த முனையை (கொக்கியை) நூல் வளையத்தின் வழியாகப் படம் 2-ல் கொடுக்கப்பட்டுள்ளது போல் மாட்டிக்கொள்ளுங்கள். வலது கையால் நூலின் நீண்ட பகுதியைப் பிடித்துக் கொள்ளுங்கள்.

3. ஊசியை எடுக்காமல் நூல் வளையத்தைக் கெட்டியாக இழுத்துக்கொள்ளுங்கள். குறைந்த அளவு நூலை எதிர்ப் புறத்திலிருந்து இழுத்து ஊசி முனைக்கு அருகில் நூல் வருமாறு செய்துகொள்ளுங்கள்.

4. அதற்குப் பின் படத்தில் உள்ளது போல் நூலை இடது கையால் சுற்றிக்கொண்டு ஊசி முனையையும், நூல் வளையத்தையும் பிடித்துக் கொள்ளுங்கள். அப்படியே நூலை மெதுவாக இழுத்து அது இறுக்கமாகப் பொருந்தி யிருக்குமாறு முடிச்சு அமைத்துக் கொள்ளுங்கள்.

5. அந்த முடிச்சினை ஆள்காட்டி விரல், கட்டை விரல் இரண்டுக்குமிடையில் வைத்து பிடித்துக்கொண்டு, ஊசியை, படம் 5-ல் காட்டியுள்ளது போல் வலது கையால் பிடித்துக்கொள்ளுங்கள்.

6. ஊசி முனையை நூலுக்குக் கீழே செலுத்திப் பிடித்துக் கொண்டு முதலில் அமைந்துள்ள முடிச்சின் வழியே இழுத்து ஒரு சங்கிலி அமைத்துக் கொள்ளுங்கள்.

7. சங்கிலி - சங் - குரோஷாவின் அடிப்படையே சங்கிலிதான். நூல் வளையத்தை (முடிச்சினை) ஊசியில் வைத்துக் கொண்டு,

1



2.



3.



4.



5.



6.



7.



நாலுக்குக் கீழே ஊசியைச் செலுத்தி, நூல் வளையத்தின் வழியே இழுங்கள். இதைப் போல வேண்டும் நீளம் வரும்வரைக்கும் மீண்டும் மீண்டும் செய்யுங்கள். (படங்கள் 7, 8.)

9. நழுவுத் தையல் (Slip stitch) கொக்கி யின் இடது பக்கத்தில் உள்ள தையலினுள் கொக்கியை நுழைத்து நூலை கொக்கியின் நுனியால் பிடித்து தையல் வழியாகவும், கொக்கியில் இருக்கும் வளையத்தின் வழியாக வும் இழுத்துக் கொள்ளவும்.

10. இரட்டைக் குரோஷா (Double Croclet) இ. கே.: கொக்கியின் இடது பக்கத்தில் உள்ள தையலினுள் கொக்கியை நுழைத்து நூலைக் கொக்கியின் நுனியால் பிடித்துத் தையல் வழியாகவும், கொக்கியில் மாட்டி யிருக்கும் இரண்டு வளையங்கள் வழியாகவும் இழுக்கவும். (இதில் ஒரு வளையம் கொக்கி யிலேயே தங்கிவிடும்) இதேபோல் கொக்கி யில் இடப் பக்கத்தில் உள்ள ஒவ்வொரு தையலினுள்ளும் நுழைத்துப் பின்னவும்,



8.







# நாற்காலி விரிப்பு

**நாற்காலி விரிப்பு:**

மதுரை கோட்ஸ் ஆங்கர் மெர்சன் எண் 10 (20 grms கிராம்ஸ்) 6 பந்து பிடித்தமான கலர் (மெயின் கலர்) 3 பந்து அதற்கு தகுந்த கலர். ஸ்டீல் குரோஷா ஊசி எண் 3. (தையல் தளர்வாக இருந்தால் மெல்லிய ஊசியும், கெட்டியாக இருந்தால் பருமனான ஊசியும் உபயோகிக்கவும்)

நாற்காலி விரிப்பின் அளவு (8.8. cm)

நாற்காலி பின்பக்க அளவு (44.5 செ.மீ. 62 × 2. செ. மீ.)

நாற்காலி கை அளவு (35.5 செ. மீ.) சதுரம்.

**சுருக்கம்:**

சங்.சங்கிலி (செயின்) ந. தை.-நழுவு தையல் (Slip Stritch) இ. கு. இரட்டை குரோஷா (Double crochat) வி. மு–அரை முன்னூல் (Half treble) வளை– வளையம் (Loop) இ. மு-இரட்டை முந்நூல் (Double colour) மு. முன்னூல் (treble) கொ– கொத்து (cluster) இ. செ–திரும்ப செய்யவும் (Repeat) பி – பிகாட் (Picott) மூ.மு - மூன்று முன்நூல் (triple treble) நா. மு–நான்கு முன்நூல் (quadruple treble) ஐ.மு. ஐந்து முன்னூல் (quituple treble முக்கியமான கலர் (Main colour) த. க- தகுந்த கலர். (Contresting colour).

**முதல் அமைப்பு:**

முக்கியமான கலரில் 6 சங் பின்னி ந. தையலால் சேர்த்து வளையம் அமைக்கவும்.

**முதல் வரிசை:**

2 சங், வளையத்திற்குள் 1 மு. விருந்து 3 சங், ஊசியில் கடைசி வளையத்தை விட்டு விட்டு வளையத்தினுள் 2 மு. பின்னி, நூலை ஊசியில் போட்டு எல்லா வளையங்களையும் ஊசியினுள் கொண்டு வரவும். (2 மு கொண்ட கொத்து அமையும்) இ.செ. 6 முறை சங் 1 சங், 4 வி.மு. முதல் மு.வில் ஒரு வி. மு. (கொத்து)

**மூன்றாவது வரிசை:**

அதே இடத்தில் 3 சுவை ந. தையலினால் இணைத்து, 7 சங் ஊசியிலிருந்து 4வது சங்கிற்குள் 2 இ.மு. கொத்து, 5 சங் மற்றும் 3 இ.மு. கொத்து (கொடி மாதிரி செய்து) 4 சங், ஊசியில் கடைசி வளையத்தை விட்டு விட்டு விடுத்த வளையத்தில் ஒரு ஐ.மு. 1. மு. மு. 1 இ.மு. 2 மு (ஊசியின்மேல் நூல் போட்டு இரண்டு வளையத்தை இழுக்கவும்) 6 முறை (பெரிய இலை) 4 சங், ஊசியின் மேல் நூல் 6 முறை, ஊசியை விடுத்த மூவில் நுழைத்து நூலை மேல் போட்டு இழுக்கவும். (நூலை மேல் போட்டு 2 வளையமாக ஊசியில் எடுக்கவும்) 6 முறை (2 வளையம் ஊசியிலிருந்து விடவும்) ஊசியிலிருந்து கடைசி வளையத்தை விட்டு நடுவில் 2 மூ. மு. செய்து நூலை மேல் போட்டு எல்லா வளையத்தை ஊசியில் எடுத்து 7 சங் 3. மூ. மு. அதே இடத்தில் ஒரு கொத்து முன்பு மூ.மு. செய்த மாதிரி (முனையில் கொடி பின்னவும் 4 சங் விடுத்த வளையத்திற்குள், ஒரு பெரிய இலை, 4 சங் ஊசியின் கடைசி வளையத்தை விட்டு விடுத்த மூவில் ஒரு ஐ.மு. ஐமுவின் நடுவில் இ.மு. நூலை ஊசியின் மேல் போட்டு எல்லா வளையங்களையும் ஊசியினுள்கொண்டு வந்து, 5 சங் கடைசி இ.மு. செய்த இடத்தில் 3. இ. மு. கொத்து பின்னவும் (இன்னொரு கொடி பின்னவும்) 3 முறை அதிகம் செய்து திரும்ப செய்யவும். 1 நதை, முதல் கொத்தில் ஒரு ந.தை செய்து முடித்து விடவும்.

**4வது வரிசை :**

முதல் கொடியில் முக்கியமான கலரை 5 சங் வளையத்தினுள் சேர்க்கவும். 3 சங், 1 மு அதே வளையத்தில் 6 சங் (3 இ. மு. கொத்து விடுத்த 4 சங் வளையத்தில்) 2 முறை 6 சங், விடுத்த 7 சங் வளையத்தில் செய்து, 3 மூ. மு. கொத்து, 10 சங், 3 மூ. மு. கொத்து 6 சங் ( 3 மு. கொத்து விடுத்த 4 சங் வளையத்தில்) 2 முறை 6 சங். இ.மு. விடுத்த 5 சங் வளையத்திலிருந்து தி. செய்ய வும். கடைசியில் தி. செய்ததில் 2 மு. நீக்கி, 3வது வரி 3வது சங் 13.தை பின்னவும்.

**5வது வரிசை :**

முதல் மு.வில் 1 ந. தை லிருந்து (விடுத்த 6 சங் வளையம் செய்து 4 இ.கு. 5 சங் ஊசியி லிருந்து 5-வது சங் 1 ந.தை செய்து (4. இ.கு.) 3 முறை மற்றும் 4 இ.கு. (அடுத்த 6 சங் வளையம் செய்து 4 இ.கு. picot 4இகு.) 2 முறை தி.செ. கடைசியில் முதல் இ.கு.வில் 1 ந.தை. செய்துமுடித்து விடவும்.

முதல் அமைப்பு மாதிரி இரண்டாவது அமைப்பில் 4 வரி பின்னவும்.

**6வது வரிசை :**

முதல் மு.வில் 1 ந.தை (அடுத்த 6 சங்,வளையம் செய்து 4 இ.கு. — 4 இ.கு. 2 முறை விடுத்த 10 சங் வளையம் செய்து 4 இகு. — 4 இ.கு., 2 சங் அடுத்த 1 இகு. முதல் அமைப்பில் 2 சங் முதலில், முதல் வரி முதல் சங் 1 ந. தை (சேர்த்து — பின்னவும்) அதே 10 சங் வளையம் செய்து,4 இ.மு. சேர்த்து — மற்றும் 4 இ. கு. (அடுத்த 6 சங் வளையம் செய்து 6 இ. கு. சேர்த்து — மற்றும் 4 இ. கு.) 4 முறை 10 சங் வளையம் செய்து 4 இ. கு. சேர்த்து (picot.) 2 முறை 4 இ.கு. மற் றும் 4 இ. கு. முதல் அமைப்ப மாதிரி முடிக்கவும்.

ஐந்து அமைப்பை 7 வரிகள் செய்து இரண்டாவது அமைப்பின் முனையையும், முதல் அமைப்பின் முனையையும் சேர்த்து, மூன்று வது நான்காவது அமைப்பை முதல் இரண்டு அமைப்புடன் சேர்க்கவும். நான்கு அமைப்பை 4 வரிகள் செய்து முதலில் செய்த மாதிரி சேர்க்கவும்.

இரு வீட்டுத் தலைவிகள் சந்தித்தால் காஸ், கெரஸின் பேச்சாகவே இருக்கிறது. எல்லாம் அதிக விலை ஏற்றத்தினால் ப்ரஷர் குக்கரில் செய்தால் காஸ் நிறைய மிச்சமாகிறது. இந்த இதழிலிருந்து தொடர்ந்து சுலபமாக, சீக்கிரத்தில் செய்யும் உணவு வகைகளைத் தரப்போகிறோம். இந்த இதழில் குஜராத்தியினர் செய்யும் சுலபமான உணவு வகைகளைத் தருகிறோம்.

## Handwo
## (ஹான்டவோ)

### தேவையான பொருட்கள் :

1 கப் அரிசி
1/3 கப் கடலை பருப்பு
1/3 கப் பயத்தம் பருப்பு
1/3 கப் துவரம் பருப்பு
1 கப் புளித்த தயிர்
4 பச்சை மிளகாய்
1 டீஸ்பூன் கடுகு
1 டீஸ்பூன் வெந்தியம்
1 டீஸ்பூன் மிளகாய் பொடி
சிறிது துண்டு பெருங்காயம்
சிறிது கருவேப்பிலை
சிறிது கொத்தமல்லி
சிட்டிகை சமையல் சோடா
தேவையான அளவு உப்பு
வதக்குவதற்க்கு எண்ணை

## "Shuffen Pavakkai"
## அடைத்த பாகற்காய்

### தேவையான பொருட்கள் :

8 நடுத்தர அளவு பாகற்காய்
3 உருளை கிழங்கு
1 தக்காளி
2 நடுத்தர அளவு வெங்காயம்
1/2 டீஸ்பூன் மஞ்சட்பொடி
2 பச்சை மிளகாய்
1 டீஸ்பூன் கரம் மசாலாபொடி
1 டீஸ்பூன் மிளகாய் பொடி
1 எலுமிச்சம் பழம்
தேவையான அளவு உப்பு
வதக்குவதற்கு எண்ணை

## ஓசாமன் (Osaman)
### தேவையான பொருட்கள் :

1 கப் துவரம் பருப்பு
1/4 கப் வெல்லம்
புளி அளவு எலுமிச்சம் பழம்
1 டீஸ்பூன் மிளகாய் பொடி
4 கிராம்பு
சிறிய துண்டு லவங்க பட்டை
சிறிய துண்டு இஞ்சி
4 பச்சை மிளகாய்
சிறிது கருவேப்பிலை
சிறிது கொத்தமல்லி
1 டீஸ்பூன் கடுகு
1/4 டீஸ்பூன் ஜீரகம்
தேவையான அளவு உப்பு
வதக்குவதற்கு எண்ணை

## பருப்பு (Dhal)

### தேவையான பொருட்கள் :

1 கப் துவரம் பருப்பு
1 தக்காளி
1/2 டீஸ்பூன் மஞ்சட் பொடி
1 டீஸ்பூன் கடுகு
1/2 டீஸ்பூன் ஜீரகம்
2 மிளகாய் வத்தல்
சிறிய துண்டு இஞ்சி



# குஜராத்தி சமையல்



**செய்முறை :**

அரிசி பருப்புக்களைச் சுத்தம் செய்து ஒன்றிரண்டாக உடைத்துக்கொண்டு, அதில் தயிர், நசுக்கிய பச்சை மிளகாய், கருவேப்பிலே, கொத்தமல்லி, சமையல் சோடா, மிளகாய்ப் பொடி, மஞ்சள் பொடி, தேவையான உப்பு போட்டு கெட்டியாகக் கரைத்து வாணலியில் சிறிது எண்ணெய் விட்டு, கடுகு, போட்டு வெடித்ததும் வெந்தயம், பெருங்காயம் போட்டு பொன்னிறமானவுடன் அந்த மாவில் கொட்டவும். பிறகு ஒரு மணி நேரம் ஊறவைத்து பரஷர் குக்கர் பாத்திரத்தில் எண்ணெய் தடவி, அதில் இந்த கலந்த மாவைக் கொட்டவும்.

**ஒசமன் பருப்பு செய்முறை :**

2 கப் துவரம் பருப்பில் 2– கப் தண்ணீர் மஞ்சள் பொடி சேர்த்து இன்னொரு ப்ரஷர் குக்கர் பாத்திரத்தில் வைக்கவும்.

**அடைத்த பாகற்காய் :**

3வது ப்ரஷர் குக்கர் பாத்திரத்தில் ஒரு கப் தண்ணீர் விட்டு உருளைக் கிழங்கைப் போடவும்.

- 2 ப்ரித் கப் தண்ணீர் (4, 6, 5, 7, 5) சீனியர் எலிகண்ட் மாடல் உபயோகித்தால் 2– கப் தண்ணீர்.

**ஓமாண்டஒூ :**

வெந்த பிறகு குறைந்த சூடுள்ள ஓவனில் மேலே மொர மொரப்பாகும் வரை வைத்து எடுக்கவும்.

**ஒசமான் :**

பருப்பிலிருந்த தண்ணீரை இன்னொரு பாத்திரத்தில் எடுத்து விடவும். அதில் வெல்லம் உப்பு பருப்பிலிருந்து எடுத்த தண்ணீரில் புளி தண்ணீரை விட்டு குறைந்த சூடில் சிறிது நேரம் வைக்கவும். அதில் கீறிய பச்சை மிளகாய், நசுக்கிய இஞ்சியைப் போடவும். வாணலியில் எண்ணெய் விட்டு பூண்டு, பட்டை, கருவேப்பிலே போட்டு நசுக்கிய கொத்தமல்லி போட்டு சூடாகப் பரிமாறவும்.

**அடைத்த பாகற்காய்**

**செய்முறை :**

பாகற்காயின் மேல் தோலே லேசாகச் சீவி, உப்புத் தண்ணீரில் அரை மணி நேரம் ஊறவைக்கவும். தண்ணீரை எடுத்துவிட்டு நீளத்தில் பாகற்காயைக் கீறிக்கொண்டு கொண்டு அதன் உள்ளே சிறிது உப்புப் போட்டுச் சிறிது நேரம் வைக்கவும். நறுக்கிய தக்காளி, உதிர்த்த உருளைக் கிழங்கு நன்ருக வதக்கி கீழே இறக்கு முன் எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து எடுக்கவும். பிளந்த பாகற்காயில் இவைகளை வைத்து நிரப்பவும். வாணலியில் எண்ணெய் விட்டு மெதுவாக நிரப்பிய பாகற் காய்களை வறுக்கவும். நன்ருக வதக்கியவுடன் சூடாகப் பரிமாறவும்.

**பருப்பு :**

பருப்பை மத்திஞல் நன்ருக மசித்து, அதில் நறுக்கிய தக்காளி, பச்சை மிளகாய், கொத்தமல்லி சேர்க்கவும். உப்பு சேர்த்து ஒரு கப் தண்ணீர் விட்டுக் குறைந்த தீயில் வைக்கவும். வாணலியில் சிறிது நெய் விட்டு கடுக வெடித்தவுடன், சீரகம் நறுக்கிய இஞ்சி, பூண்டு, மிளகாய் போட்டு வதக்கவும். மிளகாய் மொர மொரப்பானவுடன் எடுத்து, சூடாகப் பரிமாறவும்.

---

கறுப்பாக இருப்பவர்கள் அதற்காகக் கவலேப்பட வேண்டாம். அதஞல் நன்மை உண்டு. கறுப்புத் தோலுக்கு வியாதிக் கிருமிகளை எதிர்க்கும் சக்தி அதிகம் உண்டு!

ஆதாரம் : ஈவ்ஸ் வீக்லி

தகவல் : ஆனிதா ராமச்சந்திரன்



# எளிமையான அழகுக் குறிப்புகள்

முகத்திற்கு அழகு செய்வதற்காக நாம் அழகு நிலையங்களுக்கு போகாமலேயே, குறைந்த செலவில் வீட்டிலேயே அழகு செய்து கொள்ளலாம். உங்கள் சமையலறையில் கிடைக்கும் பொருட்களை கொண்டே தயார் செய்யலாம். வேலைகளுக்கு நடுவே சிறிது நேரம் முக அழகிற்காக ஒதுக்கினால் சுலபமாகவும், அதிக செலவு இல்லாமலும், வீட்டிலேயே தயார் செய்து முகத்தை அழகு படுத்தலாம்.

**ஆரஞ்சு**

சுலபமாக கிடைக்கக் கூடிய பழம் ஆரஞ்சு. சாதாரணமாக ஆரஞ்சை சாப்பிட்டு விட்டுத் தோலை தூக்கி எறிந்து விடுவோம். அப்படி தூக்கிப் போடாமல் தோல்களை வெயிலில் உலர்த்திப் பொடி செய்து வைக்கவும். ஸ்நானம் செய்வதற்கு முன்பு 3 தேக்கரண்டி ஆரஞ்சு பவுடரை சூடு செய்யாத 2 தேக்கரண்டி பாலை குழைத்து முகத்தில் தடவி 10 நிமிடங்கள் ஊறிய பிறகு குளிர்ந்த நீரில் முகத்தை கழுவினால் முகம் பளபளப்பாக இருக்கும்.

**கடுகு**

2 தேக்கரண்டி கடுகை எண்ணெ விடாமல் வாணலியில் வதக்கி 2 தேக்கரண்டி பால் ஊற்றி நைசாக அரைக்கவும். அதை முகத்தில் தடவி விட்டு 15 நிமிடங்கள் ஊறிய பிறகு குளிர்ந்த நீரில் முகத்தை கழுவினால் முகம் பளபளப்பாக இருக்கும்.

**எலுமிச்சம் பழம்**

பாதி மூடி எலுமிச்சம் பழம் பிழிந்த சாற்றை ஏதாவது ஒரு கிரீமுடன் கலந்து முகத்தில் தடவவும். உலர்ந்த ரஸத்தை பின் குளிர்ந்த தண்ணீரில் முகத்தை கழுவவும். முகம் பளபளப்பாக இருக்கும்.

**கடலைமாவு**

இது சுலபமாக சமையலறையில் கிடைக்கக் கூடியது. 2 மேசைக் கரண்டி மாவை சிறிது மஞ்சள் பொடி, 2 தேக்கரண்டி கடுகு எண்ணை கலந்து முகத்தில் தடவவும். உலர்ந்த பிறகு குளிர்ந்த நீரில் கழுவினால் முகம் அழகாக இருக்கும்.



# கறைகளை போக்கும் முறை



### பால் பாயிண்ட் இங்க்

ஸ்பிரிட்டினால் கறையை ஒற்றி நன்றாக கறைபடிந்த இடத்தை கசக்கவும். ரேயான் துணியாக இருந்தால் முதலில் பரிட்சை செய்யவும். ப்ளாஸ்டிக் சாமான் வகைகளில் கறை படிந்தால் சோப்பை தண்ணீரில் கரைத்து நனைத்த துணியால் தேய்த்து எடுத்து விடவும்.




### சைக்கிள் க்ரீஸ்

சில்க், பருத்தித் துணி, லினன், ரேயான், துணிகளில் உள்ள கறைகளை கார்பன் டெட்ரா குளோரைடில் நனைத்த துணியில் ஒற்றி கறைகளை எடுத்து விடலாம். அல்லது கார்பன் டெட்ரோ குளோரைடு, பிரெஞ்சு சாக்கினால் செய்த பேஸ்டை கறையின் மேல் தடவி உலர வைக்கவும். சிறிது நேரத்திற்குப் பிறகு பிரஷ்ஷினால் பிரஷ் செய்து விடவும்

### தார்

சாதாரணமாக துவைக்கும் பொழுது கறை போகாவிடில் டர்பன்டைன் அல்லது கார்பன் டெட்ரோகுளோரைடில் துணியை நனைத்து கீறி விடவும்.



### இரத்தம்

குளிர்ந்த தண்ணீர் அல்லது உப்புத் தண்ணீரில் கறை இருக்கும் பாகத்தை கசக்கவும், சாதாரணமாக துவைக்கவும்.

### நீலம்

வினீகர் கலந்த தண்ணீரில் துணியை நனைத்து இந்தக் கறையை எடுக்கவும்.



### மெழுகுவர்த்தியின் மெழுகு

சூடான மெழுகு வர்த்தி துணியில் படும் பொழுது, மெழுகை மூடிந்த வரை சுரண்டி எடுக்கவும். கரையின் கீழும், மேலும் ப்ளாடிங் பேப்பரை வைத்து இஸ்திரி செய்யவும். பர்னிசரிலிருந்து மெழுகுவர்த்தியை எடுப்பதற்கு கூர்மையில்லாத கத்தியை உபயோகிக்கவும். அதே இடத்தில் வினிகரில் நனைத்த துணியினால் அடைத்து உலர்த்தி பிறகு பாலிஷ் செய்யவும்.




### கறைகளை எடுக்கும் முறை :

சில்க், பருத்தித் துணி, லினன், ரேயான் துணிகளில் உள்ள கறைகளை கார்பன் டெட்ரா குளோரைடில் தோய்த்த துணியால் தேய்த்து கறைகளை எடுத்துவிடலாம்.

# இம்மாத இல்லத்தரசிகள்

முதல் பரிசு பெற்ற சமையற் குறிப்பு

## தேன்நிலவு அல்வா

**தேவையான பொருட்கள் :**

கால் படி பூசணிக்காய் துருவல்
அரை கிலோ சர்க்கரை
50 கிராம் கேரட்
50 கிராம் உருளைக்கிழங்கு
1 மூடி துருவிய தேங்காய்
50 கிராம் சர்க்கரைவள்ளிக் கிழங்கு
1 மூடி துருவிய தேங்காய்
50 கிராம் முந்திரி பருப்பு
50 கிராம் திராட்சை
அரைக்கால்படி நெய்
3 கனிந்த பூவன் பழம்
அரைக்கால் படி பால்
1 டீஸ்பூன் ஏலப்பொடி
சிறிது பச்சைக் கற்பூரம்
சிறிது குங்குமப்பூ

**செய்முறை :**

பூசணித் துருவலைத் துணியால் பிழிந்து கொள்ளவும். கேரட்டைத் துருவிக் கொள்ளவும். உருளை, வள்ளிக் கிழங்குகளை வேக வைத்துக் கட்டி இல்லாமல் பொடி செய்து கொள்ளவும். வாழைப் பழத்தைக் கரண்டியால் மசித்துக் கொள்ளவும்.

ஒரு சுத்தமான வாணலியில் பாலை ஊற்றிக் காயும்போது, துருவிய கேரட்டையும், பூசணியையும் போட்டுக் கிளறவும். காய்கள் பாலில் வெந்து, வதங்கியதும், உருளைக் கிழங்கு, வள்ளிக் கிழங்கு, தேங்காய் வாழைப் பழம் ஆகியவற்றை போட்டுக் கிளறவும். அடுப்பைச் சீராக எரிய விடவும். எல்லாப் பதார்த்தங்களும் நன்முகக் கலந்து நீர் சுண்டிப் பந்து போல் கருண்டு வந்ததும் சர்க்கரையைப் போட்டுக் கிளறி மீண்டும் லேகியம் போலானதும் முந்திரி, திராட்சையை வறுத்துப் போட்டு, நெய் சேர்த்துக் கிளறி, கீழே இறக்கி, வாசனை சாமான்களைக் கலந்து, ஒரு தட்டில் நெய் தடவி அல்வாவை பரப்பவும். இளம் சூட்டில் வெட்டிச் சாப்பிடலாம். இந்தப் பெயரும் இனிமை, இதன் ருசியும் இனிமையானது.

—திருமதி கிருஷ்ணமூர்த்தி, 31 முத்து விநயகர் தெரு மாடப்புரம், திருவாரூர்-610001

இரண்டாது பரிசுபெற்ற சமையற் குறிப்பு

## கட்லட் குழம்பு

**தேவையான் பொருட்கள் :**

6 கோழிமுட்டை
அரை கோப்பை கேரட் துருவல்
கால் கோப்பை பொட்டுக்கடலை மாவு
6 அல்லது 8 பச்சை மிளகாய்
ஒரு சிறியதுண்டு இஞ்சி
6 பருப்பு பூண்டு
1 மூடி துருவிய தேங்காய்
1 பெரிய வெங்காயம் (சன்னமாக நறுக்கியது)
3 (நறுக்கிய) தக்காளி

**மசாலா சாமான்கள் :**

கால் தேக்கரண்டி சீரகம்
அரை தேக்கரண்டி சோம்பு
2 தேக்கரண்டி தனியா
2 தேக்கரண்டி கசகசா
தேவையான அளவு உப்பு
அரைக்கால் தேக்கரண்டி மஞ்சள் பொடி
கால் கோப்பை கொத்தமல்லி (சன்னமாக நறுக்கியது
2 டீஸ்பூன் சமையல் எண்ணை

**செய்முறை :**

பூண்டு, இஞ்சியைத் தனியாக அரைத்துக் கொள்ளவும். பச்சை மிளகாயை வதக்கி மைபோல அரைத்துக் கொள்ளவும். மசாலா சாமான்களைத் தனியாக வறுத்து தேங்காய்த் துருவலுடன் சேர்த்து விழுதாக அரைக்கவும் (மிக்ஸியிலும் அரைக்கலாம்)

முட்டையை நன்றாகக் கடையவும். அத்துடன் உப்பு, கேரட் துருவல், பொட்டு கடலை மாவு, கால் தேக்கரண்டி அரைத்த மிளகாய் விழுது இவற்றையும் சேர்த்து நன்றாகக் கலக்கி நெய் தடவிய சிறு கிண்ணங்களில் ஊற்றி, ஆவியில் வேக வைக்கவும். ஆறிய பின் தனியாகக் கிண்ணத்தில் இருந்து எடுத்து வைக்கவும்.

வாணலியில் எண்ணெய் ஊற்றி அடுப்பில் வைத்துக் காய்ந்ததும் பூண்டு, இஞ்சிக் கல

வையைப் போட்டு வதக்கவும். எண்ணெய் பிரியும்போது நறுக்கிய வெங்காயம், தக்காளி, இவற்றைப் போட்டு வெங்காயம் பொன்னிறமாக மாறும்வரை வதக்கவும். பின்னர் அரைத்து வைத்துள்ள மசாலாச் சாமான்களையும் பச்சை மிளகாய் விழுது, உப்பு, மஞ்சள் தூள், இவற்றோடு இரண்டு அல்லது மூன்று கோப்பைகள் (தேவைக்கேற்ப) தண்ணீரையும் சேர்த்து நன்றாகக் கலந்து இருபது நிமிடங்கள் கொதிக்க விடவும். பின் கலவையை ஒரு அகன்ற பாத்திரத்தில் ஊற்றி, கட்லெட்களை அதில் போட்டு அரை மணி நேரம் ஊறவைக்கவும். கொத்தமல்லியை மேலே தூவிப் பரிமாறவும் பூரி, சப்பாத்தி, பரோட்டா, பிரெட் புலவு எல்லாவற்றுடனும் பரிமாறலாம்.

**—கே. என். புவனேஸ்வரி 5, 10வது கிராஸ் தெரு, சாஸ்திரி நகர், சென்னை-600 020**

மூன்றாவது பரிசுபெற்ற சமையற் குறிப்பு

# இட்டிலி பீஸா

**தேவையான பொருட்கள் :**

1 டம்ளர் புழுங்கல் அரிசி
டம்ளரில் மூன்றில் ஒரு பாகம் உளுத்தம் பருப்பு
1 டீஸ்பூன் வெந்தயம்
கறிக்கு : அரை கப் கேரட் துருவல்
அரை கப் தேங்காய் துருவல்
அரை கப் முள்ளங்கி துருவல்
அரை கப் பொடிப் பொடியாக நறுக்கிய முட்டைகோஸ்
2 பெரிய வெங்காயம் (மெல்லிசாக நீளமாக நறுக்கவும்)
கொத்தமல்லி
1 டீஸ்பூன் கடுகு
1 டீஸ்பூன் உளுத்தம் பருப்பு
2 மிளகாய் வற்றல்
4 பச்சை மிளகாய்
1 சிட்டிகை சீரகப் பொடி
எண்ணெ
தேவையான அளவு உப்பு

**செய்முறை :**

முதல் நாளன்று புழுங்கல் அரிசியையும் உளுத்தம் பருப்பையும் ஊறவைத்து இட்டிலி பதத்துக்கு அரைத்து வைத்துக்கொள்ளவும்.

வாணலியில் 6 டீஸ்பூன் எண்ணெயை விட்டு நறுக்கிய வெங்காயத்தைச் சிவக்க சிவக்க வதக்கி எடுத்துத் தனியாக வைத்துக் கொள்ளவும். வாணலியில் இருக்கும் எண்ணெயோடு மேலும் 2 டீஸ்பூன் எண்ணெய் விட்டு கடுகு, உளுத்தம்பருப்பு, மிளகாய் வற்றல், பச்சை மிளகாய், இந்த இந்த வரிசையில் தாளித்து எல்லா துருவல்களும் முட்டை கோஸும் சேர்த்துக் கொஞ்சம் ஜலம் தெளித்து அரை வேக்காடாக வதக்கவும். தேவையான உப்பு போட்டுக் கலக்கவும்.

· பிரஷர் குக்கரில் இருக்கும் வட்டமான அலுமினியப் பாத்திரத்தில் (பருப்பு வைப்பது) எண்ணெய் தடவி அரைப் பாத்திரம் வரை இட்டிலி மாவை ஊற்றவும். அதன் மேலே வதக்கிய கறியை உதிர்த்தாற்போலத் தூவவும். கொத்துமல்லியைப் பொடியாக நறுக்கி (1 டேபிள் ஸ்பூன் அளவு) மேலே தூவவும். குக்கரில் வைத்து 15 நிமிஷம் இட்டிலி போல் வேக விடவும். மேலே வெயிட் போட வேண்டாம். வெந்த பிறகு எடுத்து 5 நிமிஷம் கழித்து கத்தியால் ஓரமாக நகர்த்திவிட்டு ஒரு தட்டில் கவிழ்த்து இன்னொரு தட்டில் நிமிர்த்தி விடவும். மேலே வறுத்த வெங்காயத்தைத் தூவிப் பரிமாறவும்.

அரைத்த மாவு, கறி, பாத்திரத்தின் அளவைப் பொறுத்து ஒன்று அல்லது இரண்டு பீஸா ஆகும். அதற்குத் தகுந்தபடி இரண்டு பாகமாகப் பிரித்துக் கொண்டு செய்யவும். ஒரே பாத்திரமாக இருந்தால் தட்டில் எடுக்காமல் பாத்திரத்திலேயே வெங்காயத்தைத் தூவிவிடவும். கேக் மாதிரி வில்லையாக வெட்டிப் பரிமாறவும். இதற்குத் தொட்டுக்கொள்ள தேங்காய் சட்னி, சாம்பார், டொமோட்டோ ஸாஸ் ஏற்றதாக இருக்கும்.

**—திருமதி ரமணி நாராயணசுவாமி (மாடியில்) 4வது பிளாக் 99, ராஜாஜி நகர், பங்களூர்-10**

# சீர் புடவை

**தேவையான பொருட்கள் :**

உடைத்த கடலை அரை கிலோ

சர்க்கரை அரை கிலோ

டால்டா அல்லது நெய் 400 கிராம்

ஏலப் பொடி 5 கிராம்

வேண்டுமானால் ப. கற்பூரம் சிறிது சேர்த்துக் கொள்ளலாம்.

**அலங்கரிக்க:**

செர்ரி பழம் ஒரு சின்ன பாக்கெட் அல்லது பாப்பின்ஸ் 2 பாக்கெட் அல்லது ஒரு பைசா மிட்டாய் ஒரு ரூபாய்க்கு. சில்வர் பால்ஸ் (ஜிண்டான் மாத்திரை போல் இருக்கும்—டவுனில் எங்கும் கிடைக்கும்.) சின்ன பாட்டில். தேங்காய்க் கொப்பரைத் துருவல் — எல்லா கலரும் அடங்கியது ஒரு பாக்கெட்.



**செய்முறை:**

உடைத்த கடலையை நைஸாகப் பொடித்துக் கொள்ளவும். சர்க்கரையையும் நைஸாக பொடிக்கவும். இரண்டையும் கலந்து ஏலப்பொடி, ப. கர்ப்பூரம் சேர்த்து நன்கு கலந்து. டால்டா அல்லது நெய்யை லேசாகச் சுட வைத்து இறக்கிக் கலவையில் கொஞ்சம் கொஞ்சமாக விட்டுக் கிளற வேண்டும். அடுப்பில் வைக்க வேண்டாம். கொஞ்சம் தளர கேக் பதம் வந்ததும் புடவை அட்டைப் பெட்டியில் கிளாஸ் பேப்பர் அல்லது பட்டர் பேப்பரில் நெய் தடவி அதில் இந்தக் கலவையைக் கொட்டிவிடவும். ஐந்து நிமிடம் கழித்து நமக்குத் தேவையான புடவை டிஸைனில் பார்டர், உடல் எல்லாம் அலங்கரிக்க வேண்டும். பார்டர் எல்லாம் கொப்பரைத் தேங்காய் பூவால் அலங்கரிக்கவும். உடல் எல்லாம் பாப்பின்ஸ் அல்லது செர்ரி பழம் அல்லது ஒரு பைசா மிட்டாய் வைத்து அலங்காரம் பண்ணவும். இப்பொழுது புடவை ரெடி. யாரும் அணியலாம்—அதாவது சுவைக்கலாம். பார்க்க ரொம்ப அழகாக இருக்கும். இதைப் பெரும்பாலும் கல்யாணங்களில், நவராத்திரியில், வீட்டில் ஏதாவது விசேஷ நிகழ்ச்சிகளுக்குத் தயாரிக்கலாம்.

**சீர் புடவை தோற்றம்**

புடவை நன்கு செட் ஆன பின் — ஆறிய பின் — அட்டைப் பெட்டியை மூடி வைக்கலாம். புடவைப் பாக்கெட் மாதிரியே இருக்கும்.

**-ஜனனி முரளி**

## வேடிக்கையாக இல்லை..?

எங்களது ஊரில் ஒரு மூதாட்டி மூட்டைப்பூச்சி தொல்லை ஒழிய, எளிய முறை ஒன்று கூறுகிறார்.

நான்கு தாள்களில் 16 ஊர்களின் பெயர்களை எழுதி, மேற்படி தாள்களைக் கிழித்து வீட்டின் மூலை முடுக்குகளில் போட்டுவிட்டால் மூட்டைப் பூச்சிகள் ஒழிந்துவிடும் என்கிறார்! அவர் இது மாதிரிச் செய்து மூட்டைப் பூச்சி தொல்லை இல்லை யென்கிறார். இது உண்மையாக இருக்குமா?

-ஸ்ரீ. இராஜேந்திரன்





# சிக்கனமாக சீராக...

## சோப் பவுடர் தயாரிக்கும் முறை

### தேவையான பொருட்கள்

டெட் பவுடர்
(கடையில் விற்பது அல்ல) அரை கிலோ
வாஷிங் சோடா அரை கிலோ
டி. எஸ். பி. 250 கிராம்
ராணிபால் அல்லது டிஹேபால் இரண்டு டீஸ்பூன்
ராபின் புளூ பௌடர் இரண்டு டீஸ்பூன்
சோப் திரவம் இதில் அரை பாட்டில் (1-3 விம்முக்கு எடுத்துக்கொள்ளவும்.)
வேண்டுமானால் செண்ட் ஒன்று அல்லது இரண்டு துளி கடைசியில் விட்டுக் கொள்ளவும்

### செய்முறை:

ரவை சல்லடையில் வாஷிங் சோடா, டி. எஸ். பி.யை சலிக்கவும். டெட் பவுடரையும் சலிக்கவும். ராணிப்பால் அல்லது டிஹேபாலைக் கலக்கவும். புளூ பவுடரையும் கலக்கவும். நன்கு கலந்து சலிக்கவும். பிறகு இந்தக் கலவை நடுவில் சிறிது சிறிதாக சோப் திரவத்தை விட்டு, கையால் நன்கு கலக்கவும். அதை பாட்டில் சோப் திரவத்தில் 1-3 பாகம் விம்முக்கு எடுத்தது போக மீதியை முழுவதும் சிறிது சிறிதாகக் கலந்து விடவும். இந்தக் கலவையைக் கட்டி இல்லாமல் உதிர்த்து, சலிக்கவும். வேண்டுமானால் செண்ட் சேர்க்கவும். இதை ஒரு டிரேயில் பிளாஸ்டிக் பேப்பர் போட்டு அதில் கொட்டி நிழல் காய்ச்சலாய் காயவைக்கவும். இரண்டு நாட்கள் கழித்து டப்பாவில் வைத்துக் கொள்ளவும். சோப் பவுடர் உபயோகத்துக்கு ரெடி.

இதையும் வெய்யிலில் காய வைக்கக் கூடாது. நியூஸ் பேப்பரில் கொட்டிப் பரப்பக் கூடாது. சோப் திரவத்தை நேராகக் கையில் கொட்டிக் கொள்ளக் கூடாது. வீட்டிலேயே இதைப் பண்ணுவதால் செலவும் குறைவு. நாமே பண்ணுகிறோம் என்கிற சந்தோஷம்.

### பாத்திரம் துலக்கும் சோப் பவுடர் தயாரிக்கும் முறை

**தேவையான பொருட்கள்**

வாஷிங் சோடா அரை கிலோ
டி. எஸ். பி.. 250 கிராம்
விம் பௌடர் (கடையில் விற்பது ஒரு கிலோ
டெட் பவுடர் (கடையில் விற்பது அல்ல) இரண்டு கப்
சோப் திரவம்(அரை பாட்டில்) 1-3பாகம்

இந்தச் சாமான்கள் எல்லாம் டவுனில் நைனியப்பன் நாய்க்கன் தெருவில் எல்லா கெமிகல்ஸ் ஷாப்பிலும் கிடைக்கும்.

**செய்முறை:**

வாஷிங் சோடா, விம் பவுடர் இரண்டையும் சலிக்கவும். டெட் பவுடரையும் சலிக்கவும். இதற்கு என்று தனியாய் ரவை சல்லடை வைத்துக் கொள்ளவும். பிறகு டி. எஸ். பி.யை சலிக்கவும். எல்லாவற்றையும் ஒன்ருகக் கலக்கவும். இப்பொழுது சிறிது சிறிதாக சோப் திரவத்தை ஊற்றிக் கலக்கவும். சோப் திரவத்தை கையில் ஊற்றிக் கொள்ளக் கூடாது. விம் கலவையின் நடுவில் ஊற்றி, பிறகு கலக்க வேண்டும். எல்லாவற்றையும் கட்டி இல்லாமல் கலந்துவிட்டு, ஒரு டிரேயில் பிளாஸ்டிக் பேப்பர் போட்டு அதில் இந்தக் கலவையைக் கொட்டி, நிழல் காய்ச்சலாய் ஒருநாள் காயவைக்க வேண்டும். பிறகு எடுத்து டப்பாவில் வைத்து உபயோகப் படுத்தலாம். சோப் பவுடர் தயார்.

கெமிகல் உபயோகப்படுத்தும்போது ஜாக்கிரதையாக இருக்கவும். குழந்தைகளை அருகில் வைத்துக்கொண்டு பண்ணக் கூடாது. வெய்யிலில் காயவைக்கக் கூடாது. நியூஸ் பேப்பரில் போடக் கூடாது. பிளாஸ்டிக் பேப்பர் தான் உபயோகிக்க வேண்டும்.

—ஜனனி முரளி

# ..நாமே தயாரிக்கலாமே!





"ஏண்டீ இப்படிக் கத்தறீங்க? எப்பப் பாரு சண்டைதானா? லீவு நான் வந்தாலே எனக்குத் தலைவலிதான்!"

"அம்மா, அம்மா! இந்த டேப் ரிகார்டிலே என்னம்மா டேப் பண்ணி வச்சிருக்கே, எனக்கும் போட்டுக் காட்டும்மா!"





"ஏய் கல்யாணி, மாமா வேஷ்டிலே கரப்பானை விட்டிருக்கேன். இன்னும் கொஞ்ச நேரத்திலே பாரேன்... ஹி... ஹி... ஹி..."

"நீங்க போடற சத்தம் போறாதுன்னு பாட்டு வேறையா! போடறேன், கேளுங்க பாத்தீங்களா? உங்க கத்தல் எவ்வளவு நாராசமா இருக்குன்னு!"



புகைப் படங்கள் : பால்ராஜ்



"அப்பப்பா, லூட்டி தாங்க முடியலை. இதுங்க கத்தறதையெல்லாம், இதுங்களுக்குத் தெரியாம டேப் பண்ணுவோம்..."

"அப்பாடா! நல்ல வேளை, அவங்க கத்தலை அவங்களே கேட்டுத் திருந்திட்டாங்க!"



# FOR TOTAL RELIABILITY IN HIGH TENSILE FASTENERS:

# 'TVS'





Yes, for years, the name 'TVS' has been synonymous with total reliability in quality high tensile bolts, screws and nuts.

Precision engineered, cold forged and heat treated–the standard and special fasteners are manufactured to meet specific requirements.

What's more, Sundram Fasteners plans production to suit delivery commitments which will optimize your procurement efficiency. The result: a big saving in inventory costs.

Cars, trucks, buses, three-wheelers, scooters, motorcycles, tractors, industrial engines, tillers, diesel locomotives and earth-moving equipment are fitted with TVS fasteners as OE. They are also used in other non-automotive engineering applications.

'TVS' high tensile fasteners conform to Indian, ISO, American, British and DIN standards. Fasteners are also made to customers' specifications.

Available in diameters from 6 mm (¼") to 24 mm (1"), and in lengths from 12 mm (½") to 200 mm (8").

Sundram Fasteners—a single source for all your standard and critical special fasteners needs.

**Where fastening is critical 'TVS' the first choice**




Manufactured by:
**Sundram Fasteners Limited**
PADI, MADRAS 600 050

PHONE: 632701 GRAMS: SUNLOC
TELEX: 041-7549 FASN IN

SAA/SFL/3115

Regd. No. TN MS (S) 231

# அழகின் பிரதிபலிப்பு இந்து

SAA/HPF/2764

INDU 120
PANCHRO
400 ASA/27 DIN

இந்து, ஒவ்வொரு 120 கறுப்பு-வெள்ளை பிலிம் ரோலிலும் உங்கள் அழகை பிரதிபலிக்கும் வகையில் 12 படங்களை அளிக்கின்றது. அருமையான பட காண்ட்ராஸ்ட். உடனே, நீங்கள் விரும்பிய அழகிய படங்களை எடுத்துத் தள்ளுங்கள்! இந்து மிக எளிதாகக் கிடைக்கின்றது.

உங்கள் புகைப்படங்கள் சிறப்பாக அமைய இந்து ப்ரோமைட் பேப்பரை உபயோகியுங்கள். தொழில்முறை போட்டோகிராபர்கள் இந்துவைத்தான் உபயோகிக்கின்றனர். உங்கள் விருப்பப் படி படங்கள் அமைய இந்து பேப்பர் பலவித கிரேடுகளில் கிடைக்கின்றது.






**இந்து என்றால் பிலிம்·
போட்டோ·சினி·எக்ஸ்ரே.**

இந்துஸ்தான் போட்டோ பிலிம்ஸ்
மான்யூபாக்சரிங் கோ. லிமிடெட்
(ஒரு இந்திய அரசு நிறுவனம்)
இந்துநகர், உதகமண்டலம் 643 005